# ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்குப் (Ph.D.)
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

அ.உமாராணி
பதிவு எண்: *0975/2014-2015*

நெறியாளர்

முனைவர் வி.கிளாட்சன்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை




## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் A+(CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது.)

காரைக்குடி – *630 003.*

அக்டோபர் - *2019*

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் வி.கிளாட்சன்,** எம்.ஏ., எம்.பில்., எம்.எட்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை - 630 561.

**'ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்'** என்ற தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக **அ.உமாராணி** அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வேடு, சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ் ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: சிவகங்கை　　　　　　　　　　நெறியாளர்
நாள்:

முதல்வர்

# ஆய்வாளர் உறுதிமொழி

**அ.உமாராணி,**
***பதிவு எண்: 0975/2014-15***
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை - *630 561.*

**'ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்'** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ் ஆய்வேடு, என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் வி.கிளாட்சன்**
இணைப்பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை - *630 561.*

# நன்றியுரை

சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரியின் நிறுவனர் **மேதகு சண்முக மன்னர்** அவர்களுக்கு என் பணிவான நன்றியினைக் காணிக்கையாக்குகிறேன்.

**“ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்”** என்ற தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்தினருக்கு என் நன்றி உரித்தாகும்.

சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த கல்லூரியின் மேனாள் முதல்வர் **முனைவர் வீரப்பன்** அவர்களுக்கும் இன்றைய முதல்வர் முனைவர் **பா.ஹேமலதா** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

என் நெறியாளரும், சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையின் தலைவருமான **முனைவர் வி.கிளாட்சன்** அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றி.

ஆய்வுக் காலங்களில் ஏற்ற உதவிகளைச் செய்த எம் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் முனைவர் **கா.சந்தானலெட்சுமி**, முனைவர் **சு.விஸ்வநாதன்,** முனைவர் **ச.இராமமூர்த்தி**, முனைவர் **மு.சிதம்பரம்,** முனைவர் **து.ஸ்டாலின்**, முனைவர் **கரு.இராமச்சந்திரன்,** முனைவர் **இரா.தங்கமுனியாண்டி,** முனைவர் **ம.இராம மனோன்மணி**, பேரா. **வே.சதீஸ்,** முனைவர் **மா.முத்துராமன்**, முனைவர் **ஆ.பாண்டி**, பேரா. **இரா.புவனேஸ்வரி**, பேரா. **சு.கிருஷ்ணமூர்த்தி**, முனைவர் **க.சண்முகநாதன்,** பேரா. **ச.முத்துவேல்**, முனைவர் **ப.அழகு** ஆகியோர்க்குப் பெரிதும் நன்றியுடையேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உதவிய எம் கல்லூரி நூலகர் முனைவர் **அ.வாஞ்சிநாதன்** அவர்களுக்கும் தமிழ் உயர் ஆய்வுத்துறை நூலகப் பொறுப்பாசிரியர் முனைவர் **மு.சிதம்பரம்** அவர்களுக்கும் நூலக உதவியாளர் திருமதி **க. ஆனந்தி** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஆய்வுப் பொருள் தொடர்புடைய சமணசமய நூல்களைக் கொடுத்து அருளிய சென்னை ஜைன இளைஞர் மன்றத்தைச் சேர்ந்த திரு. **அனந்த விஜயன்,** பேரா. **கனகஅஜித தாஸ்,** திரு. **தன்யக்குமார்** ஆகியோர்க்கு என்றும் நன்றியுடையேன்.

சமண சமயம் தொடர்பான நூல்களையும், ஐஞ்சிறு காப்பியங்கள் தொடர்பான நூல்களையும் ஏற்ற காலங்களில் அளித்து ஊக்கப்படுத்திய எம் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் **இரா.தங்க முனியாண்டி** அவர்களுக்கு என் நன்றி உரித்தாகும்.

எம் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தின் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் திரு. **க.சோனைமுத்து,** திருமதி **இரா.பிரபாவதி,** செல்வி **ப.மெர்சி கீர்த்னா** ஆகியோர்க்கு என் நன்றி.

என் கல்வி வளர்ச்சியில் மகிழ்ந்து ஊக்கப்படுத்திவரும் என் தாயார் திருமதி **அ.சகுந்தலா,** தந்தையார் திரு. **ம.அழகர்சாமி,** என் கணவர் திரு. **ஜெ.சக்திவேல்** ஆகியோர்க்குப் பெரிதும் நன்றியுடையேன்

இவ் ஆய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சுச் செய்து கட்டமைத்துக் கொடுத்த மதுரை **'லேசர் பாய்ண்ட்'** நிறுவனத்தார்க்கும் என் நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ. | - | அடி |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| குறள் | - | திருக்குறள் |
| தொ. | - | தொகுதி |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல். |
| புறம் | - | புறநானூறு |
| மொ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர். |
| மு.நூ. | - | முன்னர்க் குறிப்பிடப்பட்ட நூல். |
| மேலது. | - | மேலே குறிப்பிடப்பட்டது. |

# பொருளடக்கம்

# முன்னுரை

## முன்னுரை

தமிழில், ஐஞ்சிறு காப்பியங்களாக சூளாமணி, நீலகேசி, யசோதரகாவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம் ஆகிய நூல்கள் கருதப்படுகின்றன. இவ்வைந்து நூல்களும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவையாகும். சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் தமிழர் வாழ்வியலுக்கும், பதினெண் கீழ்க்கணக்கு அறநூல்கள், ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் வெளிப்படுத்துகின்ற தமிழர் வாழ்வியலுக்கும் பல்வேறு வேறுபாடுகளைக் காணமுடிகிறது. சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கு இந்நூல்களில் மிகுந்து காணப்படுவதை வெளிப்படையாக அறியமுடிகிறது. சமணச் சான்றோர்கள் அறிவுறுத்திய வாழ்வியல் நெறிகள் அறநூல்களிலும் காப்பிய இலக்கியங்களிலும் மிகுந்து காணப்படுகின்றன. தமிழகத்தைப் பொறுத்தவரையில் தொல்காப்பியர் காலந்தொட்டே மகளிர்க்கென பல்வேறு வாழ்வியல் மரபுகள் வலியுறுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களிலும் இத்தகைய வாழ்வியல் நெறிமுறைகளைக் காணமுடிகிறது. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் இவற்றைக் காணமுடிகிறது. பதினெண் கீழ்க்கணக்கு அற நூல்களுள் சமணசமயம் சார்ந்த நீதி நூல்கள், மகளிர்க்குரிய ஒழுக்க நெறிகள் தனிப்பாடல்கள் வாயிலாக வலியுறுத்தின. சங்க இலக்கியங்களில் காணவியலாத மகளிர்க்கான வலியுறுத்தல்கள் இந்நூல்களுள் உள்ளன. சங்கம் மருவிய காலத்திற்குப் பின்னர் எழுந்த நூல்களாகவே ஐஞ்சிறு காப்பியங்களை இலக்கியவரலாற்று ஆசிரியர்களில் பலர் குறிப்பிட்டுள்ளனர். இந்நூல்களில் படைக்கப்பட்டுள்ள மகளிர் பாத்திரங்கள் வாயிலாக அக்கால மகளிர் வாழ்வியல் குறித்தும் மகளிர்க்கென வகுக்கப்பட்ட ஒழுக்க நெறிமுறைகள் குறித்தும் மகளிர்தம்

இல்லற வாழ்வு, துறவு வாழ்வு ஆகியனவற்றை அறிந்துகொள்ள முடிகிறது. சமணசமயக் கொள்கை, கோட்பாடுகளை வெளிப்படுத்தும் வகையில் மகளிர் பாத்திரங்கள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. சமயம் சார்ந்த பல்வேறு செய்திகளும் இக்காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. அவற்றை ஆய்ந்து வெளிப்படுத்தும் நோக்கில் இவ் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வுத் தலைப்பு

**''ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்''** என்பது மேற்கொள்ளவிருக்கும் இவ் ஆய்வேட்டின் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

மகளிர்க்கான வாழ்வியல் ஒழுக்கங்களைப் பெரும்பாலும் அனைத்துச் சமயங்களும் குறிப்பிட்டுள்ளன. பழந்தமிழகத்தைப் பொறுத்த வரையில் சமண, பௌத்த சமயங்கள் மகளிர் வாழ்வியல் நெறிமுறைகளைத் தெளிவுற வகுத்தளித்துள்ளன. ஆடவர் வாழ்க்கையில் மகளிர் பொருட்டு நிகழ்ந்த ஏற்றத் தாழ்வுகளை ஐம்பெருங்காப்பியங்களில் இடம்பெற்றுள்ள சில பெண் பாத்திரங்கள் வாயிலாக அறியமுடிகிறது. ஐஞ்சிறு காப்பியங்கள், அக்கால மன்னர் வாழ்வியலை அடிப்படையாக வைத்தே புனையப்பட்டுள்ளன. அரச குடும்பத்தைச் சார்ந்த மகளிர் வாழ்வியல் இக்காப்பியங்களில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. சமூக வாழ்வில் இடம்பெற்றுள்ள பிற மகளிர் வாழ்க்கை முறைகள் குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் மிகக் குறைந்த அளவிலேயே இடம்பெற்றுள்ளன. ஐஞ்சிறு காப்பியங்கள் வடமொழி நூல்களைத் தழுவி எழுதப்பெற்றவை. இருப்பினும் தமிழ்ப்பண்பாட்டு மரபுகளும் இந்நூல்களுள் இடம்பெற்றுள்ளன. மகளிரின் திருமணம் குறித்த செய்திகளும், அரசகுல மகளிரின் இயல்புகள் குறித்தும், வாழ்வியல் ஒழுக்கங்கள் குறித்தும், சமயம்சார்ந்த வழிபாட்டு

முறைகள், குறித்தும் ஐஞ்சிறுகாப்பியங்கள் புலப்படுத்தியுள்ளன. சமண நூலாசிரியர்களின் மகளிர் குறித்த சமயம் சார்ந்த கருத்துக்களையும் ஐஞ்சிறு காப்பிய மகளிர் பாத்திரங்களின் வாயிலாக அறியமுடிகிறது. எதிர்நிலைப் பாத்திரங்களாக அமைந்துள்ள மகளிரின் வாழ்க்கை முறைகளிலிருந்தும் பிறழ் நடத்தைகள் கொண்ட மகளிரின் வாழ்வியலிலிருந்தும் அக்காலச் சமூக வாழ்க்கையில் மகளிர் நிலை குறித்த செய்திகளை உய்த்தறியமுடிகிறது. ஐம்பெருங் காப்பியங்களில் இடம்பெறாத சில மகளிர் செயல்கள் ஐஞ்சிறு காப்பியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. சமண சமயக் கொள்கைகள் காப்பியங்களில் ஏற்ற இடங்களில் விளக்கப்பட்டுள்ளன. இக்காப்பியங்கள் புலப்படுத்தும் மகளிர் பாத்திரங்கள் வாயிலாக மகளிர் உளவியல்புகளையும், நடத்தை முறைகளையும் அறிந்திட முடிகிறது. இவை யாவற்றையும் தொகுத்தாய்வது இவ் ஆய்வின் நோக்கமாக அமைகிறது.

## ஆய்வின் கருதுகோள்

ஐஞ்சிறு காப்பியங்கள் சமணசமயத்தைச் சார்ந்தவை. இக்காப்பிய ஆசிரியர்கள் சமண சமயம் மீது கொண்டிருந்த பற்றை இந்நூல்களில் இடம்பெற்றுள்ள பல்வேறு பாத்திரங்கள் புலப்படுத்துகின்றன.

**ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள், சமண சமயக் கொள்கைகளை வெளிப்படுத்துதற்காகப் படைக்கப்பட்டுள்ளன** என்பதே இவ் ஆய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

ஐஞ்பெருங்காப்பியங்களுள் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள் குறித்த ஆய்வு நூல்கள் பெருமளவில் வெளிவந்துள்ளன. தமிழில் ஐஞ்சிறு காப்பியங்கள் குறித்த ஆய்வுகள் மிகக் குறைந்த அளவிலேயே மேற்கொள்ளப்பட்டுள்ளன. தமிழ்க் காப்பிய நூல்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களை ஆய்ந்த சரளா இராசகோபாலனின்

**காப்பிய மகளிர்** என்ற நூல் குறிப்பிடத்தக்கதாகும். அவரது, **சமயம் வளர்த்த மகளிர்** எனும் நூலில் மணிமேகலை, குண்டலகேசி ஆகிய மகளிர் பாத்திரங்கள் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

ஐஞ்சிறுகாப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள் அனைத்தையும் தொகுத்து முழுமையாக ஆய்ந்தறிப்பட்டுள்ளமையால் இவ்வாய்வானது முன்னைய ஆய்வுகளினின்று வேறுபடுகிறது.

**ஆய்வு எல்லை**

ஆய்வுப் பரப்பின் சுருக்கத்தைக் கருதியும், ஆய்வேட்டின் வரையறையைக் கருத்தில் கொண்டும் ஐஞ்சிறு காப்பியங்களை மட்டும் இவ் ஆய்வானது தனது எல்லையாகக் கொள்கிறது.

**முதன்மை ஆதாரங்கள்**

சூளாமணி, நீலகேசி, யசோதரகாவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம் ஆகிய ஐந்து நூல்களில் இடம்பெற்றுள்ள மகளிர் குறித்த செய்திகள், இவ் ஆய்விற்குரிய முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

சமண, பௌத்த சமயக் கோட்பாடுகளை விளக்கும் சமயம் சார்ந்த நூல்கள், தமிழ் இலக்கண நூல்கள், சங்க இலக்கியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு அற நூல்கள், காப்பியங்கள் குறித்த ஆய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், சமணசமயக் கொள்கைகளை விளக்கும் தமிழ் நூல்கள், அகராதிகள் முதலியன இவ் ஆய்விற்குரிய துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

மகளிர் வாழ்வியல் குறித்த செய்திகள் விளக்கமாக ஆராயப்படுவதால் இவ் ஆய்வில் விளக்கமுறைத் திறனாய்வு

அணுகுமுறையும், சமயக் கொள்கைகளோடு ஐஞ்சிறு காப்பியங்களின் கருத்துக்கள் ஒப்பிட்டு ஆய்ந்தறியப்படுவதால் ஒப்பீட்டு முறைத்திறனாய்வு அணுகுமுறையும் காப்பியக் கருத்துகள் பகுத்தும் வகுத்தும் ஆராயப்படுவதால் பகுப்புமுறைத் திறனாய்வு அணுகுமுறையும் இவ் ஆய்வில் பின்பற்றப்பட்டுள்ளன.

பாத்திரங்களின் பண்புகள் ஆராயப்பட்டுள்ளமையால் ஏற்ற இடங்களில் உளவியல் முறைத்திறனாய்வு அணுகுமுறையையும் இவ் ஆய்வு பின்பற்றியுள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ் ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது. அவை,

1. **சமணசமயமும் மகளிரும்**
2. **ஐஞ்சிறு காப்பியங்களும் மகளிர் பாத்திரங்களும்**
3. **மகளிரும் இல்வாழ்வும்**
4. **மகளிரும் துறவு வாழ்வும்**

என்பனவாகும்.

## இயல் விளக்கங்கள்

ஆய்வு அறிமுகத்தில், ஆய்வுத்தலைப்பு, ஆய்வின் நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் எல்லை, ஆய்விற்குரிய முதன்மை மற்றும் துணைமைச் சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வேட்டின் அமைப்பு, இயல் விளக்கங்கள், துணை நூற்பட்டியல் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**“சமணசமயமும் மகளிரும்”** என்ற முதல் இயலில், இந்தியத் தொன்மைச் சமயங்களுள் ஒன்றான சமணசமயத்தின் தோற்றம், பிரிவுகள், சமணசமயக் கொள்கைகள், அறங்கள், வாழ்வியல் முறைகள்,

இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் வேண்டிய பல்வேறு விரதங்கள், இல்லறத்தார் கடமைகள், தமிழகத்தில் சமணசமயத்தின் வளர்ச்சி, தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சமணசமயக் கருத்துகள், சமணசமயம் மகளிர்க்கென வகுத்துள்ள வாழ்வியல் ஒழுக்கங்கள் முதலியன இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**“ஐஞ்சிறு காப்பியங்களும் மகளிர் பாத்திரங்களும்”** எனப் பெயரிய இரண்டாம் இயலில் காப்பிய இலக்கியத்திற்கென வகுக்கப்பட்டுள்ள இலக்கணங்கள், தமிழில் ஐஞ்சிறு காப்பியங்களாகக் கருதப்படும் நூல்கள், அவை குறித்த இலக்கிய வரலாற்றாசிரியர் கருத்துகள், ஐஞ்சிறு காப்பியங்களின் கதைச்சுருக்கம், காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

‘‘**மகளிரும் இல்வாழ்வும்”** என்ற மூன்றாம் இயலில் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிரின் இல்லற வாழ்க்கை நெறிமுறைகள் விளக்கப்பட்டுள்ளன. ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள இல்வாழ் மகளிர்க்குரிய பண்புகள், இல்லறம் குறித்த சமண சமயக் கொள்கைகள், மகளிரின் திருமண முறைமைகள், கருவுற்ற மகளிர் நிலை, தாய்மார் பண்பு, குழந்தைப் பேற்றிற்கான மகளிர் வழிபாடு, மாமியார், மருமகள் உறவு நிலை, மகளிரின் தீய ஒழுக்கங்கள், பட்டத்தரசியர் பண்பாடு, மகளிரின் வழிபாட்டு முறைகள், மகளிர் விளையாடல்கள், ஒப்பனை மற்றும் அணிகலன்கள் குறித்த செய்திகள், மகளிர் பணிகள், கணவன் இறப்பிற்குப் பின் மகளிர் நிலை ஆகியன குறித்த செய்திகள் இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

**“மகளிரும் துறவு வாழ்வும்”** என்ற நான்காம் இயலில் மனித வாழ்க்கையில் வீடுபேறு குறித்த சமணசமயக் கருத்துகள், பெண் பிறப்புக் குறித்த சமணசமயக் கருத்துக்கள், ஐஞ்சிறு காப்பியங்களில்

இடம்பெற்றுள்ள துறவறம் குறித்த சமண, பௌத்தக் கொள்கைகள், ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர் மேற்கொண்ட விரதங்கள் குறித்த செய்திகள், அவ்வாறு துறவு மேற்கொண்டு வீடுபேறு அடைந்த மகளிர் பற்றிய செய்திகள் ஆகியன விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட மெய்ம்மைகள் ஆய்வேட்டின் இறுதியில் முடிவுரையாக இடம் பெற்றுள்ளன.

ஆய்விற்குத் துணை நின்ற நூல்கள் குறித்த விபரங்கள் ஆய்வேட்டின் இறுதியில் அகரவரிசைப்படி அளிக்கப்பட்டுள்ளன.

# இயல் -1

# சமணசமயமும் மகளிரும்

## 1.0. முன்னுரை

பண்டைய இந்திய நாட்டின் தொல்சமயங்களுள் சமணசமயமும் ஒன்றாகும். இந்தியக் கண்டத்தின் பரந்த நிலப்பரப்பில் சமணசமயம் மேலோங்கி நிலைத்து நின்ற நூற்றாண்டுகள் பலவாகும். இந்திய மன்னர்களுள் பலர் சமணசமயக் கொள்கைகளைப் பின்பற்றி அரசாட்சி புரிந்தமையை பண்டைய இந்திய வரலாற்றின் வாயிலாக அறியமுடிகிறது. தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே சமணசமயம் தழைத்தோங்கி இருந்துள்ளது. கி.மு. மூன்றாம் நூற்றாண்டை ஒட்டிய காலப்பரப்பில் தமிழகத்தில் சமணசமயம் வெகுவாகப் பரவியதென்பர். தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னர் ஏற்பட்ட வைதீக சமயத்தின் மறுமலர்ச்சியால் சமணசமயம் தன் செல்வாக்கை இழந்தது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தம் இறைப்பாடல்களாலும் சமயத் தொண்டுகளாலும் தமிழர்களை மீண்டும் வைதீகத்தின்பால் திருப்பினர். சமணசமயம் தமிழகத்தில் வீறுகொண்டு திகழ்ந்த காலங்களில் எண்ணற்ற தமிழ் இலக்கண, இலக்கியங்கள் தோன்றின. நீதிநூல்கள் பல்கிப் பெருகின. தனிமனித வாழ்வியலுக்கும் சமூக மேன்மைக்கும் தேவையான பல்வேறு அறங்கள் சமணசமய ஆகம நூல்களில் விரவிக்கிடக்கின்றன. இவற்றை அடியொற்றி எழுந்த தமிழ் நூல்களிலும் இக்கருத்துகள் நிறைந்துள்ளன. சமணசமயத்தின் தோற்றம், பிரிவுகள், சமணசமயக் கொள்கைகள், அறங்கள், வாழ்வியல் முறைகள், இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் வேண்டிய பல்வேறு ஒழுக்கங்கள் சமணசமயம் மகளிர்க்கென வகுத்துள்ள வாழ்வியல் முறைகள் முதலியன இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

## 1.1. சமணசமயத்தின் தோற்றம்

சமணசமயத்தின் தோற்றம் குறித்த தெளிவான வரலாற்றுக் குறிப்புகள் இல்லை. இருப்பினும் சமண சமயம் வேதகாலத்திற்கும் முந்தைய வரலாற்றினைக் கொண்டதென்பர். சமணசமயம் பற்றிய செய்திகளை வேத காலம் முதற்கொண்டே அறியமுடிகிறது. மனித வாழ்வியல் ஒழுக்கங்கள் பற்றிய குறிப்புகள் வேதங்களில் காணப்படுகின்றன. "பௌத்தத்திற்கு மூத்தது சமணம். அதன் தொன்மையை அளவிட்ட ஆராய்ச்சியாளர், முதல் இரண்டு தீர்த்தங்கரர்களாகிய ரிஷபதேவரும் அஜிதநாதரும் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரராகிய அரிஷ்டம நேமியும் ரிக்வேதத்திலேயே குறிப்பிடப் பட்டுள்ளதாலும் சமணசமயம் வேதகாலத்தின் தொடக்க எல்லையிலிருந்தே வந்துள்ளது என்று கருதுகின்றனர்"[1] என ஆர்.பார்த்தசாரதி சமணசமயத்தின் தொன்மை குறித்துக் குறிப்பிட்டுள்ளார். இராமாயண காலத்திற்கு முன்னரே பண்டைய இந்தியாவில் சமண சமயம் சிறப்புற்றுத் திகழ்ந்தமையை வரலாற்றாசிரியர்கள் உறுதி செய்துள்ளனர். மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகத்திற்கும் முந்தைய தொன்மைச் சிறப்பினைச் சமண சமயம் கொண்டதென்பதை, ''மொஹஞ்சதாரோ மற்றும் ஹரப்பாவில் காணப்படும் நாகரிகம் கிறித்துவுக்கு 3000 ஆண்டுகள் முற்பட்டதாகும். இவ்விடங்களிலிருந்து அகழ்ந்தெடுக்கப்பட்ட நிர்வாணமாக யோக நிலையில் நிற்கும் உருவங்களும், எருது சின்னம் பொறித்த முத்திரைகளும் ஜைன சமயம் சிந்துவெளி நாகரித்தின் அடிப்படையாகத் திகழ்ந்தது என அறிவிக்கின்றன''[2] எனும் கருத்து உறுதி செய்கிறது.

சமணசமயத் தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் முதலாமவரான 'ரிஷபதேவர்' சமணசமயத்தைத் தோற்றுவித்தவர் ஆவார். தீர்த்தங்கரர் என்பதற்கு வழிகாட்டி, வழியமைத்தவர் எனப் பொருளுரைப்பர். வாழ்வியல் ஒழுக்கங்கள், அறநெறிகள் ஆகியனவற்றை மக்களுக்கு விளக்குபவர்களைச்

சமண சமயத்தார் ‘தீர்த்தங்கரர்கள்’ என்ற பெயரில் அழைத்துப் போற்றினர். தீர்த்தங்கரர் என்பதற்கு தர்மத்தை உபதேசிப்பவர்கள், அறக்கருத்தை விளக்குபவர்கள் என்பது பொருளாகும். ரிஷபதேவருக்குப் பின்னர் பல்வேறு காலங்களில் தோன்றிய தீர்த்தங்கரர்கள் சமண சமயக் கொள்கைகளையும் அறங்களையும் மக்களிடம் கற்பித்தனர். ரிஷபதேவரை ‘ஆதிபகவன்’ என்ற பெயரில் சமணவியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

**“அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**

**பகவன் முதற்றே யுலகு”**[3]

என்ற குறட்பாவில் இடம்பெற்றுள்ள ஆதிபகவனே சமணத்தின் முதல் தீர்த்தங்கரர் என்பதை, “நமது தமிழ் மறையாகிய திருக்குறளில், கடவுள் வாழ்த்தின் முதற்குறள் ஆதிபகவனைப் பற்றிக் கூறுகின்றது. மற்ற ஒன்பது குறள்களிலும் ஆதிபகவனின் நற்பண்புகள் வருணிக்கப்பட்டுள்ளன. ஆதிபகவன் என்பதினாலேயே அவருக்குப் பின்னர் பலர் அவ்வாறே விளங்கினர் என்பது பெறப்படுகிறது”[4] என்பது சமண அறிஞர் வு.ளு. ஸ்ரீபால் அவர்களின் கருத்தாகும். விருஷபதேவரே ஆதிபகவன் என்பதை மயிலை சீனி.வேங்கடசாமி அவர்களும் குறிப்பிட்டுள்ளார். வரலாற்று ஆசிரியர்கள் சமண சமயத்தின் தோற்றம் குறித்து மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந்தமை குறித்து அவர், “சமண சமயக் கொள்கைகளை, விருஷப தேவர் (ஆதி பகவன்) முதல் உலகத்திலே பரப்பினார் என்றும், அவருக்குப் பின்னர் வந்த தீர்த்தங்கரர்களும் இந்த மதத்தைப் போதித்தார்கள் என்றும் சமணர் கூறுவர். ஆனால், வரலாற்றாசிரியர்கள் இதனை ஒப்புக் கொள்வதில்லை. இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரராகிய பார்சவநாதர் சமண மதத்தை உண்டாக்கினார் என்றும் அவருக்குப் பின்வந்த வர்த்தமான மகாவீரர் இந்த மதத்தைச் சீர்திருத்தியமைத்தார் என்றும் வரலாற்றாசிரியர்கள் கருதுகிறார்கள்”[5] என்று குறிப்பிடுகிறார்.

இக்கருத்துகளின் வழி சமண சமயத்தின் தோற்றம் குறித்து இலக்கிய மற்றும் வரலாற்று ஆசிரியர்களிடத்தே மாறுபட்ட கருத்து இருக்கிறதென்பதை அறியமுடிகிறது. எவ்வாறாயினும் சமணசமயம், தொன்மையான இந்தியப் பெருஞ்சமயங்களில் ஒன்றென்பது தெளிவாகிறது.

சமண சமயத்தின் இருபத்து நான்காவது தீர்த்தங்கரரான வர்த்தமான மகாவீரர் சமண சமயத்தின் கொள்கைகளை முழுமை செய்து அவற்றை மக்களிடையே பரப்பியவர் என்பதில் மாறுபட்ட கருத்து இல்லை. இவர் காலத்தில் சமணம் பண்டைய பாரத நாடு முழுவதும் பரவிச் செழித்திருந்தது. மகாவீரரின் காலம் சற்றொப்ப கி.மு.599 ஆம் ஆண்டு என வரலாற்றாசிரியர்கள் கணிக்கின்றனர். “அரச குலத்தில் பிறந்த மகாவீரர் 72 ஆண்டுகள் வாழ்ந்தார். முப்பதாம் வயதில் கடுந்தவம் மேற்கொண்டு நாற்பத்திரண்டாம் வயதில் ஞானம் பெற்றார். இவரொடு ஆறு ஆண்டு காலம் உடனுறைந்து வாழ்ந்தவர் மற்கலி கோசாலர் என்னும் ஆஜீவக நிறுவனர் ஆவார். தனது நாற்பத்து இரண்டாம் வயதில் கைவல்ய பதவியை அடைந்து நிர்வாணம் பெற்றுத் துன்பத்தையும் இன்பத்தையும் வென்றார். இந்த வெற்றியின் பயனாக அவர் ‘மகாவீரர்’ அல்லது ஜீனர் என அழைக்கப்பட்டார். அவரின் சீடர்கள், பற்றாளர்கள் ஜினர், ஜைனர் எனப்பட்டனர். அவர்களைத் துறவிகள் என்னும் பொருளில் ‘ஸ்ரமணர்’ என வடமொழியில் வழங்கினர். இவர்களே தமிழில் சமணர் அல்லது அமணர் எனப்பட்டனர்”[6] எனச் சொ.சாந்தலிங்கம் குறிப்பிடுகிறார்.

மகாவீரரின் அறவுரைகளைப் பின்பற்றிப் பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்தோர் ‘சமணர்’ எனப்பட்டனர். இச்சொல், ‘ஜினர்’ என்ற சொல்லிலிருந்து தோற்றம் பெற்றதாகும். ஜினர் என்பதற்கு ‘வெற்றியாளர்’ என்பது பொருளாகும். மகாவீரர், உலக மக்களை மகாவீரர் நால்வகையாகப் பிரித்து அறங்களைக் கற்பித்தார். ஆடவர், இல்லற ஆடவர், இல்லறப்

பெண்டிர், ஆண்துறவி, பெண்துறவி என்னும் நால்வகை மக்கள் கொண்ட அமைப்பை ஏற்படுத்தினார். வர்த்தமான மகாவீரர் பல்வேறு பெயர்களால் போற்றப்பட்டுள்ளார். “மகாவீரர் இளமையிலேயே மதி, ஸ்ருதி, அவதி ஆகிய நல்லறவு பெற்றவராகவும் ஆன்மஞானியாகவும் இருந்தார். ஆசை, வெகுளி, மயக்கம், முதலான ஆன்ம பகைமையை வென்று உயர்ந்தமையால் மகாவீரர் எனப் போற்றப்பட்டார். அறிவில் முழுமைபெற்ற ஞானியாக விளங்கியதால் அவர் ‘சன்மதி’ எனப் போற்றப்பட்டார். அவருக்கு வீரன், அதிவீரன், மகாவீரன், சன்மதி வர்த்தமானன் என் ஐந்து பெயர்கள் இருந்தன”[7] என ஜைன் சாஸ்திரி மகாவீரரின் பெருமைகள் குறித்துக் குறிப்பிடுகிறார்.

எளிய, ஆடம்பர வாழ்க்கையை வலியுறுத்திய சமணசமயக் கோட்பாடுகள் இந்தியா முழுமையும் வேகமாக வளர்ச்சி பெற்ற வரலாறு குறித்து “ஒரு மாற்றுச் சமயத்தை எதிர்பார்த்திருந்த அந்தணர்களுக்கு எதிரான வைசியர்கள், பௌத்த, சமண மதங்களை வெகுவாக வரவேற்று ஆதரித்தனர். சொத்துடைமை, செல்வக்குவிப்பு போன்றவற்றைச் சமண, பௌத்த மதங்கள் நிராகரித்தன. எளிய, தூய துறவு வாழ்க்கையை அம்மதங்கள் வலியுறுத்தின. எனவே இச்சமயங்கள் சாதாரண, அடித்தட்டு மக்களின் ஆதரவையும் வைசியர்களின் ஆதரவையும் அமோகமாகப் பெற்று வளர்ந்தன”[8] என்று சொ. சாந்தலிங்கம் குறிப்பிடுகிறார்.

### *1.2.சமண சமயத்தின் பிரிவுகள்*

தொடக்கத்தில் ஒன்றாக இருந்த சமண சமயம் காலப்போக்கில் பல்வேறு உட்பிரிவுகளைக் கொண்டதாக மாற்றம் பெற்றது. பத்திரபாகு முனிவர் வீடுபேற்றை அடைந்ததற்குப் பின்னரே சமணம் இருபெரும் பிரிவுகளாகப் பிரிவுற்றது. பத்திரபாகு முனிவரின் சீடர்கள், முனிவரின் அறிவுரைகளெனக் குறிப்பிட்ட ஏடுகளைச் சமணசமயத்தாரின் ஒருபிரிவினர்

தொகுத்து அக்கருத்துக்களை மக்களிடம் பரப்பினர். காலத்திற்கு ஏற்றவாறு சமணக் கொள்கைகளில் மாற்றம் செய்ய விரும்பிய பிற்காலச் சமணசமயச் சான்றோர்கள் தமது கருத்துகளை மக்களிடம் பரப்ப முயன்றனர். இதன் விளைவாக சமணம் பிளவுபட்டது.

1. **திகம்பர சமணம்**
2. **சுவேதாம்பர சமணம்**
3. **ஸ்தானகவாசி சமணம்**

அவற்றுள் என்னும் மூன்று பிரிவுகள் குறிப்பிடத்தக்கன.

### 1.2.1.திகம்பர சமணம்

'திகம்பரம்' என்ற சொல்லை, 'திக்அம்பரம்' எனப் பிரித்துப் பொருளுரைப்பர். 'திக்' என்பது திசைகளைக் குறிக்கும். அம்பரம் என்பதற்கு ஆடை என்பது பொருளாகும். அதாவது திசைகளையே ஆடையாக உடுத்தியவர் என்பது இச்சொல்லிற்குப் பொருளாகும். இச்சமயத்தைச் சார்ந்த துறவிகளும் ஆடைகளை அணிவதில்லை.

மகாவீரர் ஆடையற்ற தோற்றத்துடன் விளங்கியே பல்வேறு போதனைகளை உலகிற்கு வழங்கினார். அவரைப் பின்பற்றி ஆடையின்றித் திகழ்ந்தவர்கள் திகம்பரர் எனப்பட்டனர். இப்பிரிவு கி.மு. முதலாம் நூற்றாண்டில் ஏற்பட்டதாக மு.துரைசாமி குறிப்பிடுகிறார்.[9]

ஆடையற்ற தோற்றமே மனிதனின் உண்மையான தோற்றம். ஆடையழகு காமத்தைத் தோற்றுவிக்கும் என்பது திகம்பரர்களின் கொள்கையாக இருந்தது. ஆடையின்றிப் பிறந்த மனிதன் அவ்வாறே தன் வாழ்வினைத் தொடர வேண்டும் என்று திகம்பரர்கள் கற்பித்தனர். "ஆடையற்ற நிருவாண உருவம் இயற்கையானது. இயற்கை கொடுத்த மனித உருவம் ஆதம் அப்பா போன்ற மற்ற மத குருக்களும் கூட இதே உருவத்தில் இருந்தனர். திசைகளே அவர்களுக்கு ஆடையாக இருந்தது.

மனிதனின் உயர்வான தோற்றம் நிருவாணமே ஆகும். இதில் நாகரீகமின்மையும் சிறுபிள்ளைத் தனமும் இல்லை"[10] என விவர்த்தன சாகர முனிவர் திகம்பர்களின் ஆடையற்ற தோற்றத்திற்கான காரணத்தை விளக்குகிறார். மேலும், "மனிதன் தன்னுடைய தீயசெயல்களையும் ஒழுங்கீனத்தையும் ஆடைகளைக் கொண்டு மூடி மறைத்துக் கொள்கிறான். தீய குணங்களையும் தீயசெயல்களையும் மூடி மறைக்க அவனுக்கு ஆடை தேவைப்படுகிறது. மனதில் பல விகார எண்ணங்களைக் கொள்கிறான் இவைகள் திகம்பர முனிவர்களிடம் இருப்பதில்லை"[11] எனக் குறிப்பிடுவதிலிருந்து ஆடைகள் மனிதக் குற்றங்களை மறைப்பதற்கு உதவுகின்றன எனும் கருத்தைக் கொண்டவர்களாகத் திகம்பர சமண சமயத்தார் விளங்கியமையை எடுத்துக்காட்டுகிறது.

பெண்களுக்கு சமகாலப் பிறப்பில் வீடுபேறு இல்லை என்பது திகம்பர சமணசமயத்தார் கொண்டிருந்த கொள்கைகளுள் முதன்மையானதாகும். பெண்கள் தவம் புரிந்து ஆண் பிறவி எடுத்த பின்னர், மறுபிறவியில் அவர்களுக்கு வீடுபேறு கிட்டும் எனத் திகம்பர சமணம் குறிப்பிடுகிறது. தொல்காப்பிய உரையாசிரியரான இளம்பூரணர் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் முதல் நூற்பாவிற்கான தமது உரையில், "னகரம் வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை உணர்த்துதற் சிறப்பான் பின் வைக்கப்பட்டது"[12] எனக் குறிப்பிடுவது கருதத்தக்கது.

சமணசமயம், தர்மத் தியானம், சுக்லத் தியானம் என்னும் இரண்டு வகையான பக்தி நெறி குறித்துக் குறிப்பிடுகிறது. 'தர்மத் தியானம்' என்பது குறைந்த அளவில் பக்தி உடையவர்களை தர்மத் தியானத்தார் என்றும், நிறைந்த பக்தி உடையோரை சுக்லத் தியானம் உடையவர் என்றும் குறிப்பிடுகிறது. சுக்லத் தியானத்திற்கு உரியவராக ஆண்களையே திகம்பர சமணம் குறிப்பிடுகிறது. மாறாக பெண்கள் தம் முயற்சியால் தர்மத்

தியானத்தை அடைந்திட இயலும் என்பதை, “பெண்களுக்கு இந்தப் பிறவியில் (பெண் பரியாயத்தில்) முக்தி கிடைக்காது. எனவே சுக்லத் தியானம் ஏற்பட முடியாது என்றாலும் நிராசை அடைய வேண்டியது இல்லை. தர்ம யோகத்தைப் பெண்களும் அடைய முடியும். பல ஆர்யிகாக்கள் மற்றும் சிராவிகிகளும் ஸ்ரீபகவான் விருஷபதேவரின் உபதேசத்தை இந்த தர்மயோகத்தை ஏற்று இருக்கிறார்கள். இந்த தர்ம யோகத்தினால் பெண் பரியாயம் நாசம் அடையும். நிச்சயத்தில் தேவகதி கிடைக்கும். முறையாக முக்தியும் கிடைக்க ஏதுவாகிறது. இது ஜிநேந்தரிரரின் வாக்கு”[13] என்று ஜைன தத்துவம் குறிப்பிடுகிறது. பெண்களால் மிகக் குறைந்த பக்தி ஞானத்தையே பெற இயலும் என்பது திகம்பர சமணசமயத்தார் கொண்டிருந்த கொள்கையாக உள்ளது. பெண்கள் ஜைனமுனிவர்களின் உபதேசங்களை அறிந்து ஆர்யிகாக்களாக மாறிப் பெண்பிறப்பை நாசம் செய்த பின்னரே அவர்களுக்கு முக்தி கிட்டும் என்ற கருத்தை இதன்வழி அறியமுடிகிறது. சம்சார துக்கங்களை அனுபவித்துக் கொண்டு பிறவித்துன்பத்தில் உழல்வோர் ஒருபோதும் முக்தி அடைய இயலாது. உடலையும் வயிற்றையும வருத்தி கடுந்தவம் புரிந்த முனிவர்கள் மட்டுமே சுக்லத் தியானத்தை அடைய இயலும். “பெண்களுக்கு இந்த தியானம் கைவராது. இல்லறத்தார்க்கும் கிட்டாது. இவ்வாறே சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. சுக்கிலத் தியானம் பெண்களுக்கும் இல்லறத்தார்க்கும் கிடைக்காது.”[14] என ஜைன தத்துவம் மகளிர் முக்தி அடைதல் குறித்துக் குறிப்பிடுகிறது.

இயற்கை இன்பத்தை துறத்தலும் திகம்பர சமணசமயத்தின் முக்கியக் கோட்பாடுகளுள் ஒன்றாகும்.

திருஞான சம்பந்தர் தம் தேவாரப் பாடல்களில் பத்தாவது பாடல்தோறும் சமண, பௌத்தக் கொள்கைகளைப் பழித்துரைத்தும்

சமணர்களின் செயல்கள் பலவற்றைக் கடிந்துரைத்தும் பாடல்கள் புனைந்துள்ளார். சமண முனிவர்களின் ஆடையற்ற தோற்றம் குறித்து,

**''குறங்காட்டு நால்விரலிற் கோவணத்துக் கோலோவிப் போய்**

**அறங் காட்டும் சமணரும் சாக்கியரும்''**[15]

**''ஆடை தவிர்த் தறங்காட்டும் அவர்கள்''**[16]

எனத் திருஞான சம்பந்தர் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். திருஞான சம்பந்தர் திகம்பர சமண சமயத்தாரின் செயல்களைக் கடிந்துரைத்தே தம் பாடல்களில் கருத்துரைத்துள்ளார் என்பது திரு.வி.கலியாணசுந்தரனாரின் கருத்தாகும். "திருஞானசம்பந்தர் ஜைந சமயத்தை அறவே தொலைக்க முயன்றார் என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. இதைப் புராண உலகம் ஏற்கும் ஆராய்ச்சி உலகம் ஏற்றல் அரிது. திருஞானசம்பந்தர் ஜைநத்தின் வேரைக்கல்ல முயன்றார் என்பது பெறப்படவில்லை. அவர் திகம்பர ஜைநத்தை மறுத்துச் சுவேதாம்பர ஜைநத்திற்கு ஆக்கந்தேடினார் என்பது பெறப்படுகிறது."[17] என்று அவர் குறிப்பிடுவதிலிருந்து மேற்சுட்டிய கருத்தை அறியமுடிகிறது.

ஆடையின்றித் திகழ்ந்த திகம்பரசமணர்களின் தோற்றம் சமண சமயத்தைப் பிற சமயத்தார் பழிப்பதற்குப் பெரிதும் இடனாயிற்று. திகம்பர சமணர்கள், 'குண்டர்' என்ற பெயரிலும் அழைக்கப்பட்டனர். தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், "சம்பந்தர் சமணர்கள் அனைவரையும் பழிக்கவில்லை. அவர்களில் துறவறம் பூண்ட ஒரு சாராரையே பழி தூற்றுகிறார். அத்துறவியருள்ளும் வெள்ளை உடுத்த சுவேதாம்பரர், உடையிலாது திரிந்த திகம்பரர் என்ற இருவகையினரில் பின்னவரையே இகழ்ந்துரைக்கின்றார்."[18] என்று திகம்பர சமணத்தாரின் ஒழுக்கம் குறித்துத் திருஞானசம்பந்தர் கொண்டிருந்த எண்ணத்தை விளக்குகிறார்.

ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய மணிமேகலையில் திகம்பர சமணசமயத்தார்களின் தோற்றம் குறித்தும் அவர்தம் கோட்பாடுகள் குறித்துச் சில செய்திகள் இடம்பெற்றுள்ளன. திகம்பர சமணர்களின் ஆடையற்ற தோற்றம் குறித்து,

**"சிமிலிக் கரண்டையன் நுழைகோற் பிரம்பினன்**
**தவலருஞ் சிறப்பின் அராந்தா ணத்துளோன்**
**நாணமும் உடையும் நன்கனம் நீத்துக்**
**காணா உயிர்க்குங் கையற் றேங்கி**
**உண்ணா நோன்போ டுயவ லியானையின்**
**மண்ணா மேனியன் வருவோன்"**[19]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்கள் மேற்கொண்டொழுகும் உண்ணா நோன்பு குறித்தும் சீத்தலைச் சாத்தனார் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது.

### *1.2.2.* சுவேதாம்பர சமணம்

உலக இன்பங்களைத் துய்த்து ஏற்ற காலத்தில் வீடுபேற்றை அடைந்து மனித வாழ்வை விடுத்து உய்ந்திட வேண்டும் என்பது சுவேதாம்பர சமணத்தாரின் கொள்கைகளுள் முதன்மையானதாகும். "சுவேதாம்பரம் என்பதற்கு வெண்ணிற ஆடை என்பது பொருள்"[20] மகளிரிக்கு வீடுபேறில்லை என்ற திகம்பரசமணத்தாரின் கொள்கைகளுக்கு உடன்படாதது சுவேதாம்பர சமயமாகும். சுவேதாம்பர சமணத்தார் வீடுபேறு என்பதை, 'கேவலக்ஞானம்' எனக் குறிப்பிடுகின்றனர். சமண அறிஞரான சிம்ம சந்திர சாஸ்திரி, மகளிர் தமது சமகால வாழ்விலேயே வீடு பேறு அடைவதற்கு உரியவராவர் என்பதை வடமொழி வரலாற்று இலக்கியங்களிலிருந்து சான்று காட்டுகிறார். "மல்லிகுமாரி என்பவள் இல்லறத்தில் இருந்த போதே கேவலக் ஞானம் பெற்றாள். மருதேவி அம்மையார் யானை மீது ஏறிய போது அவருடைய மகன் அவளை

விட்டுப் பிரிந்தான் என்கிற செய்தி கேட்டவுடனே அவளுக்கு கேவலக் ஞானம் உண்டாயிற்று. வேறு மனிதனுடன் தொடர்பு கொண்டிருந்த தாசிக்குக் கேவலக் ஞானம் உண்டாயிற்று. இல்லறத்தார் மகளிர், வேறு கொள்கையைக் கடைபிடித்த சந்நியாசி ஃபகீர், புலித்தோல் தரித்தவன் ஆகியோர் முக்தி பெற்றனர் என்ற கருத்தும் கூட ஸ்வேதாம்பரரிடம் நிலவுகின்றன"[21] இக்கருத்திலிருந்து மகளிரும் சமகாலப் பிறப்பிலேயே வீடுபேறு அடைவதற்கு உரியவராவார் என்ற கருத்தினை அறியமுடிகிறது. சுவேதாம்பரரின் இறை வழிபாட்டு முறைகள் குறித்தும் ஒழுக்கங்கள் குறித்தும் மு.துரைசுவாமி, "சுவேதாம்பரர்கள் வெண்ணிற ஆடை உடுத்துவர். தாங்கள் வணங்கும் ஆலயங்களிலுள்ள தீர்த்தங்கரர் உருவங்களுக்கும் வெண்ணிற ஆடை அணிவர். புனித ஆகமங்களைப் பாமரர்கள் படிக்க அனுமதிப்பதில்லை. இவர்கள் பெண்களும் முறையாகத் துறவு மேற்கொண்டு முக்தியடையலாம் என்று அவர்களையும் தங்கள் சங்கத்தில் அனுமதித்தனர். இவர்கள் தீர்த்தங்கரர்களுடைய வாழ்க்கை வரலாற்றினைச் சரித்திரம் என்றனர்"[22] என்று குறிப்பிடுகிறார். இவர்தம் கூற்றிலிருந்து இவர்கள் கொண்டிருந்த கொள்கைகளை அறியமுடிகிறது.

சுவேதாம்பர சமணசமயத்தினை 'ஆசிவக சமயம்' என்ற பெயரிலும் வழங்குவர். ஆசிவக சமயத்தைத் திகம்பர சமணசமயத்தின் உட்பிரிவுகளுள் ஒன்றாகவும் வேறாகவும் அறிஞர் குறிப்பிடுவர். இச் சங்கத்தைத் தோற்றுவித்தவர் 'மற்கலி' அல்லது 'மக்கலி' எனும் பெயர்களால் போற்றப்படுகிறார். மகாவீரரின் காலத்தில் வாழ்ந்த மற்கலி, மகாவீரர் கருத்துகளில் மாறுபாடு கொண்டு உருவாக்கிய மதம் ஆசிவக மதமாகும். ஆசிவர்கள் திகம்பர சமணர்களிடமிருந்து வேறானவர்கள் என்பது மயிலை.சீனிவேங்கடசாமி அவர்களின் கருத்தாகும். இக்கருத்திற்கு அவர், "திகம்பர மொப்பினும் அநேகாந்தவாதிகளாகிய நிர்க்கந்த ஆசிவகனென்க"[23]

என்ற சிவஞான சித்தியார் எனும் சைவ சமயநூலின் உரையாசிரியரான ஞானப்பிரகாசர் கருத்தினை எடுத்துக் காட்டி மேலும். "உடையின்றி யிருத்தலும் குளியாமல் அழுக்குடம்புடன் இருத்தலும் இவைபோன்ற சில வெளிப்பார்வைக்குப் பொதுவாகத் தோன்றிய கொள்கைகளைக் கண்டு, இவ்விரு சமயத்தவரும் ஒரே சயத்தவரென்று தவறாகக் கருதப்பட்டிருக்கலாம்"[24] எனக் கருத்துரைத்துள்ளார்.

க.ப.அறவாணன், "சுவேதாம்பர சமயத்திற்கு ஆசிவகம் என்பதொரு பெயர். ஆசிவக மதத்தைச் சார்ந்த துறவிகள் இருக்குமிடங்கள் ஆசிவகப்பள்ளி என்று வழங்கப்பட்டன"[25] எனக் குறிப்பிட்டுள்ளார். ஆசிவக சமயம் குறித்தும் அச்சமயத் தீர்த்தங்கரர் குறித்தும் மணிமேகலை,

**"முன்னு வூழே பின்னுமுறு விப்பது**

**மற்கலி நூலின் வகையிது வென்ன"**[26]

எனக் குறிப்பிடுகிறது. இப்பாடலடிகளில் குறிப்பிட்டுள்ள மற்கலி என்பவர் ஆசிவக சமயத் தீர்த்தங்கரர்களுள் மூன்றாவது தீர்த்தங்கரர் என்பது ந.மு.வேங்டசாமி நாட்டாரின் கருத்தாகும். மேலும், "இவரைப் பின்பற்றினோர் ஆடையின்றி யம்மணமாயத் திரிந்தமையின் தம்மைப் பாதுகாத்துக் கோடற்கு மூங்கிற் கோலைக் கையிலேந்தித் திரிந்தமையின் இப்பெயர் பெற்றன ரென்றும், சிலர் "இடறி விழாதே" என்று அடிக்கடி இவர் தம் மாணவர்க்குரைத்தது பற்றி இவ்வாறு பெயர் பெற்றாரென்றும் கூறுப. "யாதும் செய்யாதே சும்மா இரு என்பது ஆசிவகர் குறிக்கோள்"[27] என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

ஆசிவக சமண சமயத்தைச் சார்ந்தவர்கள் பெரிய தாழிகளில் அமர்ந்து தவம் புரிவர் என்றும், வெறுமனேயும் தவம் புரிவர் என்பதையும் தக்கயாகப் பரணி,

"தாழியிற் பிணங்களுந் தலைப்படா வெறுந்தவப்

பாழியிற் பிணங்களும் துளப்பெழப் படுத்தியே"[28]

எனக் குறிப்பிடுகிறது.

### 1.2.3.ஸ்தானகவாசி சமணம்

உருவ வழிபாட்டில் உடன்பாடற்ற கொள்கையினை உடையவர்கள் ஸ்தானகவாசி சமணசமயத்தார் ஆவர். சுவேதாம்பர சமண சமயத்திலிருந்து பிரிந்த சமயமே ஸ்தானகவாசி சமண சமயம் ஆகும். ஜினாலயங்கள் எனப்படும் சமண ஆலயங்களில் உள்ள தீர்த்தங்கரர்களின் ஆகமநூல்களையும் தீர்த்தங்கரர்களையும் அருகக் கடவுளெனப் போற்றி வழிபாடு செய்யும் வழக்கம் இவர்களுக்கு உரியதாகும். உருவ வழிபாட்டை முற்றிலும் மறுத்த கொள்கையுடையவர்களாக ஸ்தானகவாசி சமணசமயத்தார் திகழ்ந்தனர். இவர்கள் வடஇந்தியாவில் அதிகமாகக் காணப்படுகின்றனர்.

### 1.3.சமண சமயக் கொள்கைகள்

சமணசமயத்தின் முப்பெரும் பிரிவுகளும் சமணத்தின் பல்வேறு அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றுபடுகின்றன. தனிமனிதன் தன் வாழ்வியலில் ஏற்பட்ட துன்பங்களைத் தானே தீர்த்து வெற்றி கொள்ள வேண்டும். அத்தகைய முயற்சியில் ஈடுபடும் தனிமனிதன் பல்வேறு வாழ்வியல் ஒழுக்கங்களைத் தன் வாழ்நாளில் கடைப்பிடித்து ஒழுகவேண்டுமெனச் சமணம் வலியுறுத்துகிறது. ஜினன் உரைத்த அறக்கருத்துகள் ஜைனநெறியாகக் கொள்ளப்படுகின்றன. வாழ்வியல் அடிப்படையில் மனிதர்களை இல்லறத்தார், துறவறத்தார் என இரண்டாகப் பிரித்து அவர்களுக்குரிய ஒழுக்கங்களைச் சமண சமயம் வரையறுத்துள்ளது.

### *1.3.1.இல்லறத்தார் நெறிமுறைகள்*

இல்லறத்தாரைச் 'சாவகர்' என்ற பெயரால் சமணர் குறிப்பிடுகின்றனர். இல்லறவாழ்க்கையில் பதினொரு நிலையில் தம் வாழ்க்கையை மேற்கொள்பவர்கள் பற்றிய செய்திகளை சமணசமயம் குறிப்பிட்டுள்ளது.

"**பதினோர் நிலைமையர் சாவகர் என்று**

**விதியின் உணரப் படும்**"[29]

என்று பதினொரு வகையான இல்லறத்தார் பற்றி அருங்கலச் செப்பு குறிப்பிடுகிறது. சாவகர்களின் பதினொரு வகையினர் பற்றியும் இந்நூல் விளக்கியுள்ளது.

1. தரீசனிகன் - நற்காட்சியில் உறுதி உடையவன்
2. விரதிகன் - நற்காட்சி, அணுவிரதம், குணவிரதம், சிட்சா விரம் உடையவன்
3. சாமாயிகன் - மேற்கொண்ட நியமங்களை முறை பிறழாமல், காலம் பிறழாமல் நிகழ்த்துபவன்
4. போசதுபவாசன் - மாதம் நான்கு முறை உண்ணா நோன்பு இருப்பவன்
5. அச்சிதன் - தாவரங்களின் உணவுப் பொருள்களைத் துறந்தவன்
6. இராத்திரி அபுக்தன் - இரவு உண்ணாதவன்
7. பிரமசாரி – உடம்பின் நிலைமையை உணர்ந்து காமத்தைத் துறந்தவன்
8. அநாரம்பன் - கொலைத் தொழில்களிலிருந்து மீண்டவன்
9. அபரிக்கிரகன் - தொடர்புகளையும், உரிமைகளையும் அறுத்தவன்
10. அனனுமதன் - இல்லற வாழ்க்கையில் பிடிப்பு இல்லாதவன்
11. உத்திட்டன் - வீடு, மனைவி, மக்களைத் துறந்து நோன்பு இருப்பவன்

என்போர் பதினொரு வகையினரான இல்லறத்தார் ஆவர். இத்தகைய பதினொரு இல்வாழ்க்கை நிலையினருக்கும் உரிய வாழ்வியல் நெறிமுறைகள், ஒழுக்கங்கள் வழிபாட்டு முறைகள் ஆகியனவற்றைச் சமணசமயக் கோட்பாடுகளை விளக்கும் நூல்கள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளன. இல்லறத்தார்க்குரிய மும்மணிகள்,

1. **நற்காட்சி**
2. **நல்லறிவு**
3. **நல்லொழுக்கம்**

என்பனவாகும். இவை 'இரத்னத்தரயம்' எனப்படுகின்றன.

### 1.3.1.1.நற்காட்சி

பொருள்களின் உண்மைத் தன்மையை அறிந்து அவற்றை நம்புதல் நற்காட்சி எனப்படும். அதாவது ஜீவன், அஜவன், ஊற்று, கட்டு, செறிப்பு, உதிர்ப்பு, வீடு ஆகிய ஏழு தத்துவங்களைப் பிழையற நம்புவதே நற்காட்சி எனப்படுகிறது.[30] நற்காட்சி உடையவர் மூவகை மூடங்களையும் எண்வகை மதங்களையும் நீக்கி வாழ்ந்திட வேண்டும் எனச் சமணம் குறிப்பிடுகிறது. உலகமூடம், தேவமூடம், பாஷண்டி மூடம் ஆகியன மும்மூடங்களாகும். மலையிலிருந்து விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ளுதல், தீப்பாய்தல், கடலில் வீழ்தல் ஆகியன உலகமூடங்களாகும். தற்கொலை உயிரை மாய்த்துக் கொள்ளுதல் கூடாதென்ற கருத்தைச் சமணம் வலியுறுத்துகிறது. ஆசை, கோபம் முதலிய பண்புகளைக் கொண்ட தெய்வங்களை வழிபடுதல் தேவ மூடம் எனப்படும். அருகப் பெருமான் வழங்கிய நற்கொள்கைகளை விலக்கித் தீய நெறிகளைக் கற்பிக்கும் போலித் துறவிகளை வணங்குதல் பாஷண்டி மூடமாகும்.

அறிவு, சிறப்பு, குலம், ஜாதி, பலம், வித்தை, தவம், சரீரம் ஆகியன குறித்து செருக்குக் கொள்வது எண்வகை மதங்களாகும். இம்மதங்களை நீக்கி இல்லறத்தார் வாழ்ந்திடுதல் வேண்டும். இவற்றைக் கடைப்பிடித்து

ஒழுகினால் இல்லறத்தார் வீடுபேற்றை அடையலாம் எனச் சமணம் குறிப்பிடுகிறது.

### 1.3.1.2.நல்லறிவு

உயிர்ப்பொருள்கள், உயிரற்றவை, தர்மம், அதர்மம், ஆகாயம், காலம் ஆகிய ஆறு பொருட்களின் தன்மையை உள்ளவாறு உணர்ந்து கொள்ளுதல் நல்லறிவு எனப்படும். நல்லறிவினை ஐம்புலன்களால் உணர்ந்தும், நூல்களைக் கற்றும், சான்றோர்களின் அறவுரைகளைக் கேட்டும் பெறுதல் வேண்டும்.

### 1.3.1.3.நல்லொழுக்கம்

தீவினைகள் தம்மை அடையாதவாறு தடுத்து. தமக்கேற்ற வினைகளைத் தடுத்து, தங்கிய வினைகளை நீக்கி அறவழியில் வாழ்வை மேற்கொள்வது நல்லொழுக்கம் ஆகும்.

### 1.3.2. இல்லறத்தார் விரதங்கள்

இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்பவர்கள் ஐவகையான அணுவிரதங்களையும் மூவகையான குணவிரதங்களையும் நான்கு சிட்சா விரதங்களையும் மேற்கொண்டு வாழ வேண்டும் என்று சமணம் வலியுறுத்துகிறது. இல்லறத்தார் இப்பன்னிரண்டு விரதங்களையும் தமது வாழ்வியல் ஒழுக்கங்களாகப் போற்றவேண்டும் எனச் சமணசமயம் குறிப்பிடுகிறது. இல்லறத்தார்க்குரிய விரதங்களை,

> **“அணுவதம் ஐந்தும் குணவதம் மூன்றும்**
>
> **உணர் நான்குசிக்கா வதம்”[31]**

என அருங்கலச்செப்பு குறிப்பிடுகிறது.

### *1.3.2.1.* அணுவிரதங்கள்

இல்லற வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகும் மனிதர்கள் கொலை, பொய், களவு, காமம், பொருட்பற்று ஆகியனவற்றிலிருந்து விடுபட வேண்டும் எனச் சமணசமயம் குறிப்பிடுகிறது. 'அணு' என்பதற்குச் சிறியது என்பது பொருளாகும். இல்லறத்தார் ஓரளவிற்கேனும் வாழ்வியல் ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காக அணுவிரதங்கள் அவர்களுக்கு வலியுறுத்தப்பட்டன. அவை,

1. **கொல்லாமை**
2. **பொய்யாமை**
3. **களவு செய்யாமை**
4. **காமமின்மை**
5. **பொருள் பற்றின்மை**

என்பனவாகும். இதனை அருங்கலச் செப்பு,

**"பெரிய கொலை பொய் களவொடு காமம்**
**பொருளை வரைதலோடு ஐந்து"**[32]

எனக் குறிப்பிட்டுள்ளது.

### *1.3.2.1.1.* கொல்லாமை

மனித உயிர்கள் மட்டுமின்றித் தாவரங்கள் விலங்குகள் ஆகியவற்றின் உயிர் வாழ்க்கைக்கும் தீங்கு செய்யாமலிருப்பது கொல்லாமை விரதம் ஆகும். எவ்வுயிரையும் கொல்லமாட்டேன் என்ற உறுதியினைக் கொண்டு அவ்வுறுதியின்பால் நிற்பது கொல்லாமையாகும். கொல்லாமை விரதம் குறித்து ஆசார்ய சுவாமி சமந்தபத்ரர், "செயல்கள் மூன்று வகையில் நிகழ முடியும். தானே செய்தல், பிறரைக் கொண்டு செய்தல், பிறர்செய்வதற்கு உடன்படுதல், இம்மூன்றையும் செய்தல், செய்வித்தல் உடன்படல் என்பர். ஏவாமை என்றதால் உடன்படுதலும் பெறப்பட்டது. இம்மூன்று வகையாலும்

இயங்கு உயிர்க்கொலையைத் தவிர்க்க வேண்டும்"[33] எனக் குறிப்பிட்டுள்ளார். இவர்கூற்றிலிருந்து எவ்வகையானும் இயங்கு உயிர்களின் வாழ்க்கைக்குத் தீங்கு செய்தல் கூடாதென்பதை இதன்வழி அறியமுடிகிறது. உறுப்புகளை அறுத்தல், துன்புறுத்தல், அடைத்து வைத்தல், பிணித்து வைத்தல், அதிகச் சுமை ஏற்றல் ஆகியனவும் கொல்லாமையின்பாற்படும் என்பதை அருங்கலச்செப்பு,

**"அறுத்தல் அலைத்தல் அடைத்தலோடு ஆர்த்தல்**

**இறப்பப் பொறை இறப்புஓர் ஐந்து"**[34]

எனக் குறிப்பிட்டுள்ளது.

### *1.3.2.1.2.* பொய்யாமை

'பொய்' என்பது உண்மையை மறைத்துப் பேசுதல் ஆகும். பொய்யுரைப்பவர்களுக்கு வெளிப்படையான அவமானங்கள் உண்டாகும். அவர்களுக்கு உலக நம்பிக்கை அற்றுப்போகும். பொய்யுரைப்பவர்கள் மறுபிறவியில் ஊமையர்களாகப் பிறப்பர். அவர்கள் நரகத்தில் உழன்று விலங்குகளாகப் பிறப்பர்[35] என்று சமணசமயம் குறிப்பிடுகிறது. பொய்யாமை விரதம் குறித்து. "சகல பொய்களையும் தியாகம் செய்வதே பொய்யாமை விரதம் ஆகும். அதனால் பொய் சொல்பவரின் உயிர் நஷ்டம் அடையும் மற்றும் சத்தியம் பேசவில்லை என்றால் உயிர் நஷ்டம் அடையும்"[36] என்று சமண சமயச் சான்றோர் குறிப்பிடுகின்றனர்.

### *1.3.2.1.3.* களவு செய்யாமை

பிறர் பொருளைக் கேட்காமல் எடுப்பது, வழியில் கிடக்கும் பொருளை எடுப்பது, ஒருவர் மறந்து விட்டுச் சென்ற பொருளை எடுப்பது ஆகிய செயல்களைக் களவு என்று சமண சமயச் சான்றோர்கள் விளக்கம் தருகின்றனர். களவு செய்பவர் எல்லாக் காலங்களிலும் அச்சவுணர்வுடனே இருப்பர். அவர்கள் மறு பிறப்பில் ஒட்டகம், எருது, குதிரை, கழுதையாகப்

பிறந்து நரகத் துன்பத்தை அடைவர் எனச் சமணக் கோட்பாடுகள் குறிப்பிடுகின்றன. சமணர்களின் கள்ளாமை நெறிகுறித்து மயிலை.சீனிவேங்கடசாமி, “எவ்வளவு அற்பமான பொருளாயிருந்தாலும், அதனை அதற்குரியவர் கொடுத்தாலன்றி, எடுத்துக்கொள்ள மனத்தினாலும் நினையாதிருத்தல்”[37] என விளக்குகிறார்.

### *1.3.2.1.4.* காமமின்மை

முறையற்ற உடல் இன்பத்தையே சமணம் ‘காமம்’ என்கிறது. தன் மனைவியைத் தவிர பிற பெண்களைத் தாய், உடன்பிறந்தார் ஆகியோர்க்குச் சமமாகப் போற்றவேண்டும். இதுவே காமமின்மை ஆகும். இவ்வாறே மகளிரும் தனக்குரிய கணவனோடு மட்டுமே இன்பம் துய்த்தல் வேண்டும் என்பதைச் சமணம் வலியுறுத்திக் குறிப்பிடுகிறது. “தான் மணந்து கொண்ட மங்கையரைத் தவிர்த்து மற்ற மங்கையருடன் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது. பிறரையும் வைத்துக் கொள்ளும்படித் தூண்டக்கூடாது. பிற பெண்களைச் சேருவதைக் கருதாது தான் விதிமுறைப்படி மணந்துகொண்ட பெண்ணோடு இன்பம் துய்த்தலும் பிற பெண்டிரைச் சகோதரிகளாகவும் தாயாகவும் கருதி இருத்தல் பிரம்மசர்ய விரதம் எனப்படும்”[38] என இவ்விரதம் குறித்துக் குறிப்பிடுவர்.

### *1.3.2.1.5.*பொருள் பற்றின்மை

ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்விற்குத் தேவையான செல்வங்களை மடடுமே துய்த்தல் வேண்டும். வாழ்க்கைத் தேவையை வரையறை செய்து கொண்டு, செல்வத்தின் நிலையின்மையை உணர்ந்து பொருள்பற்றின்றி வாழ்தல் இல்லறத்தார் கடமைகளுள் ஒன்றாகும்.

### *1.3.2.2.* **குணவிரதம்**

அணுவிரதத்தைக் கடைப்பிடித்து வெற்றிகொண்ட இல்லறச் சமணர்கள் அடுத்த நிலையில் உள்ள விரதங்களைப் பின்பற்ற வேண்டும். அவ்விரதம் குணவிரதம் எனப்படும். குணவிரதம் நான்கு வகைப்படும். அவை,

1. **திசை விரதம்**
2. **தேசவிரதம்**
3. **அனர்த்த தண்ட விரதம்**

என்பனவாகும்.

### *1.3.2.2.1.* **திசைவிரதம்**

பத்து திசைகள் எல்லை வரையறை செய்து போய்வருவது திசை விரதம் எனப்படும். திசைகளை வரையறுத்து வாழ்க்கையை மேற்கொள்வது என இவ்விரதத்திற்கு விளக்கம் அளிப்பர். வடமொழியில் இவ்விரதம் 'திக்விரதம்' எனப்படுகிறது. "திசைகள் மொத்தம் பத்தாகும். அவை கீழ், மேல், வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்று ஸ்ரீமத் அமிருத சந்திரசூரி ஆசாரியார் குறிப்பிடுகிறார். ஒருவர் தன்னுடைய செயல்பாடுகளை எல்லா திக்குகளிலும் நிர்ணயித்துள்ள எல்லைக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். இப்படி அவரது செயல்பாடுகள் அனைத்தும் நிர்ணயித்த எல்லைக்கப்பால் எவ்விதமான இம்சையும் நிகழாததால் அவர் அகிம்சை விரதத்தை அங்கே பூரணமாகக் கடைபிடிக்கிறார்"[39] தனிமனிதன் தன் வாழ்நாள் முழுவதும் கடைப்பிடிக்க வேண்டிய விரதம் திசை விரதம் ஆகும். "பத்துத் திக்குகளிலும் இவ்வளவு தூரத்திற்கு மேல் இறக்கும் வரையில் செல்வதில்லை என எல்லை வரையறை செய்துகொண்டு ஒழுகுதல்"[40] என இவ்விரதம் குறித்துச் சமண அறிஞர்கள் விளக்கம் தருகின்றனர்.

**"வரைப திசைபத்தும் வாழும் அளவும்**

**புரைவுஇல் திசைவிரதம் என்”**[41]

**“ஆறும் மலையும் கடலும் அடவியும்**

**கூறுப எல்லை அதற்கு”**[42]

என்று அருங்கலச்செப்பு திசைவிரதம் குறித்துக் குறிப்பிடுகிறது. திசைவிரதம் மேற்கொள்வோர் ஆறு, மலை, கடல், காடு ஆகியவற்றை எல்லையாக வைத்து விரதத்தை மேற்கொள்வர் என்பது இந்நூலுணர்த்தும் கருத்தாகும்.

### *1.3.2.2.2.*தேசவிரதம்

இத்துணைக் கால அளவும் இன்ன நாட்டின் எல்லைக்கு அப்பால் செல்வதில்லை என்று வரையறை செய்து கொள்வது தேசவிரதம் எனப்படும். இவ்விரதத்தை ‘தேசாவகாசிகம்’ என்று அருங்கலச்செப்பு குறிப்பிடுகிறது.

**“தேசம் வரைந்தொழுகல் கால வரையறையில்**

**தேசாவ காசிகம் என்”**[43]

மேலும், மனைச்சேரி, ஊர், தெரு, ஆறு, காடு என்று ஒவ்வொரு நாளும் எல்லைகளை வரையறை செய்து கொண்டு அவ்வெல்லையை அடைந்து வருவது தேசவிரதம் எனப்படும். “ஏற்கனவே நிர்ணயித்த எல்லைக்குள் கிராமம், சந்தை, வீடு. தெரு, முதலானவைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அந்த எல்லைக்குள் எல்லை செய்வது”[44] தேச விரதம் எனப்படுகிறது.

### *1.3.2.2.3.* அனர்த்தண்ட விரதம்

பயனற்ற வேலையைச் செய்வது ‘அனர்த்தண்ட விரதம்’ எனப்படும். தேவையற்ற வேலைகளைத் தவிர்ப்பதும் இவ்விரதத்தில் அடங்கும். பயனற்ற வேலைகளைச் செய்வதால் பல உயிர்கள் கொல்லப்படுகின்றன என்பது இவ்விரதத்தின் அடிப்படை ஆகும்.

“**எல்லை அகத்தும் பயம்இல மீண்டு ஒழுகல்**

**நல்அனத்த தண்ட வதம்”**[45]

எனும் குறட்பாவில் இவ்விரதத்தை அருங்கலச்செப்பு விளக்கிக் கூறுகிறது. தீய சிந்தனையுடன் இருத்தல், பாவ உபதேசங்களைக் கேட்டல், பயனற்ற செயல்களைச் செய்தல், கொலைக்குக் காரணமான கருவிகளைப் பிறருக்குக் கொடுத்தல், தீயன கேட்டல் ஆகிய ஐந்தையும் பயனற்ற செயல்களாக இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

**“நகையே நினைப்பு மொழியின்மை கூறல்**

**மிகைநினைவு நோக்கார் செயல்”**[46]

எனக் குறிப்பிடுவதிலிருந்து, நகைப்பிற்கு இடமான சொற்களைப் பேசுதல், உடலுறுப்புகளை அசைப்பதும், தேவையற்ற சொற்களைப் பேசுதலும், தன்னை அழகுபடுத்திக் கொள்ள வேண்டும் என்ற நினைப்பும் இவ்விரதம் கெடுதற்குக் காரணமாக அமையும் என்பதை அறியமுடிகிறது. நிலத்தில் தேவையின்றிக் குழிதோண்டுதல், மரங்களின் கிளைகளை வெட்டுதல், புல் தரைகளைப் பாழ்படுத்துதல், தண்ணீரை வீணாகச் செலவழித்தல், போரிடுதல், விபசாரம், திருட்டு ஆகியனவற்றைப் பயனற்ற செயல்களெனச் சமணசமயம் குறிப்பிடுகிறது.

### *1.3.2.3.* சிட்சா விரதம்

இல்லறத்தார்க்குரிய சிட்சா விரதம் நான்காகும். அவை,

1. **சாமாயிகம்**
2. **புரோஸ்தோஸ் உபவாசம்**
3. **போகோப உபோக பரிணாமம்**
4. **அதிதி சம்விபாகம்**

என்பனவாகும்.

#### *1.3.2.3.1.* சாமாயிகம்

நாள்தோறும் தன் பாவங்களை நீக்க வேண்டிச் செய்யப்படும் விரதம் ‘சாமாயிகம்’ எனப்படும். “மனம், மொழி, மெய் இவற்றால் வரும் வினைகளைத் தடுத்து நிறுத்த ஆன்ம சிந்தனை செய்தல். இதனை காலை,

பகல், மாலை ஆகிய நேரங்களில் செய்யலாம். குறைந்த அளவாக நாற்பத்தெட்டு நிமிட நேரத்திற்கு அமைதியான சூழ்நிலையில் இதனைச் செய்து முடித்தல் வேண்டும். எல்லா உயிர்களும் தம்முடையது போன்றவையே என்றும், அறிந்தோ அறியாமலோ தம்மால் செய்யப்பட்ட குற்றங்களுக்கு இரங்கியும் அவை போன்ற குற்றங்களை மீண்டும் செய்ய இடங்கொடுப்பதில்லை என உறுதி பூண்டும் பஞ்ச பரமேஷ்டிகளின் பண்பு நலன்களை எண்ணியும் சாமாயிக விரதத்தை ஒருவர் கைக்கொண்டு ஒழுகலாம்"[47] என்று இவ்விரதம் மேற்கொள்ளுதல் குறித்துக் குறிப்பிடுகின்றனர். கிழக்கு மற்றும் வடக்குத் திசைகளில் எழுந்து பின் உட்கார்ந்து இவ்விரதத்தை மேற்கொள்ள வேண்டும்.

வாழ்நாள் முடியும் அளவும் கொலை, பொய், களவு, காமம், பொருள்வரைதல் என்ற ஐந்து பாவங்களும் தன்னை அண்டாமல் பாதுகாத்திருத்தலே சாமாயிக விரதம் என்பதை அருங்கலச்செப்பு,

**"கட்டு வீடுகாறும் எஞ்சாமை ஐம்பாவம்**

**விட்டு ஒழுகல் சாமா யிகம்"**[48]

குறிப்பிடுகிறது.

### *1.3.2.3.2.* புரோஸ்தோஸ் உபவாசம்

இரண்டு நாள்கள் ஒருவேளை மடடும் உணவு உண்டு நோன்பு கொள்வது 'புரோஸ்தாஸ் உபவாசம்' எனப்படும். அஷ்டமி, சப்தமி, நவமி ஆகிய நாள்களை ஒருவேளை உணவு கொள்வதும் அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாள்களில் ஒரு வேளை உணவு கொள்வதும் இவ்விரதம் மேற்கொள்ளும் முறையாகும். ஒருவேளை உணவு ஏற்றுத் தண்ணீர் அருந்துவதை 'புரோஸ்தோஸ்' என்பர்.

### *1.3.2.3.3.* போகோப உபோக பரிணாமம்

போகப் பொருள்களைப் பயன்படுத்துவதற்கு ஓர் அளவினை வகுப்பது 'போகா உபோக பரிமாணம்' எனப்படுகிறது. இத்தொடரை 'போகம்', உபோகம், பரிமாணம் என மூன்றாகப் பிரித்து பொருளுரைப்பர். தண்ணீர், சாப்பாடு ஆகியன ஒருமுறை மட்டும் பயன்படுவதால் அவை போகப் பொருள் எனப்படுகின்றன. கட்டில், மெத்தை வீடு போன்றவை பன்முறை பயன்படுத்தப்படுவதால் அவை உபபோயகப் பொருள் எனப்படுகின்றன. இவ்விரு பொருள்களையும் ஒரு குறிப்பிட்ட எல்லையில் பயன்படுத்துவது பரிணாமம் எனப்படுகிறது.

### *1.3.2.3.4.* அதிதி சம்விபாகம்

முனிவர்கள், ஆர்யிகா, சிராவக், சிராவகிகள் முதலான சான்றோர்களை எதிர்கொண்டழைப்பது, உணவளிப்பது, பக்தியுடன் அவர்களை உயர்ந்த இருக்கையில் அமர்த்திக் கால்களைக் கழுவித் தூய்மை செய்து வணங்குவது அதிதி சம்விபாகம் எனப்படும்.

## *1.3.2.4.* இல்லறத்தார்க்கு ஆகாத குணங்கள்

'வியசனங்கள்' என்பதற்குத் தீய பழக்கங்கள் என்பது பொருளாகும். மனித வாழ்வியலுக்கு ஆகாத ஏழு தீய பழக்கங்கள் குறித்துச் சமணம் குறிப்பிட்டுள்ளது. அவை,

1. சூதாட்டம்
2. புலால் உண்ணல்
3. போதைப் பொருள்களைப் பயன்படுத்துதல்
4. விலைமாதரை விரும்புதல்
5. வேட்டையாடி உயிர்களைக் கொலை செய்தல்
6. திருடுதல்
7. பிறன்மனை விழைதல்

என்பனவாகும்.

### *1.3.2.5.* இல்லறத்தார்க்குரிய எட்டு மூலகுணங்களும் கடமைகளும்

இல்லற வாழ்வில் ஈடுபட்டு வாழ்கின்ற மனிதர்களைச் சமணசமயம் 'ஸ்ராவரகர்' எனக் குறிப்பிடுகிறது. இவ்வாறு இல்வாழ்க்கை மேற்கொண்டு வாழ்வோர் எட்டு மூல குணங்களைப் பின்பற்ற வேண்டும் என்பது சமண சமயக் கோட்பாடாகும். அவை,

1. மாமிசம் உண்ணாமை
2. மது அருந்தாமை
3. தேன் அருந்தாமை
4. அத்தி, ஆல், அரசு, இரலி, இலந்தை ஆகிய உதும்பர பழங்கள் உண்ணாமை
5. தேவ தரிசணம்
6. இரவு உண்ணாமை
7. வடித்த நீர் அருந்துதல்
8. உயிர்க்கருனை

முதலியனவாகும்.

#### *1.3.2.3.6.* ஆறு கடமைகள்

இல்லறத்தார் அன்றாடம் செய்ய வேண்டிய கடமைகள் ஆறு என்று சமணம் குறிப்பிடுகிறது. அவை,

1. **தேவ பூஜை புரிதல்**
2. **குருபக்தி**
3. **ஸ்வாத்தியாயம்**
4. **சம்யமம்**
5. **தவம்**
6. **கொடை**

என்பனவாகும்.

*1.3.2.3.6.1.* **தேவபூஜை**

சமண ஆலயங்களில் வீற்றிருக்கும் ஜினேந்தி பகவானுக்கு இல்லறத்தார் அன்றாடம் ஆராதனை புரிதல் வேண்டும். இப்பூஜை திரவியபூஜை, பாவபூஜை என இரண்டு வகைப்படும். இவற்றுள் திரவியபூஜை மட்டும் இல்லறத்தார்க்கு உரியதாகும். அஷ்ட திரவியங்களுடன் இப்பூஜையைச் செய்தல் வேண்டும். பாவ பூஜை, சமணத் துறவிகளுக்கு மட்டும் உரியதாகும்.

*1.3.2.3.6.2.* **குருபக்தி**

திகம்பர முனிவர்களைப் போற்றி அவர்களின் அருளுரைகளைக் கேட்பதும், அவர்களுக்குப் பணிவிடைகள் செய்வதும் குருபக்தி எனப்படும். இறைச்சிந்தனையுடன் முனிவர்களைப் போற்றி வணங்குதல் இல்லறத்தார்க்குரிய கடமையாகும்.

*1.3.2.3.6.3.* **ஸ்வாத்தியாயம்**

இறைவனைக் குறித்துப் படிப்பது, கேட்பதும் இறைச்சிந்தனையுடன் இருப்பதும் ஸ்வாத்தியாயம் எனப்படுகிறது. "ஆத்ம கல்யாணம் உடைய ஜினவாணியைப் படிப்பது கேட்பது, சிந்தனையுடன் இருப்பது ஸ்வாத்தியாயம் எனப்படும்.'[49]

*1.3.2.3.6.4.***சம்யமம்**

அனைத்து உயிர்களையும் காப்பாற்றுதலும் ஐம்புலன்களையும் மனத்தினையும் அடக்கி ஆள்வது சம்யமம் எனப்படும். பூமி, நீர், காற்று, அக்னி முதலானவற்றையும், தாவரங்கள், விலங்கினங்கள் ஆகிய உயிர்களைக் காப்பற்றுதல் சம்யமம் எனப்படும்.

*1.3.2.3.6.5.* **தவம்**

ஆத்மாவின் மேன்மைக்காகத் தம்மைத் தியாகம் செய்வதே தவமாகும். இத்தவத்தினை பகிரங்க தவம் என்றும் அந்தரங்க தவம் என்றும்

சமணசமயத்தார் குறிப்பிடுகின்றனர். விழிகளைத் திறந்து கொண்டு உண்ணாநோன்பு, உணவு குறைத்தல், உடல் துன்பத்தைப் பொறுத்தல் ஆகியவற்றைச் செய்வது பகிரங்க தவம் எனப்படும். கண்களை மூடிக்கொண்டு பார்வையில்லாத நிலையில் செய்வது அந்தரங்க தவம் எனப்படும்.

### *1.3.2.3.6.6.* கொடை

பயனுடைய பொருட்களை மற்றவர்க்குக் கொடுப்பதையே கொடையாகும். பிறருக்குக் கொடுப்பதன் வாயிலாக ஒரு பொருளின் மேல் கொண்டுள்ள பற்று குறைகிறது. கொடையானது ஞானத்திற்கு அடிப்படைக் காரணமாய் அமைகிறது. கொடையின் காரணமாக மனிதப் பிறவி நீங்கி வீடுபேறு கிட்டுகிறது என்பது சமணசமயக் கொள்கையாகும்.

## *1.4.* தமிழகத்தில் சமணம்

சமணமும் பௌத்தமும் வட இந்தியாவிலிருந்து தென்னகத்திற்கு வந்தவையாகும். பண்டைத் தமிழர்களின் தெய்வங்கள் குறித்தும் வழிபாட்டு முறைகள் குறித்தும் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நால்வகை மக்கள் போற்றிவந்த தெய்வங்களை,

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்"**[50]

என்ற தொல்காப்பிய நூற்பா வாயிலாக அறியமுடிகிறது. மேலும் கொற்றவை, போன்ற தெய்வங்கள் குறித்த குறிப்புகளும் தொல்காப்பியத்தில் உள்ளன. சமணசமயம் தமிழகத்தில் பரவுவதற்கு முன்னரே தமிழர்கள் பல்வேறு தெய்வங்களை வணங்கும் பண்பாட்டை உடையவர் என்பதை இதன்வழி அறியமுடிகிறது. ஆனால் தொல்காப்பியர்

காலத்தில் பழந்தமிழர்கள், வைதீக சமயம், தற்கால வைதீக சமயத்தார் கொண்டிருந்த சமயக் கொள்கைகளைக் கொண்டிருக்கவில்லை என்பதைச் சாமி.சிதம்பரனார், "புத்தம் சமணம் தமிழகத்தில் பரவுவதற்கு முன் சிவ வணக்கம், திருமால் வணக்கம் தமிழ் மக்களிடம் இருந்தன. இதில் ஐயத்திற்கு இடம் இல்லை. ஆனால் இன்றிருப்பது போன்ற சைவ, வைணவ மத தத்துவங்கள் இருந்தனவென்று எண்ண இடம் இல்லை"[51] எனக் குறிப்பிடுகிறார். இருப்பினும் தொல்காப்பியர் காலத்திலும் சமணசமயம் தமிழகத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளது.

தொல்காப்பியர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பது அறிஞர் பலர் கொண்ட முடிபாகும். இக்கருத்திற்குச் சான்றாக,

**"வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்**

**முனைவன் கண்டது முதனூ லாகும்"**[52]

எனும் தொல்காப்பிய மரபியல் நூற்பாவைக் குறிப்பிடுகின்றனர்.

தமிழகத்தில் சமணசமயம் தோன்றிய வரலாற்றினைக் குறிப்பிடும் மயிலை. சீனிவேங்கடசாமி, "கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பத்திரபாகு முனிவரின் சீடராகிய வைசாக முனிவரால் தமிழ்நாட்டிலே சமணசமயம் பரவச்செய்யப்பட்டது என்று அறிகிறோம்"[53] இருப்பினும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்னரே பத்திரபாகு முனிவரின் சீடராகிய வைசாக முனிவரால் தமிழ்நாட்டில் சமணசமயம் பரவியதென வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். மதுரை மாவட்டத்தில் காணப்படும் பிராமிக் கல்வெட்டு எழுத்துகள் சமணரால் எழுதப்பட்டவை என்றும், அவை கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் எழுதப்பட்டவை என்றும் ஆராய்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

"கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வடநாட்டினின்றும் பத்திரபாகு சவாமிகள் எண்ணாயிரம் சீடர்களுடன் தென்னாட்டிற்கு வந்த செய்தி

வரலாற்றுச் சிறப்புடையது. அச்சான்றோருடன் சந்திரகுப்த மன்னரும் துறவியாகி அனைவரும் மைசூர் இராச்சியத்திலுள்ள சிரவண பெலகோலாவில் தங்கினார்கள். அதுசமயம் பத்திரபாகு சுவாமிகள் தமது சீடர்களில் ஒருவரான விசாக முனிவருடன் சில துறவிகளைப் பாண்டிய நாட்டிற்கும், சோழநாட்டிற்கும் அனுப்பி அந்நாடுகளிலுள்ள ஜைன முனிவர்களோடு அளவளாவி ஆங்காங்கு அறநெறிகளைப் போதிக்குமாறு பணித்துள்ளார். இவைகள் யாவும் கல்வெட்டுச் சான்றுகளுடன் கூடிய வரலாற்று உண்மைகள்"[54] என்று தமிழகத்தில் தோற்றம் பெற்ற வரலாறு குறித்து டி.எஸ்.ஸ்ரீபால் குறிப்பிடுகிறார். இவர்தம் கூற்றிலிருந்து தொல்காப்பியரின் காலத்திற்கு முன்னரே தமிழகத்தில் சமணசமயம் பரவி, சிறப்புற்றுத் திகழ்ந்தமையை அறியமுடிகிறது. "தமிழகத்தில் கொங்கு நாட்டிலிருந்தே சமணசமயம் பரவியதென்பதனை ஏ.ஏகாம்பரநாதன், "கி.மு.3-ஆம் நூற்றாண்டில் கர்நாடக மாநிலத்திலிருந்து தமிழகத்திற்குச் சமணம் கொங்கு நாட்டின் வழியாகப் பரவியிருக்க வேண்டும் என்பது அறிஞர் பலரது கருத்துரையாகும். இதற்குச் சான்றாக கொங்கு நாட்டில் கி.மு.3-ம் நூற்றாண்டைச் சார்ந்த பிராமி கல்வெட்டு புகழியூர் என்னுமிடத்தில் காணப்படுகிறது."[55] எனக் குறிப்பிடுகிறார்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இன்றைய கர்நாடக மாநிலத்தில் உள்ள பெல்கோலா என்ற இடத்திலிருந்து தென்னிந்தியாவில் சமணம் பரவுவதற்குக் காரணமாய் அமைந்தனர்.

சங்க இலக்கியங்களில் சமணசமயம் பற்றிய பல்வேறு குறிப்புகள் காணப்படுகின்றன. புறநானூறு, நற்றிணை, அகநானூறு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, ஆகிய நூல்களிலும் பதினெண் கீழ்க்கணக்கு நீதி நூல்களிலும் சமணசமயம் குறித்த பல்வேறு செய்திகளை அறிந்து

கொள்ளமுடிகிறது. சமணம் வலியுறுத்திக் குறிப்பிட்ட வாழ்வியல் ஒழுக்கங்கள் பதினெண் கீழ்க்கணக்கு நீதி நூல்களில் விரவிக் கிடக்கின்றன.

தீர்க்க இயலாத துன்பம் வந்தவிடத்து தம் உயிரை மாய்த்துக் கொண்டோர் பற்றிய குறிப்புகள் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. ‘வடக்கிருத்தல்’ என்ற பெயரில் இதனைச் சங்கப் புலவர்கள் சுட்டியுள்ளனர். சமணசமயம் குறிப்பிடும் ‘சல்லேகனை’ நோன்பே தமிழிர் ‘வடக்கிருத்தல்’ என அழைக்கப்பட்டது என்பர். சங்ககாலத் தமிழ்ப் புலவராகிய பாரி. தம் நண்பர் கபிலர் இறந்தபோது வடக்கிருந்து உயிர்துறந்து குறித்த செய்தி குறித்துப் புறநானூறு,

**“இம்மை போலக் காட்டி உம்மை**

**இடையில் காட்சி நின்னோடு**

**உடனுறைவாக்கு உயர்ந்தபாலே”**[56]

எனக் குறிப்பிட்டுள்ளது. சமண முனிவர்கள் நீண்ட சடைமுடியுடனும் அசையாத உடம்புடனும் குன்றுகளில் இருந்து நோன்பு மேற்கொண்ட செய்தியை,

**“நீடிய சடையோட ஆடாமேனிக்**

**குன்றுறை தவசியர் போ”**[57]

என்ற நற்றிணைப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இச்செய்தி அகநானூற்றுப் பாடலில்,

**“உண்ணாமலையின் உயங்கிய மருங்கின்**

**ஆடா படிவத்து ஆன்றோர் போல**

**வரைசெறி சிறுநெறி நிரையுடன் செல்லும்**

**காளயானை கரவினழி குன்றம்”**[58]

என இடம்பெற்றுள்ளது.

சமண முனிவர்கள் உலகியல்புகள் அனைத்தும் உணர்ந்த இயல்பினர் என்பதையும், ஆன்று அடங்கிய கொள்கைச் சான்றோர்களாக அவர்கள் விளங்கியமை பற்றியும் மதுரைக்காஞ்சி,

**"வானமும் நிலனும் தாமுழுது உணரும்**

**சான்ற கொள்கை சாயா யாக்கை**

**ஆன்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்"**[59]

எனக் குறிப்பிட்டுள்ளது. பதினெண்கீழ்க்கணக்கு நீதி நூல்களுள் சமணசமயம் வலியுறுத்தும் வாழ்வியல் ஒழுக்கங்களைச் சமண முனிவர்கள் வலியுறுத்தியுள்ளனர். சமண முனிவர்களால் இயற்றப்பட்ட நாலடியாரில்,

**"இல்ல மிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்**

**செல்வம் வலியென்றிவையெல்லா – மெல்ல**

**நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்**

**தலையாயார் தாமுய்யக் கொண்டு"**[60]

உலகநிலையாமை குறித்தும் துறவு வாழ்வின் மேன்மை குறித்தும் சமணமுனிவர்கள் விளக்கியுள்ளனர். தமிழ் இலக்கியங்களில் சமணர்களின் செல்வாக்கு மிகுந்திருந்த பண்டைக்காலத் தமிழகச் சூழல் குறித்தும் சமணர்கள் தமிழுக்கு ஆற்றிய தொண்டுகள் குறித்தும் தமிழண்ணல், "சமணர்காலத்தில் இசை நாடகக்கலைகள் வளர்ச்சி குன்றின. வடமொழி செல்வாக்குப் பெற்றது. மணிப்பிரவாள நடை புகுத்தப்பட்டது. காப்பியம், நீதி, புராணம், சிற்றிலக்கியம், உரைநடை, இலக்கணம், நிகண்டு, ஆகிய துறைகளில் சமணர்கள் தொண்டாற்றினர். இலக்கணம், நிகண்டுத் துறைகளில் அவர்களின் பணி தொடர்ச்சியானது"[61]

### 1.5. சமண சமயமும் மகளிரும்

இல்லற வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகும் ஆடவர்க்குரிய பல்வேறு ஒழுக்க நெறிமுறைகள், விரதங்கள் முதலியன மகளிர்க்கும் உரியனவாகும்.

இவற்றுள் பெரும்பான்மை மகளிர்க்குப் பொருந்துவன. இருப்பினும் மகளிர்க்குரிய பல்வேறு வாழ்வியல் ஒழுக்கங்கள் குறித்துப் பல்வேறு சமண சமய ஆகம நூல்கள் எடுத்துரைத்துள்ளன. சமணத் தமிழ் இலக்கியங்களிலும் மகளிர்க்கான வாழ்வியல் நெறிமுறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. மகளிர் வீடுபேறு எய்துதல் குறித்து இருவேறு கொள்கைகளைச் சமணசமயத்தார் கொண்டிருந்தனர். பெண்கள் வீடுபேறு அடையவேண்டுமெனில் மறு பிறவியில் ஆணாகப் பிறந்து, துறவு நெறியைப் பின்பற்றினால்தான் வீடு பேறு அடைந்திட முடியும் என்பது திகம்பர சமணசமயத்தாரின் கொள்கையாகும். ஆனால் மகளிர் இல்லற வாழ்வைத் துறந்து துறவு பூண்டு சல்லேகனை ஏற்றால் வீடுபேறு அடைந்திட இயலும் என்பது சுவேதாம்பரச் சமணர்களின் கருத்தாகும்.

பெண்கள் உடல்பற்றைத் துறந்து, தீட்சை பெற்று முறையாகத் தவம் புரிந்தால் ஆண்பிறவியை அடையலாம் என்பதை ‘அனந்தமதி’ இ ‘இரேவதையார்’ வரலாற்றின் வாயிலாகச் சமணநூலறிஞர்கள் விளக்குகின்றனர். இக்கதைகள் குறித்து,

**“அஞ்சன சோரன் அனந்தமதி உலகில்**
**வஞ்சம்இல் ஓத்தா யணன்”**[62]

**“இரேவதை யாரும் நிநேந்திர பத்தரும்**
**தோவகையின் பாரிசரும் சொல்”**[63]

என்று அருங்கலச்செப்பு குறிப்பிடுகிறது.

முற்பிறவியில் செய்த பாவங்களின் பயனாகவே இம்மைப் பிறவியில் மனித குலத்தில் பெண்கள் தோன்றுகின்றனர் என்பதை, “ஒருவன் யாரையேனும் வஞ்சனை செய்தால் அவன் அடுத்த பிறப்பில் பெண்ணாகப் பிறப்பான் என்பது சமணசமயக் கொள்கை”[64] என்று மயிலை. சீனிவேங்கடசாமி குறிப்பிடுகிறார். நற்காட்சிக்குரிய தெளிவான

நற்குணங்களைக் கடைப்பிடிப்பவர்கள் மறுபிறவியில் பெண்ணாகப் பிறக்க மாட்டார் என்பதை அருங்கலச்செப்பு,

**"பெண்டிர் நபுஞ்சகர் ஆகார் பிழைப்பின்றிக்**

**கொண்ட நற்காட்சி யவர்"[65]**

என்று குறிப்பிட்டுள்ளது. இல்லறவாழ்வில் மகளிர் அடைகின்ற துன்பங்களாக,

- **குழந்தைப் பேறின்மை**
- **பெற்ற குழந்தைகளை இழந்து துன்பமடைதல்**
- **மனைவியாகிக் கணவனிடம் துன்புறுதல்**

ஆகியனவற்றைச் சமணம் குறிப்பிடுகிறது. இத்துன்பங்களைப் பெண்கள் எய்துதற்கு அவர்கள் செய்த பெரும் பாவங்களே காரணமாக அமைகின்றன என்றும் குறிப்பிட்டுள்ளது. மேலும் இந்திரனின் மனைவியாக இருப்பினும் அவளுக்கு இறைமை நிலைக்குரியனவற்றைச் செய்து உயர்கின்ற நிலைமை இல்லை என்பதை மேருமந்திர புராணம்,

**"இந்திரன் தேவி மார்க்கும்**

**இறைமைசெய் முறைமை யில்லை**

**பைந்தொடி மகளி ராவார்**

**பாவத்தால் பெரிய நீரார்**

**மைந்தரைப் பெறாமை பெற்றால்**

**இழந்திடல் மாற்றும் பெண்ணில்**

**அந்தரத் தனைய துன்பந்**

**தாங்குதி நீங்கு வார்கள்"[66]**

என்று குறிப்பிடுகிறது.

### 1.5.1. இல்லற மகளிர்க்கான வாழ்வியல் ஒழுக்கங்கள்

இல்லறம், துறவறம் ஆகிய இரு வாழ்வியல் நிலைகளையும் மகளிர் பின்பற்றி வாழ்வதைச் சமணம் ஏற்கிறது. இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்கின்ற மகளிர்க்கான உடல் தூய்மை முறைமைகள், வழிபாட்டு முறைகள், துறவியர்க்கும் முனிவர்களுக்கும் மகளிர் உணவு அளிக்கும்போது பின்பற்றி நடக்க வேண்டிய நெறிமுறைகள் ஆகியன குறித்துச் சமணநூல்கள் குறிப்பிடுகின்றன.

#### 1.5.1.1. உடல் தூய்மை முறைகள்

இல்லற மகளிர் துவைத்துக் காயவைத்த ஆடையை அணிதல் வேண்டும். ஒப்பனை செய்து கொள்வதில் மகளிர் அதிக நாட்டம் உடையவர்களாக இருத்தல் கூடாது. தற்காலத்தில் சமணசமயத்தைப் பின்பற்றி வாழ்கின்ற மகளிர்க்கும் இவ்விதிகள் பொருந்தும் என்பதை, "பெண்கள் லிப்டிக், நகபாலிஷ், பிளாஸ்டிக் பொட்டு ஆகியவை பயன்படுத்தக் கூடாது. அரக்கினால் செய்த வளையல் அணிந்து கொண்டு ஆகாரம் கொடுக்கக் கூடாது"[67] எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

சூதக காலங்களில் மகளிர் உணவு சமைப்பதோ, பிறருக்கு உணவு கொடுப்பதோ கூடாது.

மகளிர் மாதவிடாய் ஏற்பட்ட 5 ஆம் நாளுக்குப் பின்னரே வீட்டில் உணவு சமைத்தல் வேண்டும். ஐந்தாம் நாளே அவள் சூதகத்திலிருந்து தூய்மை பெறுகிறாள்.

குழந்தை பெற்றமையால் மகளிர்க்கு உண்டான தீட்டு 'ஜன்ம காலத் தீட்டு' எனப்படுகிறது. குழந்தை பிறந்த பத்து நாள்கள் இத்தீட்டு மகளிர்க்கு உரியதாகிறது. சில சமண ஆகம நூல்கள் பிரசவ காலங்களில் மகளிர் நாற்பத்து ஐந்து நாள்கள் தீட்டிற்கு உரியவராகின்றனர் எனக் குறிப்பிடுகின்றன. மகளிர்க்கு ஏற்படும் கருச்சிதைவுக்காலமும் தீட்டுக்

காலம் ஆகும். கருச்சிதைவு அடைந்த மகளிர் எத்தனை மாதங்கள் கர்ப்பமாக இருந்தனரோ அத்தனை மாதங்கள் தீட்டிற்கு உரியவராவார்.

பரத்தமை ஒழுக்கம் பூண்டு வாழ்கின்ற மகளிர் எக்காலத்திலும் அசுத்தமான பெண்டிர் ஆவர்.

இல்வாழ் மகளிர் தம் குழந்தையை அலங்கரித்துக் காண்பதில் நாட்டம் கொள்ளுதல் கூடாது.

மது அருந்துவதில் வெறிகொண்ட மகளிர் தீட்டிற்குரியவராவர். பெண்கள் காம இன்பத்திலும் அதிக நாட்டம் கொண்டவராக இருத்தல் கூடாதென்ற கருத்து சமணத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆணுக்கும் பெண்ணிற்கும் உடலுறவு என்பது இன்பத்தை விளைவிக்கக் கூடிய ஒன்றாக இருப்பினும் அதன்பொருட்டும் துன்பம் உள்ளதென்பதை, "பெண் உறுப்பில் அனேக ஜீவன்கள் தானாகவே தொடர்ந்து பிறந்தவண்ணமிருக்கின்றன. இவ்வுயிர்கள் உடலுறவு கொள்ளும் போது இறக்கின்றன. ஆண், பெண் காம இச்சையினால் உடல் உறவு ஏற்படும் போது இம்சை நிகழ்கிறது"[68] என்று ஸ்ரீமத் அமிருத சந்திசூரி ஆசாரியார் குறிப்பிடுகிறார்.

### 1.5.2. மகளிர் வழிபாட்டு முறைகள்

மகளிர் கோயில்களுக்குச் செல்வதற்கும், அங்கு வழிபாடு செய்வதற்கும் உரிய நெறிமுறைகள் சமண ஆகமங்களில் விளக்கப்பட்டுள்ளன. குடும்பத்தில் எவரேனும் மரணம் அடைந்தால் மகளிர் சமண ஆலயங்களுக்குச் செல்லுதல் கூடாது.

பெண்களைப் பொறுத்தவரையில் மாதவிடாய் காலம் மிகுந்த அசுத்த காலம் ஆகும். மாதவிடாய் முடிந்த ஐந்தாம் நாள்தான் மகளிர் ஆலயங்களுக்குச் செல்ல வேண்டும்.

### *1.5.3.* உணவு அளித்தல்

அறவோர்களுக்கும் முனிவர்களுக்கும் மகளிர் ஆகாரம் அளித்தலுக்கும் விதிமுறைகள் உள்ளன. “அதிக வயது முதிர்ந்த கிழவி, உணவு உண்டபிறகு வாயைக் கழுவாதவள், ஐந்து மாதக் கர்பம் உள்ளவள், குருடி, சுவற்றில் சாய்ந்து கொண்டு அமர்ந்திருப்பவள், உயரமான இடத்தில் அமர்ந்துள்ளவள், தாழ்ந்த இடத்தில் அமர்ந்திருப்பவள், வாயால் ஊதி நெருப்பை எரிக்க வைப்பவள், விறகை வைத்து நெருப்பை உண்டு பண்ணுபவர், சாம்பலைக் கொண்டு நெருப்பை மூடுபவள், நெருப்பை எரித்துக் கொண்டே உணவு பரிமாறுபவள், சானத்தால் சுவரை மெழுகுபவள், பால் குடிக்கும் குழந்தையைத் தள்ளி விட்டு ஆகாரம் கொடுப்பவள் ஆகியோர்கள் முனிவர்களுக்கு ஆகாரம் கொடுப்பவர் தாயக தோஷத்திற்கு உட்பட்டவராவர்.”[69] என்று சமண ஆகமங்கள் குறிப்பிடுகின்றன.

### *1.5.4.* துறவு மகளிர்

சமணசமய பெண்பால் துறவியரை ‘ஆர்யிகை’ என்ற பெயரால் ஆகமங்கள் குறிப்பிடுகின்றன. திகம்பர சமணம் பெண்துறவியர்க்கான ஒழுக்கநெறிமுறைகள் குறித்து, “மங்கையர்களும் கூட அவர்தம் தகுதிக்கு ஏற்றவாறு சந்நியாச சாதனைபுரிய விதிகள் ஜைன ஆகமத்தில் கூறப்பட்டுள்ளன. அவர்களும் கூட ஆர்யிகை யாத்வீ ஸ்ரமணி என்கிற முறையில் தீக்ஷை ஏற்கலாம். அவர்கள் 16 முழம் சேலை அணியவேண்டுமென்ற விதியுண்டு. அவர்கள் மனைமீது அமர்ந்து கொண்டு தன் கைகளிலேயே ஆகாரம் ஏற்பர். மாதவிடாய் காலத்தில் மௌனம் இருந்து மூன்றாம் நாட்களுக்குப் பிறகு ஸ்நானம் செய்வர்.”[70] என்று ஆசாரிய ஸ்ரீ 108 விராக்சாகர் முனிவர் குறிப்பிடுகிறார்.

துறவு ஒழுக்கம் பூண்டுள்ள மகளிர் தனிமையில் இருத்தல் கூடாது. அவ்வாறே தனிமையாகப் பேசுவதும், படிப்பதும் கற்பிப்பதும் கூடாது.

துறவு ஒழுக்கம் பூண்டுள்ள மகளிர் தனிமையில் முனிவர்களுடன் தங்குதல் கூடாது இவ்வுலகில் மகளிர் மீண்டும் ஆண்களாகப் பிறந்து, தவம்புரிந்து, முறையான விரதங்களை மேற்கொண்டு, உலகப் பற்றுகளைத் துறந்து நோன்பியற்றிய பின்னரே வீடுபெறு அடைவர் என்பதை,

**“மாதவம் தாங்கி வையத்து**

**ஐயராய் வந்து தோன்றி**

**ஏதமொன் றின்றி வீடும்**

**எய்துவர் தையலார்கள்”**[71]

எனக் குறிப்பிடுகிறது. இல்வாழ்க்கை நெறிமுறையில் ஒழுகிய மகளிர் இல்லறத்தில் இருந்தவாறே ‘கேவல ஞானம்’ அடைந்து உலக வாழ்க்கையைத் துறந்தமை குறித்த செய்திகளைச் சமணவியல் அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளர்.

### *1.5.4.1.* யக்ஷி வழிபாடு

சமணசமயத் தீர்த்தங்கரர் இருபத்து நால்வருக்கும் யக்ஷர், யக்ஷிகள் உள்ளனர். ஒவ்வொரு தீரத்தங்கரருக்கும் ஒரு யக்ஷி பரிவாரத் தேவதையாகத் திகழ்கிறாள். சமணர்கள் உருவ வழிபாட்டை ஏற்றதற்குப் பின்னர் யக்ஷிகளுக்கும் சிற்பங்கள் உருவாயின. சக்ரேஸ்வரி, ரோகிணி, ப்ரக்ஞப்தி, வஜ்சிரிங்கலா, புருஷதத்தா, மனோவேகி, காளி, கவாலாமாலினி, மாகாளி, மாதவி, கௌரி, காந்தாரி, வைரோடினி, அனந்தமதி, மாநசி, மகாமாநசி, ஐயா, விஜயா, அபராஜிதா, பகுருபினி, சாமுண்டி, கூஷ்மாண்டி, பத்மாவதி, சித்தாயிகா ஆகியோர் சமணசமய யக்ஷிகள் ஆவர்.

கணவன் உயிருடன் இருக்கும் போதே துறவுக்கோலம் பூண்டு அவனை விடுத்துச் செல்கின்ற மகளிர் ‘ஆரியங்கனை’ எனப்பட்டனர்.

இவ்வாறு துறவு பூண்டு வீடுபேறு எய்திய பெண்களை 'இயக்கி' எனும் பெயரால் தெய்வமாக வழிபட்டனர். இதனை,

**"அறம்புரி நெஞ்சின் அறவோர் பல்கிய**

**புறஞ்சிறை மூதூர்ப் பூங்கண் இயக்கிக்குப்**

**பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்"**[72]

எனும் சிலப்பதிகார அடிகளால் அறியமுடிகிறது. சமயங்களுக்கு அப்பாற்பட்டு இத்தகைய சமணசமய மகளிர் வழிபாட்டிற்கு உரியவராய்த் திகழ்ந்தமையை ஆயர்முதுமகள் மாதரி செயலால் அறியமுடிகிறது.

சமணப் பெண்துறவியர்க்கு சாமி, குரத்தி, பெருமாட்டி, ஆசாள், தலைவி, ஐயை, கவுந்தி, பைம்மை என்னும் பெயர்கள் உள்ளனவென்று கயாதர நிகண்டு குறிப்பிடுகிறது. இதனை,

**"சாமி குரத்தி பெருமாட்டி ஆசாள் தலைவி ஐயை**

**நாமங் கவுந்தியும் பைம்மையும் ஆருகதத்துத் தவப்பெண்"**[73]

எனும் பாடல்வழி அறியமுடிகிறது. சமணப் பெண்துறவியர்களின் தோற்றம் பண்புகள் குறித்து மயிலை.சீனி வேங்கடசாமி, "ஆர்யங்கனைகள் என்றும் கௌந்திகள் என்றும் குரத்தியர் என்றும் கூறப்பட்ட சமணசமயப் பெண்பால் துறவிகள் தலையை மழித்து வெள்ளிய ஆடை அணிந்திருந்தனர். இவர்கள் சமய நூலையும் இலக்கண இலக்கிய நூல்களையும் நன்கு பயின்று இருந்தனர்."[74] என்று குறிப்பிட்டு 'கந்தியார்களும் குரத்தியார்களும் இல்லறத்தில் உள்ள பெண்மக்களுக்கு ஆருகதக் கொள்கைகளையும் அறவுரைகளையும் புகட்டி வந்தனர்' என்று குறிப்பிடுகிறார். கந்தி, அவ்வை, எம்மை, கன்னி, கௌந்தி, என்னும் பெயர்களும் சமணப் பெண்துறவியர்க்கு வழங்கியுள்ளன. இதனை,

**"நந்தியே பிண்டி வாமன் நன்னெறி வழாது நோற்பாள்**

**கந்தியே அவ்வை அம்மை கன்னியே கௌந்தி என்ப"**

**"பைம்மையும் கௌந்தியும் அருந்தவப் பெண்பெயர்"**

எனப் பிங்கல நிகண்டும், திவாகர நிகண்டும் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

சமணசமயப் பெண் துறவியர் ‘குரத்தியர்’ என அழைக்கப்பட்டனர். கழுகுமலையில் உள்ள கல்வெட்டுகளில் ‘குரத்தியர் பற்றிய குறிப்புகள் உள்ளன.

### *1.5.5.* மகளிரும் வீடுபேறும்

மகளிர் வீடுபேறு அடைதல் குறித்த தெளிவான கொள்கைகள் சமணசமயத்தில் உள்ளன. மகளிர் முறையான தவம் மேற்கொண்டு மறுபிறவியில் ஆணாகப் பிறந்து, அதன்பின்னரே முக்தி அடைய இயலும் எனச் சமணம் குறிப்பிடுகிறது. இக்கொள்கை குறித்து சுவேதாம்பர சமணமும் திகம்பர சமணமும் மாறுபட்ட கருத்தைக் கொண்டிருந்தனர். தமிழகத்தைப் பொறுத்தவரையில் திகம்பர சமணர்களே பல்வேறு தமிழ் இலக்கண, இலக்கியங்களைப் படைத்துள்ளனர். எனவே திகம்பரசமணக் கொள்கைகளின்படி மகளிர் இல்வாழ்வு மகளிர் ஏற்றகாலத்தில் முறையாக நோன்பியற்றி வீடுபேறு அடையலாம் என்ற கருத்தினைத் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

கணவன் இறப்பின் காரணமாகவோ, காதலனை அடைய இயலாத நிலையிலோ மகளிர் தம் உயிரை மாய்த்துக் கொள்வதையும் சமணம் ஏற்கவில்லை.

**“வரைப்பாய்தல் தீப்புகுதல் ஆறாடல் இன்ன**

**வுரைப்பின் உலக மயக்கு”**[75]

என அருங்கலச்செப்பு குறிப்பிட்டுள்ளது. இச்செயல்களை உலக மூடம் எனக் குறிப்பிடுவதிலிருந்து இவற்றைச் சமணம் ஏற்கவில்லை. இவ்வாறு உயிர்துறக்கும் பெண்களுக்கு வீடுபேறு இல்லை என்பதும் சமணசமயக் கொள்கையாகும்.

## 1.6. தொகுப்புரை

பண்டைய இந்தியநாட்டின் தொன்மைச் சமயங்களுள் சமணசமயம் குறிப்பிடத்தக்கதாகும். சமணசமயத்தார் கொள்கைகள் பற்றிய குறிப்புகள் வேதங்களில் இடம்பெற்றுள்ளன. பல நூற்றாண்டுகள் இச்சமயம் மக்களின் செல்வாக்கைப் பெற்றதாகத் திகழ்ந்துள்ளது. சமணசமயத் தீர்த்தங்கரர்களின் வரலாற்றின் வாயிலாகவும் சமண ஆகமங்கள் வாயிலாகவும் இச்சமயத்தின் கொள்கை கோட்பாடுகள், மனிதர்களின் வாழ்வியல் முறைகள் ஆகியனவற்றை அறிந்து கொள்ள முடிகிறது.

ரிஷதேவர் முதல் வர்த்தமான மகாவீரர் வரை இருபத்து நான்கு பேர்கள் தீர்த்தங்கரர்கள் எனப்படுகின்றனர். தீர்த்தங்கரர்கள் என்ற சொல்லிற்கு அறத்தைக் கற்பிப்பவர்கள் என்பது பொருளாகும்.

தீர்த்தங்கரர்களிடமும் அவர்கள் கற்பித்த அறங்களின் மீதும் பற்றுக் கொண்டு பின்பற்றி வாழ்ந்தோர் ‘ஜீனர்’ எனப்பட்டனர். ஜீனர் என்பதற்கு வெற்றியாளர் என்பது பொருளாகும். வடமொழியில் ஸ்ரமணர் என்று அழைக்கப்பட்ட இவர்களைத் தமிழில் சமணர் என்ற பெயரில் அழைத்தனர்.

திகரம்பர சமணம், சுவேதாம்பர சமணம், ஸ்தானகவாசி சமணம் என்பது சமணசமயத்தின் முப்பெரும் பிரிவுகளாகும். இம்மூன்று சமணர்களின் வழிபாட்டு முறைகளிலும் தோற்றங்களிலும் சிற்சில வேறுபாடுகள் இருப்பினும் சமணத்தின் அடிப்படைக் கொள்கைகளில் இம்மூன்று பிரிவினரும் ஒத்த கருத்துடையவர்களாவே இருந்துள்ளனர்.

இல்லறத்தார்க்கும் துறவிகளுக்கும் தனித்தனியே வாழ்வியல், வழிபாட்டு முறைகளைச் சமணம் வகுத்துள்ளது. இல்லறத்தார் ‘சாவகர்’ என அழைக்கப்படுகின்றனர். மேற்கொண்டு வாழ்ந்த வாழ்வியல் முறைகளின் அடிப்படையில் இவர்களைப் பதினொரு வகையினராகச் சமண சமயம் குறிப்பிட்டுள்ளது.

நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகியன இல்லறத்தார்க்குரிய ‘மும்மணிகள்’ எனச் சமண சமயம் குறிப்பிடுகிறது.

இல்லறவாழ்க்கை மேற்கொண்டு வாழ்கின்ற மக்கள் ஐந்து அணுவிரதங்களையும், மூன்று குணவிரதங்களையும், நான்கு சிட்சாவிரதங்களையும் மேற்கொள்ள வேண்டும் எனச் சமணம் வலியுறுத்துகிறது. இல்லறத்தார்க்குரிய வாழ்வியல் முறைகளும் கடமைகளும் சமண ஆகமங்களில் இடம்பெற்றுள்ளன. இவை ஆடவர், பெண்டிர் ஆகிய இருதிறத்தார்க்கும் பொதுவானதாகும்.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழகத்தில் சமணசமயம் சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளது. சங்க இலக்கியங்களிலும் சமணசமயம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. தமிழ் நீதி நூலாசிரியர்கள், சமண ஆகமங்கள் வலியுறுத்திக் குறிப்பிட்ட வாழ்வியல் ஒழுக்கங்களைத் தம் நூல்களில் எடுத்துரைத்துள்ளனர்.

திகம்பர சமணத்தார் படைத்த தமிழ் இலக்கண, இலக்கியங்கள் பலவாகும். தமிழ்நாட்டில் திகம்பர சமண சமயமே சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளது. மகளிரின் வீடுபேறு குறித்த இருவேறு கொள்கைகள் சமணசமயத்தில் உள்ளன.

இல்வாழ்க்கை மகளிர்க்குரிய வாழ்வியல் முறைகளும், தீட்டுக் காலங்களும், வழிபாட்டு முறைகளும் சமண ஆகமங்களில் குறிப்பிடப் பட்டுள்ளன.

பெண்களும் துறவு வாழ்க்கை மேற்கொள்வதைச் சமணம் ஏற்றுக் கொள்கிறது. சமணசமயப் பொண்பாற் துறவிகள் ‘ஆர்யியைகள்’ எனப்பட்டனர். இவர்கள் சாமி, குரத்தி, பெருமாட்டி, ஆசாள், தலைவி, ஐயை, கவுந்தி, பைம்மை என்னும் பெயர்களால் போற்றப்பட்டுள்ளனர். சமணத் தீர்த்தங்கரர்களுக்குரிய யக்ஷிகளில் சிலர் தமிழகத்தில் பெண்தெய்வங்களாகப் போற்றப்பட்டுள்ளனர்.

இல்வாழ்க்கையில் கணவன் இறப்பிற்குப் பின்னரோ, குறிப்பிட்ட வயதிற்குப் பின்னரோ மகளிர் துறவு வாழ்க்கை மேற்கொள்வது குறித்த குறிப்புகள் தமிழ் இலக்கியங்களில் உள்ளன.

# சான்றெண் விளக்கம்

1. ஆர். பார்த்தசாரதி, சமணம், ப.4.
2. கனக.அஜிதாதாஸ், சிரே.தன்யகுமார், (தொ.ஆ.), ஜைனம் ஓர் அறிமுகம், ப.45.
3. குறள்.1.
4. T.S.ஸ்ரீபால்,(க.ஆ.),மஹாவீரரும் தீபாவளித்திருநாளும், ப.7.
5. மயிலை.சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.5.
6. சொ.சாந்தலிங்கம், மதுரையில் சமணம், பக். 16-17.
7. எ.எஸ்.ஜைன்சாஸ்திரி, மு.நூ. ப.19.
8. சொ.சாந்தலிங்கம், மு.நூ. ப.16.
9. மு.துரைசாமி, இரட்டைக் காப்பியத்தில் சமணம், ப.11.
10. ஆசாரிய ஸ்ரீ 108 விராக்சாகர் முனிவர், பரம திகம்பர ஜைனமுனிவர், ப.15.
11. மேலது. ப.16.
12. இளம்பூரணர், (உ.ஆ,.), தொல்காப்பியம், எழுத்ததிகாரம், ப.12.
13. சிவ.ஆதிநாதனார், (மொ.ஆ.), ஜைன தத்துவம், ப.13.
14. மேலது, ப.21.
15. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், சம்பந்தரும், சமணரும், ப.22.
16. மேலது.
17. திரு.வி.கலியாணசுந்தரனார், திரு.வி.க.வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.615.
18. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், சம்பந்தரும் சமணரும், ப.2.
19. மணிமேகலை, அடி.86-91.
20. மயிலை.சீனி.வேங்கடசாமி, ப.7.
21. A.சிம்மசந்திர ஜைன் சாஸ்திரி, சமணர் வழிபாட்டு முறை, ப.20.
22. மு.துரைசுவாமி. இரட்டைக் காப்பியத்தில் சமணம். ப.21.
23. மயிலை. சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும் ப.200.
24. மேலது, ப.201.

25. க.ப.அறவாணன், சமணம் வளர்த்த தமிழ் இலக்கணம், ப.222.

26. மணிமேகலை, 27:154-155.

27. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, (உ.ஆ.), மணிமேகலை, ப.430.

28. தக்கயாகப் பரணி, 376.

29. அருங்கலச்செப்பு, குறள். 61.

30. கனக.அஜிதாதாஸ், சிரே.தன்யகுமார், (தொ.ஆ.), மு.நூ. ப.12

31. அருங்கலச்செப்பு, 565.

32. மேலது, 66.

33. ஆசார்ய சுவாமி சமந்தபத்ரர், இரத்தின கரண்டக சிராவகாசாரம், ப.246.

34. அருங்கலச்செப்பு, 68.

35. ஸ்ரீ 108 விராக்சாகர் முனி மகராஜ், குழந்தை ஞானம், ப.80.

36. மேலது, ப. 144.

37. மயிலை.சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.19.

38. ஆசார்ய சுவாமி சமந்தபத்ரர்,. ப.253.

39. ஸ்ரீமத் அமிருத சந்திரசூரி ஆசாரியார், புருஷார்த்த ஸித்த உபாயம், ப.173.

40. கனக.அஜிதாதாஸ், சிரே.தன்யகுமார், மு.நூ. ப.16.

41. அருங்கலச்செப்பு, பா.83.

42. மேலது. பா.84.

43. அருங்கலச்செப்பு, 129.

44. ஸ்ரீமத் அமிருத சந்திரசூரி ஆசாரியார், ப.173.

45. அருங்கலச்செப்பு, 89.

46. மேலது. 6.

47. கனக.அஜிதாதாஸ், சிரே.தன்யகுமார், மு.நூ. ப.18.

48. அருங்கலச்செப்பு, 107.

49. ஸ்ரீ 108 விராக்சாகர் முனி மகராஜ், மு.நூ. ப.139.

50. தொல். பொருள். நூ.

51. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.62.

52. தொல். நூ.

53. மயிலை. சீனி.வேங்கடசாமி, மு.நூ. ப.36.

54. T.S.ஸ்ரீபால், தமிழகத்தில் ஜைனம், ப.3.

55. ஏ. ஏகாம்பரநாதன், கல்வெட்டில் சமணம், ப.1.

56. புறம்.

57. நற்றிணை, 141:

58. அகநானூறு. பா.123.

59. மதுரைக்காஞ்சி, 480-183.

60. நாலடியார், பா.53.

61. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.332.

62. அருங்கலச்செப்பு, 25.

63. மேலது, 26.

64. மயிலை.சீனி.வேங்கடசாமி, மு.நூ. ப.187.

65. அருங்கலச்செப்பு, 49

66. மேருமந்திரபுராணம். பா.738.

67. ஆசாரிய ஸ்ரீ 108 விராக்சாகர் முனிவர், பரம திகம்பர சமண முனிவர், ப.47.

68. புருஷார்த்த ஸித்த் உபாயம், ப.147.

69. மேலது. ப.52.

70. ஆசாரிய ஸ்ரீ 108 விராக்சாகர் முனிவர், மு.நூ.ப.26.

71. மேருமந்திர புராணம், பா.140:1-2.

72. சிலப்பதிகாரம், 15:115-117.

73. மயிலை. சீனி.வேங்கடசாமி, மு.நூ. ப.195.

74. மேலது, ப.196.

75. அருங்கலச்செப்பு, பா.30

# இயல் - 2

# ஐஞ்சிறு காப்பியங்களும் மகளிர் பாத்திரங்களும்

## 2.0. முன்னுரை

தமிழ்க் காப்பியங்களைப் பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள் என்னும் இரண்டு வகையாகப் பகுப்பர். காப்பிய நூல்களுக்கான இலக்கணங்களைப் பிற்கால இலக்கண நூலார் வகுத்துரைத்த பின்னர் இப்பகுப்பு முறைகள் தோன்றியிருக்க வேண்டும். தமிழில் ஐம்பெருங்காப்பியங்களும் ஐஞ்சிறு காப்பியங்களும் சமயச்சார்புடன் இயற்றப்பட்டுள்ளன என்பது வெளிப்படை. பிற்காலத்தில் தோன்றிய பெரும்பாலான காப்பியங்களும் சமயச் சார்புடனேயே விளங்கின. இவ்வியலில் காப்பிய நூல்களுக்கான இலக்கணம், தமிழ்க்காப்பியங்களின் பகுப்புமுறை, ஐஞ்சிறு காப்பியங்களின் கதைச் சுருக்கம், காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள் ஆகியன குறித்த செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

## 2.1.காப்பியம்

தமிழில் தொடர்நிலைச் செய்யுள்களால் அமைந்த நூல்களே பிற்காலத்தில் காப்பியம் என்ற பெயரில் வழங்கலாயின. தொடர்நிலைச் செய்யுள்களின் இலக்கணத்தை முதன்முதலில் பன்னிருபாட்டியல் மூன்று நூற்பாக்களில் குறிப்பிட்டுள்ளது.

**“வித்தெண் டுளிகொடி தலைவனொடு மேவி**
**ஒத்த வெள்ளை விருத்தம் அகவல்**
**வைத்த ஒருதொடை கொச்சக உறுப்பு**
**நடைபெற வருவது தொடர்நிலை என்ப”**[1]

'விதை, முளை, கொடி போன்றவற்றைப் பல்வேறு வரலாறுகள் கதைத் தலைவனைக் குறித்து இடம்பெற்று, வெண்பா, ஆசிரியப்பா, விருத்தப்பா ஆகியவற்றால் யாக்கப்படுவது தொடர்நிலைச் செய்யுளாகும்' என்பதை இதன்வழி அறியமுடிகிறது. 'ஒரு பொருள் குறித்த தொடர்நிலைச் செய்யுட்கள், பல பாடல்களால் அமைந்த நூலாகும். இந்நூலானது தலை, இடை, கடை என்னும் மூவகையில் அமைந்து வருதலும் உண்டு' என்பதைப் பன்னிருபாட்டியல்,

**"தொடர்நிலைச் செய்யுள் பாட்டுப்பல தொடுத்துத்**
**தலைஇடை கடையென நுவலவும் படுமே"**[2]

எனக் குறிப்பிட்டுள்ளது. இம்மூவகைத் தொடர்நிலைச் செய்யுள் நூல்களுள் தலையானதாக விளங்கும் தொடர்நிலைச் செய்யுள் பாடல்களின் இலக்கணத்தை,

**"அவற்றுள்,**
**தலைஎனப் படுபவை மலைவின் றாகி**
**அறம்பொருள் இன்பம் வீடெனும் இவற்றின்**
**திறந்தெரி மரபின் நீங்கா தாகி**
**வென்றிகொள் இருக்கை என்றிவை அனைத்தும்**
**சந்தி ஆகத் தந்துநிலை பெறுமே"**[3]

எனக் குறிப்பிடுகிறது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள் குறித்து நூலைக் கற்போர் தெளிவாக அறிதற்குத் துணைபுரிவனவாகத் தலைத் தொடர்நிலைச் செய்யுட்பாடல்கள் அமைதல் வேண்டும் என்பதை இந்நூலாசிரியர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

'காப்பியம்' என்ற சொல் தமிழ்ச்சொல்லாகும். அச்சொல் பிறமொழியினின்று தமிழுக்கு வந்த திரிபுச் சொல்லன்று என்பது அறிஞர் தமிழண்ணலின் கருத்தாகும். "காப்பியம் என்ற சொல் 'காவ்யா' என்ற

வடசொல்லின் திரிபன்று. தமிழாக்கமும் அன்று. காவியம் என்பதே அவ்வாறு தமிழாக்கப்பட்டது. தமிழில் முன்பே காப்பியம் என்ற சொல் வழக்கு உண்டு. காப்பியம், காப்பியாறு, காப்பியக்குடி என்பன முறையே ஊர், ஆறு, குடிப்பெயர்களாக விளங்கின. காப்பியனார், பல்காப்பியனார், காப்பியாற்றுக் காப்பியனார் என்பன மக்கட் பெயர்களாக வழங்கின”[4] என்று குறிப்பிட்டுள்ளார். காப்பியம் என்பது தமிழ்ச்சொல் என்பதை, “காப்பியம் என்ற சொல் வடசொல் என்று தமிழ்க் கலைக்களஞ்சியம் குறிக்கிறது. காப்பியம் தூய தமிழ்ச்சொல்லே. கவி எழுதுவது காவியம். காப்பியன் எழுதுவது காப்பியம். காப்பியம், காவியம் இரண்டுமே தமிழ்ச்சொற்கள்தாம். காவியத்தை வடநூலார், ‘காவ்யம்’ என்று குறிக்கவே, நாம் மிரண்டுவிட்டோம். கதையையும் சொல்லழகையும், உணர்வுகளையும் நூல்வடிவில் படைத்துக் காத்தலால், அவனுக்குப் பெயர் காப்பியன் என வந்தது”[5] என்று எஸ்.சௌந்தரபாண்டியன் காப்பிய நூலின் இலக்கணம் குறித்துக் குறிப்பிட்டுள்ளார்.

காப்பியங்கள் எவ்வாறு அமைதல் வேண்டும்? என்பதற்கான இலக்கணத்தைத் தண்டியலங்காரம் குறிப்பிட்டுள்ளது. தண்டியலங்கார நூலாசிரியர் பெருங்காப்பியத்திற்குத் தேவையான இருபத்து இரண்டு பண்புகளை,

**“பெருங்காப் பியநிலை பேசுங் காலை”[6]**

எனத் தொடங்கும் நூற்பாவால் குறிப்பிட்டுள்ளார். பெருங்காப்பியம் என்ற தொடரை நூற்பாவில் சுட்டும் தண்டியாசிரியர், ‘சிறுகாப்பியம்’ என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை.

**“அறமுத னான்கினும் குறைபா டுடையது**
**காப்பிய மென்று கருதப் படுமே”[7]**

இந்நூற்பா உணர்த்தும் கருத்திலிருந்து அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினுள் குறைபாடு உடையதாக விளங்குவது சிறுகாப்பியமாகும் என்பதை உய்த்தறிய முடிகிறது.

தமிழில் தோன்றிய ஐம்பெருங் காப்பியங்களுக்கும் ஐஞ்சிறு காப்பியங்களுக்கும் காலத்தால் பிந்தைய இவ்விலக்கண நூல் உணர்த்தும் கருத்துகளின் அடிப்டையில் தமிழில் முன்னர் தோன்றிய காப்பியங்களை ஆய்ந்து காப்பிய இலக்கணங்கள் குறித்து முடிவுக்கு வருதல் தவறாகும். இருப்பினும் இக்காப்பியக் கட்டமைப்பு முறைகள் தண்டியாசிரியர் குறிப்பிடும் காப்பிய இலக்கணங்கள் குறித்த வரையறைக்கு உதவியுள்ளன என்ற கருத்தை ஏற்கலாம்.

ஐம்பெருங்காப்பியம் என்ற தொடரை நன்னூல் உரையாசிரியர் மயிலை நாதர், ‘‘இனி இவ்வாறே ஆண்பாற் பொருட்பெயரும் பெண்பாற் பொருட்பெயரும் ஏனைப்பாற் பொருட்பெயரும் இடப்பெயரும், காலப் பெயரும், சினைப் பெயரும் பண்புப் பெயரும், தொழிற் பெயரும் மரபுப் பெயரும் வழுவாமல், ஐம்பெருங் காப்பியம், எண்பெருந் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் இவ் விலக்கியங்களுள்ளும் விரிந்த உரிச்சொற் பனுவல்களுள்ளும் உரைத்தவாறு அறிந்து வழங்குக’’[8] எனக் குறிப்பிட்டுள்ளார

### 2.2. ஐஞ்சிறு காப்பியங்கள்

சூளாமணி, நீலகேசி, யசோதரகாவியம். உதயணகுமார காவியம், நாககுமார காவியம், ஆகிய ஐந்தும் ஐஞ்சிறு காப்பியங்கள் எனப்படுகின்றன. சிறுகாப்பியத்தின் இலக்கணத்தைக் குறித்து வச்சணந்தி மாலையின் ஆசிரியர் குணவீரபண்டிதர்,

**“கருதுசில் குன்றினுமக் காப்பியமா மென்பர்**
**பெரிதறமே யாதி பிழைத்து – வருவதுதான்**
**காப்பிய மாகுங் குலவரவு காரிகை**
**யாப்பிற் புராணமே யாம்”**[9]

எனக் குறிப்பிடுகிறார். பெருங்காப்பிய இலக்கணங்களுக்கு உரியனவான அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினுள் சில குறைந்து, உறுப்புகள் முறைமாறி, குலவரவு முதலியவற்றைக் காட்டுவது காப்பியம் எனக் குறிப்பிடுகிறது. ''அறம், 'பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களுள் ஒன்றோ பலவோ குறைந்துவரின் அதனைச் சிறுகாப்பியம் என்பர்''[10] எனக் குறிப்பிடுவதிலிருந்து சிறுகாப்பியத்தின் இலக்கணத்தை அறியமுடிகிறது.

***2.2.1.சூளாமணி***

**'**சூளாமணி' தோலாமொழித்தேவரால் இயற்றப்பட்டது. இக்காப்பியத்தில் நாட்டுச் சருக்கம் முதல் முக்திச் சருக்கம் வரை பதிமூன்று சருக்கங்கள் உள்ளன. நூலில் 2131 செய்யுள்கள் உள்ளன. இந்நூலின் காலத்தைக் கி.பி.9ஆம் நூற்றாண்டு என இலக்கிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பர். வடமொழியிலுள்ள '**பிரதமாநுயோக மகாபுராணம்'** என்ற சமணசமய நூலில் கூறப்பட்டுள்ள பழைய கதை ஒன்றை அடிப்படையாக வைத்து இந்நூலைத் தோலாமொழித் தேவர் படைத்துள்ளார்.

**"செங்கண் நெடியான் சரிதமிது செப்பலுற்றேன்"**[11]

எனப் பாயிரத்தில் இந்நூலின் கதைத்தலைவன் குறித்து ஆசிரியர் குறிப்பிடுகிறார். 'சூளாமணி' என்பது தலையில் அணியும் ஓர் அணிகலனின் பெயராகும். இக்காப்பியத்தின் நான்கு இடங்களில் சூளாமணி என்ற சொல்லை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். சூளாமணி நூலின் சிறப்பினை மு.வரதராசனார், **"**செய்யுள்கள் எல்லாம் இனிய ஓசைநயம் வாய்ந்தவை. இயல்பான ஓட்டம் உடையவை. இவற்றின் தமிழினிமைக்காக இவற்றைப் பலரும் படித்துப் பாராட்டுவது வழக்கம்.''[12] எனக் குறிப்பிட்டுள்ளார்.

***2.2.1.1.கதைச் சுருக்கம்***

நாவலந்திருநாட்டின் ஒருபகுதியாகத் திகழ்வது ‘சுரமை’ என்ற நாடாகும். அந்நாட்டின் தலைநகரம் ‘போதனமாநகரம்’ ஆகும். அந்நகரைப் ‘பயாபதி’ என்ற மன்னன் ஆண்டுவந்தான். செங்கோண்மை வழுவாது ஆட்சிபுரிந்த பயாபதி மன்னனுக்கு, மிருகாபதி, சசி என்போர் மனைவியராவர். மிருகாபதி, விசயன் என்பவனையும் சசி, திவிட்டன் என்பவனையும் பெற்றெடுக்கின்றனர். விசயன், திவிட்டன் இருவரும் திருமண வயதை அடைகின்றனர். இந்நிலையில் ஒருநாள் பயாபதி மன்னன், ‘விண்ணுலகிலிருந்து யானை ஒன்று வந்து திவிட்டனுக்கு ஒரு வெண்மலர் மாலையினை அணிவிப்பதாகக் கனவு காண்கிறான். கனவின் பயனுரைக்கும் நிமித்திகன், ‘விச்சாதர வேந்தன் ஒருவன் தன் மகளைத் திவிட்டனுக்கு மணம் முடித்துக் கொடுப்பான். அவன் பொருட்டுத் தூதன் ஒருவன் விரைவில் வருவான்’ எனக் குறிப்பிடுகிறான்.

வித்தியாதர நாட்டிலுள்ள இரதநூபுரம் என்ற நகரத்தின் அரசன் சுவலனசடிக்கும் அவள் மனைவி வாயுவேகைக்கும் ‘சுயம்பிரபை’ என்ற மகளும், ‘அருக்க கீர்த்தி’ என்ற மகனும் உள்ளனர். மகளுக்குத் திருமணம் செய்துவிக்க எண்ணிய சுவலனசடி தன் நிமித்திகனுடன் சுயம்பிரபையின் திருமணம் குறித்து ஆய்ந்தான். சுவலனசடியின் நிமித்திகனான ‘சதவிந்து’ என்பவன் போதனமாநகரத்துத் திவிட்டனே சுயம்பிரபைக்கு ஏற்ற கணவனாவான் எனக் குறிப்பிட்டான். திவிட்டன் சில நாள்களில் ஒரு சிங்கத்தின் வாயைப் பிளந்து கொன்று தன் வீரத்தை உலகிற்கு உணர்த்துவான் என்றும் நிமித்திகன் மன்னனிடம் குறிப்பிட்டான். இதனால் மகிழ்ந்த சுவலனசடி, ‘மருசி’ என்ற தூதனைப் பயாபதி மன்னினிடத்தே அனுப்பித் தன் மகளைத் திவிட்டனுக்கு மணம் முடிக்க விரும்பும் தன்

உள்ளக்கிடக்கையைத் தெரிவித்தான். பயாபதி மன்னன் மகிழ்ந்து மணவினைக்கு ஒப்பினான்.

வித்தியாதர உலகின் வடபகுதியை ‘அச்சுவகண்டன்’ என்ற பேரரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் ‘பயாபதி’ மன்னனிடம் இறைப்பொருள் பெற்றுவருமாறு தன் தூதர்களை அனுப்பினான். ஆனால் பயாபதியின் மகனான திவிட்டன், அச்சுவகண்டனைப் பெரிதும் இகழ்ந்து தூதரை இறைப்பொருள் கொடுக்காது நாட்டை விட்டு அகற்றினான். இதனை அறிந்த அச்சுவகண்டனின் அமைச்சனான ‘அரிமஞ்சு’, ‘அரிகேது’ என்ற மாயவித்தைக் காரனை அனுப்பித் திவிட்டனை அழிக்கப் பணிக்கிறான். அவன் ஏவிய மாயச்சிங்கத்தைத் திவிட்டன் வாயைப் பிளந்து கொன்றான். திவிட்டன் சிங்கத்தைக் கொன்றழித்த செயலை அறிந்த சுவலனசடி, நால்வகைப் படைகள் புடைசூழ போதனமாநகரத்திற்குத் தன் மகளுடனும் அவள் தோழியருடனும் சென்றான். சுயம்பிரபை, திவிட்டனை விமானத்தலிருந்தவாறே கண்டு காதல் கொண்டாள். இருவருக்கும் திருமணம் இனிதே நிகழ்வுற்றது.

திவிட்டனின் மறச் செயல்களையும், அவன் சுயம்பிரபையை மணம் முடித்ததையும் அறிந்த அச்சுவகண்டன், மிகுந்த சினங்கொண்டு போருக்கு ஆயத்தமானான். சடிமன்னனின் தலைநகரையும் தீயிட முயன்றான். இதனை அறிந்த சுவலனசடி, அச்சுவ கண்டனை எதிர்த்துப் போரிடுவதே சிறந்தது என்று துணிந்து திவிட்டனைப் போருக்குத் தயார் செய்தான். அச்சுவகண்டனின் தூதர்கள், சுவலனசடி, பயாபதி ஆகிய இருவரிடமும் வந்து, சுயம்பிரபையை அச்சுவ கண்டனுக்கு மணம் செய்திடவும், திவிட்டனின் உயிரைத் திறையாகத் தருமாறும் வேண்டினர். சினங்கொண்ட திவிட்டன் போர்க்கோலம் பூண்டு, அச்சுவகண்டனின் தம்பியையும் இறுதிப் போரில் அச்சுவகண்டனையும் கொன்றொழித்தான். இதன்பின்னர் திவிட்டன்

அரசாட்சியை அடைந்தான். பின்னர் சுயம்பிரம்பை 'விசயன்' என்ற மகனையும், 'சோதிமாலை' என்ற மகளையும் பெற்றெடுத்தாள். மணப்பருவம் அடைந்த சோதிமாலை தன் மாமன் அருக்க கீர்த்தியின் மகனான அமிர்தசேனனை மணந்தாள். அருக்க கீர்த்தியின் மகளான சுதாரை, திவிட்டனின் மகனாகிய விசயனை மணந்தாள். பயாபதி மன்னன் தன் மக்களோடும், பெயரன்களோடும் இனிதே வாழ்ந்து வந்தான்.

முற்பிறவியல் செய்த நல்வினையின் காரணமாகவே தான் சிறந்த வாழ்க்கையினை அடைந்தமையை உணர்ந்த பயாபதி மன்னன், உலக வாழ்வின் நிலையற்ற தன்மையை உணர்ந்த பயாபதி மன்னன், சமண முனிவர் ஒருவரிடம் அறங்கேட்டுத் தவம் புரிந்து உலக வாழ்வை நீத்தான். திவிட்டன், தன் தமையன் விசயனுடன் இனிதாக இருந்து உலக உயிர்கள் மகிழும் வகையில் நல்லாட்சி நடத்தினான்.

### *2.2.1.2.*மகளிர் பாத்திரங்கள்

சூளாமணிக் காப்பியத்தில் மிருகாபதி, சசிதேவி, சுயம்பிரபை, வாயுவேகை, மாதவசேனை, வயந்த திலகை, அமிர்தபிரபை, நீலாங்கனை, கனகசித்திரை, மேகமாலினி, விச்சுவனின் தங்கை சோதிமாலை, அருக்ககீர்த்தியின் மனைவி சோதிமாலை, திவிட்டனின் - சுயம்பிரபையின் மகள் சோதிமாலை, சுதாரை, பிரிதிமதி, அச்சுவகண்டனின் மனைவியர், வானவ மகளிர் ஆகிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன.

### *2.2.1.2.1.* மிருகாபதி

பயாபதி மன்னனின் இரண்டு மனைவியருள் 'மிருகாபதி'யும் ஒருத்தியாவாள். இவளைப் பயாபதி மன்னனின் மற்றொரு மனைவியான 'சசி'யுடன் இணைத்தே காப்பிய ஆசிரியர் நூலில் அறிமுகம் செய்கிறார். மிருகாபதியும் சசியும் மங்கையர் குலத்திற்குத் திலகம் போன்று விளங்கியமையை,

**"பூங்குழை மகளிர்க் கெல்லாம் பொன்மலர் மணிக்கொம் பன்ன**

**தேங்குழன் மங்கை மார்கள் திலதமாயத் திகழ நின்றார்"**[13]

எனக் குறிப்பிட்டு, இருவரும் தமக்குள் எவ்விதப் பிணக்குமின்றி மன்னனின் உள்ளத்தில் ஒருவராக விளங்கியமையை ,

**"திருமகள் புலமை யாக்கும் செவ்வியென் றிவர்கள் போல**

**இருவரும் இறைவ னுள்ளத் தொருவரா யினிய ரானார்"**[14]

எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிடுகிறார். அரசியர் இருவரின் இளமைத்திறம் குறித்து,

**"முற்றா முலையினர் கலையின் முற்றியர்"**[15]

எனவும் குறிப்பிடுகிறார். பயாபதி மன்னனின் மனைவியர் இருவருள் மிருகாபதியே மூத்தவள் ஆவாள். இதனை,

**"தீங்கரும் பமிழ்த மூட்டித் தேனளாய்ப் பிழிந்த போலும்**

**ஓங்கிருங் கடலந் தானை வேந்தணங் குறுக்கு மின்சொல்**

**வீங்கிருங் குவவுக் கொங்கை மிகாபதி மிக்க தேவி"** [16]

என்ற பாடலிலடிகளில் தோலாமொழித்தேவர் விளக்குகிறார். மன்னன் விரும்பும் இனிய மொழிகளைப் பேசும் பண்புடையவளாக அவள் விளங்கியமையை இப்பாடற் கருத்து உணர்த்துகிறது. பெண்ணிற்கு வேண்டிய நற்குணங்கள் அனைத்தும் அமையப்பெற்றவளான மிகாதேவி 'விசயன்' எனும் மகனைப் பெற்றமையை,

**"பெண்ணிலாந் தகைப்பெருந் தேவி பேரமர்க்**

**கண்ணிலாங் களிவள ருவகை கைம்மிகத்**

**தண்ணிலா வுலகெலந் தவழ்ந்து வான்கொள**

**வெண்ணிலாச் சுடரொளி விசயன் றோன்றினான்"**[17]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

### *2.2.1.2.2. சசிதேவி*

சசிதேவி, பயாபதி மன்னனின் மற்றொரு மனைவியாவாள். இவள் காப்பியத் தலைவன் திவிட்டனின் நற்றாய் ஆவாள்.

**"தாங்கருங் கற்பின் றங்கை சசிஎன்பாள் சசியோ டொப்பாள்"[18]**

கற்பில் சிறந்தவளாகக் காப்பியத்தில் அறிமுகமாகும் சசிதேவி, இந்திரனின் மனைவியான இந்திராணிக்கு ஒப்பாகப் போற்றப்படுகிறாள். சசிதேவி, திவிட்டனைப் பெற்றெடுத்தமையை,

**"ஏரணங் கிளம்பெருந் தேவி நாளுறச்**
**சீரணங் கவிரொளி திவிட்டன் தோன்றினான்"[19]**

என்ற பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

### *2.2.1.2.3. வாயுவேகை*

சுவலனசடி மன்னனின் மனைவியான 'வாயுவேகை' என்ற பாத்திரத்தைக் காப்பியத்தில் நான்காவதாக இடம்பெற்றுள்ள இரதநூபுரச் சருக்கத்தில் தோலாமொழித்தேவர் அறிமுகம் செய்கிறார். சுயம்பிரபையின் தாயான வாயுவேகை, திருமகளைப் போன்ற அழகுடையவளாகவும், தூய்மையான பற்கள், சிவந்தவாய் ஆகிய உறுப்புநலன்களைப் பெற்றவளாகவும் திகழ்ந்தமையை,

**"மாய மாயநின் றான்வரை மார்பிடை**
**மேய பூமகள் போல விளங்கினாள்**
**தூய வாமுறு வற்றுவர் வாயவ'ள்**
**வாயு வேகையென் பாள்வளர் கொம்பனாள்"[20]**

எனும் பாடற்கருத்து புலப்படுத்துகிறது. சுவலனசடி மன்னனுக்கும் தேவியர் பலர் இருப்பினும், வாயுவேகையே பட்டத்தரசியாகத் திகழ்ந்தவளாவாள் என்பதை,

**"மெம்பொற் பட்ட மணித்தகொல் யானையின்**

**அம்பொற் பட்ட நறுங்குழ லார்க்கெலாம்**

**செம்பொற் பட்டஞ் செறித்த திருநுதல்**

**அம்பொற் பட்டுடை யாளணி யாயினாள்"[21]**

என்ற பாடல்வாயிலாகத் தோலாமொழித்தேவர் குறிப்பிட்டுப் போற்றுகிறார். சுவலனடிக்கும் வாயுவேகைக்கும் மக்களாக அருக்ககீர்த்தியும் சுயம்பிரம்பையும் மக்களாகத் தோன்றுகின்றனர்.

### 2.2.1.2.4. சுயம்பிரபை

வித்தியாதர உலகன் மன்னனான சுவலனசடியின் மகள் 'சுயம்பிரபை' சூளாமணிக் காப்பியத்தின் முதன்மை மகளிர் பாத்திரமாக இவளைக் குறிப்பிடலாம்.

**"தாம மல்லிகை மாலைச் சயம்பவை**

**காம வல்லியும் காமுறத் தோன்றினாள்"[22]**

எனச் சுயம்பிரபை காப்பியத்தில் அறிமுகமாகிறாள். சுயபிரம்பை பிறந்த பின்னரே உலகின்கண் மங்கைமார் பிறப்பும் தொழப்படும் தன்மை உடையதாயிற்று என்பதைக் கவிக்கூற்றாகத் தோலாமொழித்தேவர்,

**"மங்கை மார்பிறப் பும்மட மாதரிற்**

**நங்கை யாற்றொழப் பாடு நவின்றதே"[23]**

எனும் பாடலடிகளில் குறிப்பிடுகிறார்.

### 2.2.1.2.5. மாதவசேனை

திவிட்டனின் நற்றாயான சசிதேவியின் தோழி மாதவசேனை ஆவாள். இவளின் அழகுத் திறம் குறித்து,

**"மாதுலாஞ் சாயலென்ன மாதவ சேனை யென்பாள்"[24]**

எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிடுகிறார். இவள் விரைவாக ஓவியம் தீட்டுவதில் வல்லவள். ஓவியம் தீட்டும் கலையில் மகளிரும் சிறப்புற்றுத் திகழ்ந்தமையை மாதவசேனை வாயிலாக அறியமுடிகிறது. இதனை,

**"மற்றவர் காணும் போழ்தின் மாதவ சேனை யென்பாள்**

**சுற்றிய பளிங்கிற் சோதிச் சுவர்மிசை யன்னா டோன்ற**

**இற்றிவ ளுருவ மென்றாங் கிதயத்து ளெழுதி வைத்துப்**

**பிற்றையோர் பலகை தன்மேற் பெய்வளை யெழுத லுற்றாள்"[25]**

என்ற பாடற்கருத்தின்வழி அறியமுடிகிறது.

**2.2.1.2.6. வயந்த திலகை**

காப்பியத் தலைவியான சுயம்பிரபையின் தோழியருள் 'வயந்த திலகை' என்பவளும் ஒருத்தியாவாள். சுயம்பிரபை மங்கைப் பருவம் அடைந்த செய்தியை 'வயந்த திலகை' என்ற தோழி மன்னனுக்கு உணர்த்தியமையை,

**"நங்கையாள் வளர்ந்து காம நறுமுகை துணர வைத்து**

**மங்கையாம் பிராய மெய்தி வளரிய நின்ற நாளுள்**

**பைங்கண்மால் யானை யாற்குப் பருவம்வந் திறுத்த தென்றாள்**

**வங்கவாய்ப் பவழச் செவ்வாய் வயந்தமா திலகை யென்பாள்"[26]**

எனும் பாடல் வழி அறியமுடிகிறது.

**2.2.1.2.7. அமிர்தபிரபை**

சுயம்பிரபையின் மற்றொரு தோழி அமிர்தபிரபையாவாள். சுயம்பிரபையின் உள்ளத்தை உணர்வதில் வல்லவளாகக் காப்பியத்தில் அமிர்தபிரபை படைக்ககப்பட்டுள்ளாள். 'மங்கலத்தோழி' என்ற அடைமொழியால் அமிர்தபிரபை சிறப்பிக்கப்படுகிறாள். சுயம்பிரபை மாமியாரடிகளைப் போற்ற விரும்பியதை,

**"மங்கலத் தோழி கூறும் மாமியா ரடிக டம்மை**

**எங்கண்மெய்ச் செய்கை யாக விணையடி பணிமி னென்றாள்"[27]**

என அமிர்தபிரபை குறிப்பிடுகிறாள்.

### *2.2.1.2.8. நீலாங்கனை*

*சூளாமணிக் காப்பியத்தின் எதிர்நிலைத் தலைவன் என்ற நிலையில் விளங்கும் அச்சுவக் கண்டனின் தாய் 'நீலாங்கனை' என்பவளாவாள். இவளைக் குறித்த அறிமுகம் காப்பியத்தில்,*

**"மன்னவன் மயூர கண்டன் மற்றவன் தேவிமாருள்**
**மின்னவிர் மருங்கு னீலாங் கனையென விளங்கி நின்றா**
**ளன்னவள் புதல்வன் கண்டா யச்சுவக் கிரீவ னென்பான்"**[28]

*என இடம்பெற்றுள்ளது. மயூரகண்டன் மனைவியாக நீலாங்கனை குறிப்பிடப்பட்டுள்ளாள். மயூரகண்டன் என்பவன் அவன் தேவிமாருள் நீலாங்கனை என்ற பட்டத்துத் தேவியின் மகனே அச்சுவக்கிரீவன் என்பது குறிப்பிடத்தக்கது.*

### *2.2.1.2.9. கனகசித்திரை*

*அச்சுவக்கிரீவனின் பட்டத்தரசி 'கனக சித்திரை' என்பவள் ஆவாள். பெண்களுக்கு வேண்டிய அழகுநலன்கள் மிக்கவளாகவும், அச்சுவக்கண்டனின் இன்பக் காதலியாகவும் கனக சித்திரை திகழ்ந்தமையை,*

**"கண்ணார் கோதைக் காமரு வேய்த்தோட் கனகப்பேர்**
**மண்ணார் சீர்த்திச் சித்திரை யென்னு மடமாதின்**
**றெண்ணா ரின்பக் காதலி யாகி யியல்கின்றாள்**
**பெண்ணார் சாயல் பெற்றன டேவிப் பேறுபட்டம்"**[29]

*என்ற பாடல்வழி அறியமுடிகிறது.*

### *2.2.1.2.10. மேகமாலினி*

*சுயம்பிரபைக்குக் கணவனாக அமையத்தக்கவன் யார்? என்பதைக் குறித்து மன்னன் சுவலனசடிக்கும் அமைச்சர்களுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலில் சுரேந்திரகாந்தத்து மன்னன் மேகவாகணனின்*

மனைவி மேகமாலினி. இவள் விச்சுவன் தாயாகக் காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளாள். மேகமாலினியின் அழகுநலனை,

**"தோகை மாமயில் போற்சுரி கூந்தலாள்**

**மேக மாலினி யென்றுரை மிக்குளாள்"[30]**

எனக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. மேகமாலினியின் தெய்வப்பற்று காரணமாகவே அவளுக்கு விச்சுவன் மகனாகத் தோன்றினான் என்பதை,

**"தேவி மற்றவ டெய்வம் வழிபட**

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

### 2.2.1.2.11. சோதிமாலை

'சோதிமாலை' என்ற பெயரில் மூன்று பெண்பாத்திரங்கள் சூளாமணிக் காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளனர்.

1. விச்சுவனினின் தங்கை சோதிமாலை
2. அருக்ககீர்த்தியின் மனைவி சோதிமாலை
3. திவிட்டனின் - சுயம்பிரபையின் மகள் சோதிமாலை

### 2.2.1.2.11.1. விச்சுவனின் தங்கை சோதிமாலை

விச்சுவனின் தங்கை 'சோதிமாலை' என்பவளாவாள். இவளின் அழகு நலன் குறித்துக் காப்பியத்தில்,

**"நம்பி தங்கை நகைமலர்க் கற்பகக்**

**கொம்பி னன்னவள் கொங்கணி கூந்தலாள்**

**அம்பி னீண்டரி சிந்திய மாக்கயல்**

**வம்பி னீண்டமை வாணெடுங் கண்ணினாள்"[31]**

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது. அமைச்சனான சுதசாகரன், சுயம்பிரபையை விச்சுவனுக்கு மணம் செய்வித்து, விச்சுவனின் தங்கையான சோதிமாலையை அருக்ககீர்த்திக்கு மணம் செய்து வைக்கலாம் என்ற

கருத்தை மன்னனுக்கு உணர்த்துகிறான். பெண்கொடுத்துப் பெண் எடுக்கும் வழக்கம் அன்றைய சமூகத்திலிருந்ததென்பதை,

**"வெம்பு மால்களி யானை விலக்குநீர்**
**நம்பி ஞாயிறு சேர்பெய ராற்கணி**
**அம்பி னீளரி வாணெடங் கண்ணவள்**
**வம்பு சேர்முலை வாரி வளாகமே"**[32]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

### *2.2.1.2.11.2.* அருக்ககீர்த்தியின் மனைவி சோதிமாலை

சுயம்பிரபையின் அண்ணனான அருக்ககீர்த்தி, சோதிமாலை என்ற பெண்ணை மணந்த செய்தி 'சுயம்வரச் சருக்கத்தில்' இடம்பெற்றுள்ளது. இவள் சுரேந்திரகாந்தத்து மன்னன் மகளாவாள்.

### *2.2.1.2.11.3.* திவிட்டன் - சுயம்பிரபையின் மகள் சோதிமாலை

திவிட்டன், சுயம்பிரபை ஆகியோரின் மகளான சோதிமாலை, சூளாமணிக் காப்பியத்தின் பத்தாவது சருக்கமான சுயம்வரச் சருக்கத்தில் அறிமுகமாகிறாள்.

**"தெய்வம் பேணிப் பெற்றனர் பேணும் திருவேபோல்**
**மெய்யின் சோதி சூழொளி மின்னின் பெயராளும்"**[33]

ஆண்மகனான விசயனைப் பெற்றபின்னர், பெண்குழந்தைக்காகத் தெய்வத்தை வழிபட்டு வேண்டிச் சோதிமாலையை சுயம்பிரபை பெற்றெடுத்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

### *2.2.1.2.12.* சுதாரை

அருக்ககீர்த்தியின் மகள் சுதாரை. இவள் தன் அத்தை சுயம்பிரபையின் மகனான விசயனைச் சுயம்வரத்தின் வாயிலாகத் திருமணம் செய்கிறாள். சுயம்வரநாளில் தோழியர் சுதாரையிடம் மன்னர் பலரின் வரலாற்றை விரித்துரைக்கின்றனர்.

### *2.2.1.2.13. பரீதிமதி*

விச்சுவன் பழம்பிறப்பில் 'விசயபத்திரன்' என்ற பெயரில் சயசேனன் என்ற மன்னனுக்கும் பிரீதிமதி என்பவளுக்கும் மகனாகப் பிறந்தவன். விச்சுவனின் முற்பிறவித் தாயான பிரீதிமதி எனும் பெண்பாத்திரம் குறித்த செய்தி,

**"பங்கயப் பழன வேலிப் பவகிரி யரசன் பைந்தார்**
**தங்கிய தடங்கொண் மார்பன் சயசேன னவற்குத் தேவி**
**செங்கஙு னெடங்கட் செவ்வாய்ப் பிரீதிமதி பயந்த காளை**
**வெங்களி யானை வல்ல விசயபத் திரனென் பானே"**[34]

எனச் சூளாமணிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

### *2.2.1.2.14. அச்சுவகண்டன் மனைவியர்*

அச்சுவகண்டனின் மனைவியர் குறித்த செய்திகள் அரசியற்சருக்கத்தில் இடம்பெற்றுள்ளன. ஆனால் அவன் மனைவியரின் பெயர்கள் காப்பியத்தில் குறிப்பிடப்படவில்லை.

"**பொன்னவிர் பூங்குழையார் பொங்கேந் திளமுலையார்"**
**மின்விர் நுண்ணிடையார்**[35]

எனப் பாடலில் அவர்தம் அழகுநலன் குறிப்பிடப்பட்டுள்ளது.

### *2.2.1.2.15. வானவ மகளிர்*

இரதநூபுரச் சருக்கத்தில் வானுலக மங்கையர் இயல்புகள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. வானுலக நங்கையர் நீண்ட கூந்தலை உடையவர்கள் என்பதை,

**"தொக்க வானவர் சூழ்குழ லாரொடும்"**[36]

என்ற பாடற்கருத்தின் வாயிலாகவும் கின்னர வகுப்புத் தேவ மகளிரின் அழகுநலன் குறித்து,

**"வளரும் பூண்முலை யாரொடு கைகலால்"**[37]

**"கொங்கை வாரிகள் மேற்குதி கொள்ளுமே"**[38]

என்னும் பாடலடிகள் வாயிலாகவும் அறியமுடிகிறது.

### 2.2.2. நீலகேசி

நீலகேசியின் ஆசிரயர் பெயரை அறிய இயலவில்லை. இந்நூலைத் தாம் படைத்தற்குரிய காரணம் குறித்து நூலாசிரயர் நூலின் அவையடக்கச் செய்யுளில்,

**“பண்டாக மத்துட் பயிலாவுரை யென்று மிக்கார்**
**விண்டீங் கிதனை வெகுளார்விடல் வேண்டு வன்யான்**
**தண்டா மரைமே னடைந் தான்றடந் தாள் வணங்கிக்**
**கண்டேன் கிடந்தேன் கனவின்னிது கண்ட வாறே”**[39]

எனக் குறிப்பிட்டுள்ளார். நூலில் உரைக்கபட்ட நிகழ்வுகளனைத்தையும் தாம் கனவில் கண்டவாறே விரித்துரைத்ததாகக் குறிப்பிடும் நூலாசிரியர், சமண ஆகமங்களில் இந்நூல் குறித்த கருத்துகள் இல்லை என்பதையும் தெளிவுறுத்துகிறார். இக்காப்பியத்திற்குச் சமயதிவாகர வாமன முனிவர் உரை எழுதியுள்ளார். இந்நூலைக் குறித்து விரிவாக ஆய்ந்த யு.சக்கரவர்த்தி, இந்நூலின் காலத்தைக் கி.பி. ஒன்றாம் நூற்றாண்டிற்கும் ஐந்தாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலமாகக் கருதுகிறார்.[40] நீலகேசி கி.பி.பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த நூலென்று எஸ்.வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகிறார். ஆவண நகரத்தின் ‘நாதகுப்தனார்’ என்ற சமணசமய ஆசிரியரை ‘நீலகேசி’ என்ற பெண்ணொருத்தி வாதத்தில் வென்றாள் என்பதைக் கேட்டுச்சினந்த சமணர்கள் படைத்த தமிழ்க்காப்பியம் நீலகேசியாகும். இந்நூலை ‘நீலகேசித் தெருட்டு’ என்ற பெயரிலும் வழங்குவர். ‘‘இது குண்டலகேசி போல் ஓர் பெண்ணின் செய்தி கூறி அவள் பல சமயங்களை வென்றமை கூறுவது. இதற்கு நீலகேசி விருத்தி, சமயதிவாகரம் எனும் ஒரு உரையும் உண்டு’’[41] என இந்நூல் குறித்து ஆ.சிங்காரவேலு முதலியார் குறிப்பிடுகிறார். இந்நூலின் சிறப்புக் குறித்து

சரளா இராசகோபாலன், “இந்நூல் சமண சமயத்தைப் பரப்பத் தமிழில் தோன்றிய முதல் நூல். பேயாக இருந்தவள் சமயத் தலைவியாக மாற்றம் பெற்ற புதுமை உடையது. இன்றைய வழக்காடு மன்றங்களின் அமைப்பு முறை நீலகேசியில் காணப்படுகிறது. அதனால் வாதப் போரில் வெற்றி பெறுவதற்கு ஏற்றமுறையில், சொல்வன்மை உடையவளாக நீலகேசி படைக்கப் பட்டிருக்கிறாள்”[42] எனக் குறிப்பிடுகிறார்.

### 2.2.2.1. நீலகேசி நூலமைப்பு

இந்நூல் தருமவுரைச் சருக்கம் முதல் பூதவாதச் சருக்கம் வரை பத்துச் சருக்கங்களைக் கொண்டதாக அமைந்துள்ளது. நூலில் 894 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. நூலின் பாடல்கள் விருத்தப்பாக்களால் அமைந்துள்ளன. ஐஞ்சிறு காப்பியங்களில் பெண்பாத்திரத்தின் பெயரால் அமைந்த ஒரே காப்பியம் நீலகேசி ஆகும். ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகக் கருதப்படும் குண்டலகேசிக்கு எதிரான தருக்க நூல் என்று இந்நூலைக் குறிப்பிடுவர். நூலாசிரியர் காலத்தில் தமிழக மக்கள் பின்பற்றிவந்த பல்வேறு சமயங்கள் பற்றிய செய்திகளும் நூலில் இடம்பெற்றுள்ளன. அச்சமயக் கொள்கைகள் அனைத்தையும் உரிய முறையில் மறுத்து சமணசமயத்தின் மேன்மையை நிலைநாட்டுவதை இந்நூலாசிரியர் தம் குறிக்கோளாகக் கொண்டு இந்நூலைப் படைத்துள்ளார்.

### 2.2.2.2. கதைச் சுருக்கம்

நூலின் முதற்கண் இடம்பெற்றுள்ள தருமவுரைச் சருக்கத்தில் புண்டருவருத்தன மக்களுக்கு நல்லறங்களைக் கற்பித்த முனிச்சந்திர பட்டாரகரை, நீலகேசி பேய் வடிவில் அச்சுறுத்தி அங்கிருந்து அகற்ற முயல்கிறாள். அம்முயற்சியில் தோல்வியுற்ற அவள், இளவரசியான ‘காமலேகை’ உருவில் முனிவரை பலவாறு மயக்க முயன்று இறுதியில்

தோல்வியடைகிறாள். தம் தவ வலிமையால் நீலகேசியின் செயலை உணர்ந்த முனிவர், சமண சமய ஒழுக்கங்களையும் அறங்களையும் கற்பிக்கிறார். முனிவர் உரைத்த தருமங்களைக் கேட்டு, மனம் மாறிய நீலகேசி, தன் பேயுருவை விடுத்துத் தான் செய்த தீவினைகளுக்குரிய தீர்வினை முனிவரிடம் வேண்டுகிறாள். நீலகேசிக்கு இரங்கிய முனிவர், நாட்டின் அனைத்து இடங்களுக்கும் சென்று, சமணசமயக் கொள்கைகளை யாவருக்கும் தெரிவிக்குமாறு கூறி அவளை உய்வித்தார். முனிவரிடம் அறங்கேட்டுணர்ந்து மனம் மாறிய நீலகேசி 'குண்டலகேசி'யை வாதத்தில் வென்ற செய்திகள் 'குண்டலகேசி வாதச் சருக்கத்தில் இடம்பெற்றுள்ளன. புத்தசமயத்தார் ஊன் உண்ணுதலைத் தீவினை என்று கூறுதலில்லை. சான்றோர் மேற்கொள்ளும் நோன்பினையும் போற்றுவதில்லை. பிறர் பொருளைக் கவரும் நோக்கம் கொண்ட கணிகையரைப் போன்று மக்களுடைய அறிவுச் செல்வத்தை அழித்தொழிப்பவன் புத்தன் என்னும் கருத்துகள் இச்சருக்கத்தில் இடம்பெற்றுள்ளன.

தென் பாஞ்சால நாட்டில் உள்ள 'காம்பிலி' எனுமிடத்தில் புத்தசமயச் கொள்கைகளைக் கற்பித்துவந்த குண்டலகேசியிடம் தான் வாதம் செய்ய உள்ளதை நீலகேசி மன்னனுக்கு உணர்த்திய பின்னர் குண்டலகேசியுடன் வாதம் செய்கிறாள். இச்சருக்கத்தில் புத்தரின் இல்வாழ்க்கைகுறித்த செய்திகளையும் புத்தர் ஜாதகக் கதைகளையும் எடுத்துரைத்து நீலகேசி வாதம் செய்து குண்டலகேசியை வாதத்தில் வெல்கிறாள்.

குண்டலகேசியின் ஆசிரியரான அருக்கச் சந்திரனை நீலகேசி வென்ற கதை 'அருக்கச் சந்திர வாதச் சருக்கத்தில்' இடம்பெற்றுள்ளது. 'வினைய பிடகம்' என்ற புத்தசமய நூற்கருத்தை அருக்கசந்திரன் எடுத்துரைக்க அந்நூற்கருத்துகளை மறுத்து நீலகேசி அறவுரை பகர்கிறாள். பின்னர் நீலகேசி, அருக்கசந்திரனுக்கு அறவுரை கூறிய முனிவர் 'மொக்கலன்'

என்பதால் மொக்கலனிடம் வாதம் செய்யச் செல்கிறாள். மொக்கலவாதச் சருக்கத்தில் இடம்பெற்றுள்ள சமண, பௌத்த சமயக் கோட்பாட்டு மோதல்கள் குறித்து, ''புத்த மதத்தினர் சமண மதத்து மீது விடுத்த கணைகள் பல இதில் வருகின்றன. இக்கேள்விக் கணைகளும் தாக்குதல்களும், மறைந்து போன குண்டலகேசிக் காப்பியத்தில் இருந்திருக்கலாம் என எண்ண இடம் உண்டு''[43] என எஸ்.சௌந்தரபாண்டியன் குறிப்பிடுகிறார். இச்சருக்கத்தின் வாயிலாக புத்தனின் முதல் மாணவன் பதுமபுரத்தைச் சேர்ந்த 'மொக்கலன்' என்பதை அறியமுடிகிறது. நூலின் ஐந்தாவது சருக்கமான புத்தவாதச் சருக்கத்தில் கபிலபுரம் என்ற நகரில் உலக மக்களுக்கு மயக்கத்தை விளைவிக்கின்ற கொள்கைகளை அறிவுறுத்திய புத்தனிடம் நீலகேசி வாதம் புரிகிறாள். உலக மக்களுக்கு அவன் அறிவுறுத்திய நூல் கருத்துகள் குறித்து நீலகேசி சொற்போர் புரிகிறாள். வாதத்தின் இறுதியில் புத்ததேவன் நீலகேசியைப் பாராட்டுகிறார்.

நீலகேசி, ஆசிவக சமயத் துறவியாகிய பூரணனைச் 'சமதண்டம்' என்ற ஊரில் வாதத்தில் வென்ற நிகழ்வுகள் 'ஆசிவக வாதச் சருக்கத்தில் கூறப்பட்டுள்ளன. ஆசிவக சமயம், சமணசமயப் பிரிவுகளில் ஒன்று என்று கூறுவார் கருத்தை நீலகேசி ஆசிரியர் ஏற்கவில்லை. ஆசிவக சமயத்தின் முதல்வன் 'மற்கலி' ஆவான். ஆசிவக சமயத்தார்க்கு உரிய ஆகம நூல் 'நவகதிர்' எனப்படும். இதனை,

**''என்றலு மற்கலி தானே யிறையினி**
**ஒன்பது வாங்கதிர் நூல்யா முடையென''**[44]

என்ற பூரணன் கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது. சமணசமயக் கோட்பாடுகளிலிருந்தே ஆசிவக சமயத்தார் கொள்கைகள் உருப்பெற்றன என்பதை,

''**அயலியர் தாமல்ல வாசீ வகர்கள்''**[45]

எனும் பூரணன் கருத்திலிருந்து அறியமுடிகிறது. இருப்பினும் சமண ஒழுக்கங்களிடமிருந்து ஆசிவர்கள் வேறுபட்டமையால் அவர்பால் சென்று நீலகேசி வாதம் புரிகிறாள். ஒக்கலி, ஓகலி என்னும் ஆசிவர்கள் போற்றும் தெய்வங்களை ஏற்காத நீலகேசி ‘மற்கலி’யைப் போன்று அவைகளும் பேசாத்தெய்வங்களே எனக் குறிப்பிடுகிறாள். அருகப்பெருமானின் ஒன்பது ஆகமங்கள் குறிப்பிடுவனவற்றைப் பூரணனுக்கு உணர்த்துகிறாள். இறுதியில் பூரணனை நீலகேசி வெல்கிறாள்.

பின்பு நீலகேசி அத்தினாபுரம் என்ற நகரத்திலுள்ள சாங்கிய சமயக் கணக்கன் ‘பராசுரன்’ என்பவனிடம் வாதம் செய்கிறாள். இச்செய்திகள் சாங்கிய வாதச் சருக்கத்தில் இடம்பெற்றுள்ளன. சாங்கிய தத்துவங்களைப் பராசரன் நீலகேசியிடம் எடுத்துரைக்கிறான். சாங்கியதத்துவங்கள் உலகிற்கு எவ்வகையிலும் பொருத்தமற்றவை, பயனற்றவை எனக் குறிப்பிடும் நீலகேசி,

**“பேடிகள் சாரினும் பிள்ளைப் பெறாமையை**

**நாடியுங் காணென்று நன்னுத னக்காள்”**[46]

பேடியர் இருவர் இணைந்த பிள்ளை பெறாமையைப் போன்று சாங்கிய வாதத் தத்துவங்களினால் பயனில்லை என்பதை எடுத்துரைத்து, அவனை வென்று பராசரனிடம் சாங்கியரின் இருபத்து ஐந்து தத்துவங்களைவ விட்டொழித்து அருகப் பெருமானின் திருவடிகளை வழிபாடு வேண்டுகிறாள்.

வைசேடிக வாதச் சருக்கத்தில் நீலகேசி, ‘உலோகசித்து’ என்ற துறவியிடம் வாதாடுகிறாள். வைசேடிகக் கொள்கையை உருவாக்கியவர் ‘கணநாதர்’ என்பவராவார். உலோகசித்து நீலகேசியிடம் தன் சமயக் கருத்துகளை விரித்துரைத்தான். ஐந்து பூதங்கள், திசை, மனம் காலம், உயிர், ஆகிய ஒன்பது பொருள்களின் பண்புகளை உலோகசித்து விரித்துரைத்தான். அவையாவற்றையும் நீலகேசி மறுத்து உண்மை

நிலையை அவனுக்கு விளக்கினாள். அவனைத் தனது வைசேடிக நெறியிலிருந்து விலக வைத்து, சமணசமய அறங்களை அறிவுறுத்துகிறாள்.

‘காகந்தி’ என்ற ஊரில் வாழ்ந்த ‘பூதிகன்’ என்ற பார்ப்பனனுடன் வேதங்கள் குறித்து நீலகேசி செய்த சொற்போர் குறித்த செய்திகள் ‘வேதவாதச் சருக்கத்தில் இடம்பெற்றுள்ளன. நீலகேசியின் மொழிகளைக் கேட்ட பூதிகனும் அவன் மாணாக்கர்களும் வேதத்தின் மொழிகள் பொய்யுரைகள் என்பதை உணர்ந்து ஆருகதர் தத்துவங்களை ஏற்கின்றனர்

நீலகேசிக் காப்பியத்தின் இறுதிச் சருக்கமான பூதவாதச் சருக்கத்தில் நீலகேசி ‘பிசாசகன்’ என்ற பூதவாதியுடன் சொற்போர் நிகழ்த்துகிறாள். ‘உலகம் என்பது ஐம்பெரும்பூதங்களின் கூட்டம்’ என்பதை பிசாசகன் நீலகேசியிடம் எடுத்துரைத்து இவற்றை அறியாதவர் அறிவற்றவரே எனக் குறிப்பிடுகிறான். நீலகேசியின் அறவுரைகளைக் கேட்ட பிசாசகன் நீலகேசியைப் போற்றி மொழிவதுடன் காப்பியம் நிறைவடைகிறது.

### *2.2.2.3.* பெண்பாத்திரங்கள்

இந்நூலில் நீலகேசி, குண்டலகேசி, காமலேகை என்னும் மூன்று பெண்பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன.

#### *2.2.2.3.1.* நீலகேசி

‘நீலகேசி’ என்பவள் பேய் வடிவில் இருக்கும் சிறுதெய்வமாகக் காப்பியத்தில் அறிமுகம் செய்யப்படுகிறாள்.

> **“ஆய்நீல வுண்க ணவளா யடங்காமை செய்யும்**
> **பேய்நீல கேசி பெரியோனறங் கொண்ட பின்னைத்**
> **திநீல வுள்ளந் திரிந் தேறு திருவத்தளாய்**
> **மாஞால மெல்ல மற மாற்றிய மாட்சியாளா”[47]**

இப்பாடலில் இடம்பெற்றுள்ள ‘அவளாய்’ என்பதற்கு உரையாசிரியரான சமயதிவாகர வாமன முனிவர் ‘பழையனூர் நீலகேசி என்றவாறு’[48] என விளக்கம் அளித்துள்ளார். இந்நீலகேசி பெரியோனாகிய முனிச்சந்திர பட்டாரகரின் அறவுரையைக் கேட்ட பின்னர் மனம் மாறிச் சமண மதக் கொள்கையைப் பரப்புகிறாள். பல்வேறு சமயவாதிகளை வெல்லும் அறிவுத்திறன் மிக்க பாத்திரமாக நீலகேசியைக் காப்பிய ஆசிரியர் படைத்துள்ளார்.

### 2.2.2.3.2. குண்டலகேசி

நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெறும் இரண்டாவது பெண்பாத்திரம் ‘குண்டலகேசி’ ஆவாள். புத்தசமயப் பிக்குணியாகச் சருக்கத்தில் குண்டலகேசி அறிமுகமாகிறாள். தன்னோடு சொற்போர் நிகழ்த்துதற்கு அடையாளமாக நாவல் மரத்தினது கிளையை அறுத்து வந்து நட்டு குண்டலகேசி வீற்றிருந்ததை,

**“தண்டழைய பொழில்நாவற் சாகைநட் டுரைபெறாக்**

**குண்டலகே சிப்பெயரைக் குறியாக வேகொண்டாள்”**[49]

என்ற பாடல் கருத்து புலப்படுத்துகிறது.

மகளிர் முன்னிலையில் நீலகேசியுடன் வாதத்தை முதலில் தொடங்கிய குண்டலகேசி தான் வழிபடும் இறைவன் குறித்தும், அவன் நுதலிய நூல் குறித்தும் எடுத்துரைத்தாள்.

**“யாதனையும் தான்வேண்டா னயலார்க்கே துன்புற்றான்**

**போதியா னெம்மிறைவன் பொருந்தினா ருயக்கொள்வான்”**[50]

எனப் புத்தபெருமானியல்பை எடுத்துரைக்கிறாள். நீலகேசியிடம் புத்தசமயக் கொள்கைகளை விரித்துரைக்கும் தவப்பெண்ணாகக் காப்பியத்தில் குண்டலகேசி படைக்கப்பட்டுள்ளாள்.

நீலகேசியிடம் சொற்போரில் தோல்வியுற்ற குண்டலகேசி தனக்கு அறமுரைத்த அருக்கச்சந்திரன் எனும் பௌத்தத் துறவியைக் குறித்து,

**"அருக்கசந் திரனென்னு மவாச்சிய னெனச் சொன்னாள்"**[51]

எனக் குறிப்பிடுகிறாள். வாதத்தில் தோற்ற குண்டலகேசியை நகரத்தார் ஊரின் புறத்தே விடுக்கின்றனர். இருப்பினும் நீலகேசி கொண்டிருந்த சமணசமயக் கொள்கைகளை ஏற்று சமயமாற்றம் செய்யப்பட்டவளாகக் குண்டலகேசியை நீலகேசி ஆசிரியர் நூலில் படைக்கவில்லை. குண்டலகேசியின் அழகுநலன்கள்,

**"குன்றாத மதிமுகத்துக் குண்டலமா கேசியே"**[52]

**"மான்கடியு நோக்கினாய்"**[53]

**"கொவ்வையந் துவர்ச் செவ்வாய்க் குண்டலமா கேசியே"**[54]

**"ஒண்ணுதலாய்"**[55]

**"கோதை வார்குழற் குண்டல கேசி"**[56]

எனக் காப்பியத்துள் புனையப்பட்டுள்ளன. முகம், கண்கள், வாய், நுதல், குழல் ஆகியனவற்றின் இயற்கை அழகுத்திறத்தை மட்டும் நூலாசிரியர் பாடல்களில் எடுத்துக்காட்டியுள்ளார்.

### 2.2.2.3.3. காமலேகை

முனிச்சந்திர பட்டாரக முனிவரை அச்சமூட்டித் தெருட்ட இயலாது என்பதை உணர்ந்து நீலேகேசி கொள்ளும் மாற்று உருவமே 'காமலேகை' ஆவாள். சமுத்திரசார மன்னனின் ஒரே மகளாகிய காமலேகையின் வடிவில் முனிவரைச் சென்று மயக்குகிறாள். அவளுடன் தோழியர் பலரும் உடன் வருகின்றனர். இதனை,

**"யாம நீங்கலு மரசன்ற னொருமக ளுரைசால்**
**காம லேகைதன் னுருவொடு திருவெனத் தோன்றி**

**தாமஞ் சாந்துதண் மலரின்ன பலகொண்டு துணைசால்**

**சேமங் காலவ கேவடி பொற்றெனச் சென்றாள்”**[57]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. காமலேகை வடிவில் தோழியருடன் நீலகேசி துணங்கைக் கூத்தாடியதை,

“**துணங்கை யாடத்தன் றுகிலிடை மேகலை துளங்க**

**அணங்கு மெய்யவ ளருந்தவ னுழைவர நினைந்தாள்”**[58]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

### 2.2.3. யசோதர காவியம்

**‘**யசோதரன்’ என்ற அவந்தி நாட்டு மன்னனின் வரலாற்றை விரித்துரைக்கும் நூல் யசோதரகாவியம் ஆகும். “வடமொழியில் வாதிராஜரியற்றியுள்ள யசோதர சரிதத்தின் மொழிபெயர்ப்பு என்று தெரிகிறது”[59] இருப்பினும் இரு நூல்களின் கதைப்போக்கிற்கு பெரிய அளவில் வேறுபாடு உள்ளது. இந்நூலின் ஆசிரியர் பெயரை அறிய இயலவில்லை. வடமொழியில் இயற்றப்பட்ட இந்நூலை இந்நூலாசியர் தமிழில் யாத்துள்ளார். இந்நூலில் ஐந்து சருக்கங்களும் 330 செய்யுள்களும் இடம்பெற்றுள்ளன. “உயிர்க்கொலை தீதென்று நிலைநாட்டவும் கருமத்தின் பயனை வற்புறுத்தவும் நீதியைப் புகட்டவும் எழுந்த இச்சமண நூல், காப்பிய நலனில் அத்துணைச் சிறப்புடன் காணப்படவில்லை”[60] என இக்காப்பியம் குறித்துத் தமிழண்ணல் குறிப்பிட்டுள்ளார்.

#### 2.2.3.1. கதைச்சுருக்கம்

**‘**ஒதய’ நாட்டை ஆண்ட மாரிதத்தன் எனும் மன்னன் இளமைப்பருவத்திலேயே அரசாட்சியை எய்தியவன். புரோகிதன் ஒருவனின் உரையைக் கேட்ட மாரிதத்தன், சண்டமாரி என்ற தனது குலதெய்வத்திற்கு இரட்டை இரட்டையாக விலங்கினங்களையும்

மனிதர்களையும் உயிர்ப்பலி கொடுக்க முயல்கிறான். மக்களுள் இரட்டையர்களான இருவரைக் கொண்டுவருமாறு பணிக்கிறான். காவலர்கள் ‘சுதத்தன்’ என்ற சமண முனிவர் குழுவிலிருந்த அபயமதி, அபயருசி எனும் இரட்டையர்களைப் பலியிடுவதற்காகக் கொண்டுவருகின்றனர். உயிர்க்கொலையின் தீமையை அபயமதியும் அபயருசியும் மன்னனுக்கு எடுத்துரைக்கின்றனர். அபயருசி தம் முற்பிறவி வரலாற்றினை மன்னன் மாரிதத்தனுக்கு எடுத்துரைக்கிறான்.

“உஞ்சயினி நகரத்தின் மன்னனான அசோகனுக்கும் அவன் மனைவி சந்திரமதிக்கும் மகனாகப்பிறந்தவன் ‘யசோதரன்’. அரசுப்பொறுப்பேற்ற யசோதரன், அமிர்தமதி என்பவளை மணம் செய்கிறான். இவர்களுக்கு ‘யசோமதி’ என்ற மகன் பிறக்கிறான். அமிர்தமதி, அட்டபங்கன் என்ற தொழுநோயாளி ஒருவனிடம் முறையற்ற பாலுறவு கொள்கிறாள். இதனை யசோதரன் அறிகிறான். மனம் கலங்கிய யசோதரன், தாயின் வேண்டுகோளை ஏற்றுச் சண்டமாரித் தெய்வத்திற்கு மாக்கோழி செய்து பலியிடுகிறான். மாக்கோழி உயிர்பெற்று வீழ்கிறது. காமவேட்கை நிறைந்த அமிர்தமதி, யசோதரனையும் அவன் தாய் சந்திரமதியையும் நஞ்சுகொடுத்துக் கொன்றுவிடுகிறாள். ஆட்சிப் பொறுப்பினை யசோமதி ஏற்கிறான். சந்திரமதியும், யசோதரனும் மறுபிறவிகளில் பல்வேறு உயிரினங்களாகப் பிறக்கின்றனர். அமிர்தமதி தொழுநோயால் பீடிக்கப்பட்டு, நரகத் துன்பத்தில் வீழ்கிறாள். யசோமதியின் மனைவி புட்பாவலி, அபயமதி, அபயருசி எனும் இரட்டையர்களைப் பெறுகிறாள். பின்னர் யசோதரனைப் பெறுகிறாள். அவ் யசோதரனே இக்காப்பியத்தலைவன் ஆவான். சுதத்த முனிவரின் அருளுரைகளைப் பெற்ற யசோமதி தன் பழம்பிறப்பினை உணர்கிறான். யசோதர மன்னன் அபருசியாகவும், அவள் தாய் சந்திரமதி அபயமதியாகவும் மறுபிறவியில் புட்பாவலி வாயிலாகப்

பிறப்படைகின்றனர். யசோமதி மன்னனும் அவன் மக்களாகிய அபயருசி, அபயமதி, யசோதரன் ஆகிய அனைவரும் அறம் புரிவதற்காக ஒதயநாட்டுச் சோலையின்கண் வந்தனர். அந்நிலையில் இரட்டையர்களான அபயருசியும் அபயமதியும் மன்னன் மாரிதத்தன் ஏவலால் சண்டமாரிக்குப் பலியிடுவதற்காகப் பிடிக்கப்பட்டனர்.'' இவையாவற்றையும் அபயருசி வாயிலாக அறிந்த மன்னன் மாரிதத்தன் துறவு நெறியில் ஒழுகி முனிவனாகி தேவருலகில் இன்பம் எய்தினான்.

### *2.2.3.2. மகளிர் பாத்திரங்கள்*

யசோதர காவியத்தில் அபயமதி, சந்திரமதி, அமிர்தமதி, குணவதி, புட்பாவலி, ஆகிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. சண்டமாரி என்ற பெண்தெய்வம் குறித்தும் இந்நூல் குறிப்பிட்டுள்ளது.

#### *2.2.3.2.1. அபயமதி*

சண்டமாரித் தெய்வத்திற்குப் பலியிடுவதற்காக வேந்தனால் கொண்டுவரப்பட்ட இரட்டையர்களுள் 'அபயமதி' என்பவள் ஒருத்தியாவாள். பிலியிடுவதற்காக மன்னனால் பிணிக்கப்பட்ட அபயமதி, தன் அண்ணன் அபயருசியின் வாயிலாக உடம்பின் இழிதன்மை குறித்தறிந்து தான் எவ்வித அச்சவுணர்வும் கொள்ளவில்லை என உரைக்கின்றாள். இதனை,

**"அணணனீ யரளிற் றெல்லாம் அருவருப் புடைய மெய்யின்**
**நண்ணிய நமதென் றுள்ளத் தவர்களுக் குறுதி நாடின்**
**விண்ணின்மே லின்ப மல்லால் விழைபயன் வெறுத்து நின்ற**
**கண்ணாய் நங்கட் கெல்லாங் கட்டுரை யென்னை என்றாள்"**[61]

என்ற பாடற்கருத்து, புலப்படுத்துகிறது. பெண்களின் இயல்பு குறித்த ஆன்றோர் மொழிகளையும் அபயமதி வாயிலாகக் காப்பிய ஆசிரியர்,

**"பெண்ணுயி ரளிய தாமே பெருந்திற லறிவும் பேராத்**
**திண்மையு முடைய வல்ல சிந்தையி னென்ப தெண்ணி**

**அண்ணனீ யருளிச் செய்தா யன்றிநல் லறத்தின் காட்சி**

**கண்ணிய மனத்த ரிம்மைக் காதலு முடைய ரோதாம்"[62]**

எனக்குறிப்பிடுகிறார். பெண்ணுடம்பெடுத்த உயிர்கள் நுண்ணறிவும், கலங்காத மனத்திட்பமும் உடையனவல்ல என்ற கருத்தை இதன்வழி அறியமுடிகிறது.

### *2.2.3.2.2. சந்திரமதி*

அவந்தி நாட்டு மன்னன் அசோகனின் மனைவி சந்திரமதி. காப்பியத் தலைவனான யசோதரனின் தாயான சந்திரமதியைக் காப்பியத்தின் இரண்டாம் சருக்கத்தில் காப்பிய ஆசிரியர் அறிமுகம் செய்கிறார். மகனின் தீக்கனவினை அறிந்த சந்திரமதி, சண்டமாரித் தெய்வத்திற்கு உயிர்ப்பலி கொடுக்குமாறு மகனை வேண்டுகிறாள். உயிர்ப்பலியை யசோதரன் மறுத்துரைக்க மாக்கோழி செய்து பலியிட்டு தேவியை மகிழ்விக்கக் கூறுகிறாள்.

மருமகள் அமிர்தமதியால் நஞ்சுண்டு கொல்லப்பட்ட சந்திரமதி விலங்குகதியடைகிறாள். மறுபிறவிகளில் சந்திரமதி நாய், நாகம், முதலை, பெண்ணாடு, எருமை, கோழி போன்ற விலங்கினங்களாகப் பிறந்து துன்பம் அடைகிறாள். நாயாகப் பிறந்த சந்திரமதியின் நிலையை,

**"சந்தி ரம்மதி நாய்தளர் கின்றதே"[63]**

எனக் காப்பிய ஆசிரியர் எடுத்துரைத்துள்ளார். அவள் பல பிறவிகளில் அடைந்த துன்பதை,

**"சந்தி ரம்மதி நாய்கரு நாகமாய்**

**முந்து சென்று முதலைய தாய்"[64]**

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

### 2.2.3.2.3. அமிர்தமதி

யசோதர மன்னனின் மனைவி அமிர்தமதி. இவள் யசோமதி என்பனின் தாயாவாள். இசையும் நாடகமும் காமத்தை விளைவிக்கும் எனற சமணசமயக் கருத்திற்கு ஏற்ப இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. அமிர்தமதியின் பாத்திர இயல்பை விளக்குமிடத்தே காப்பிய ஆசிரியர் பெண் பிறவியின் இழிவு குறித்து,

**"மின்னினு நிலையின் றுள்ளம் விழைவுறின் விழைந்த யாவும்**
**துன்னிடு மினத்தின் தூய்மை சூழ்ச்சியு மொழிய நிற்கும்**
**பின்னுறு பழியிற் கஞ்சா பெண்ணுயிர்ப் பெருமை பேணா**
**தென்னுமிம் மொழிகட் கந்தோ விலக்கிய மாயி னாளே"**[65]

எனக் குறிப்பிடுகிறார். ஐஞ்சிறு காப்பியங்களில் தீய ஒழுக்கம் கொண்ட பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளவள் அமிர்தமதியே ஆவாள்.

### 2.2.3.2.4. குணவதி

அமிர்தமதியின் தோழி குணவதி. அட்டபங்கன் மீது தான் கொண்ட கழிகாமத்தை அமிர்தமதி எடுத்துரைத்த நிலையில் அவளைக் கடிந்து அறிவுரை பகர்கிறாள். அவளின் அறிவுரை,

**"தேவிநீ கமலை யாவாய் திருவுளத் தருளப் பட்டான்**
**ஆவிசெல் கின்ற வெந்நோ யருநவை ஞமலி யாகும்**
**பூவின்வார் கணைய னென்னே புணர்த்தவா றிதனை யென்னா**
**நாவினா லுளைந்து கூறி நடுங்குபு வொடுங்கி நின்றாள்"**[66]

என நூலில் இடம்பெற்றுள்ளது. இருப்பினும் இறுதியில் அமிர்தமதியின் தீய ஒழுக்கத்திற்கு உடன்பட்டவளாகிறாள். அமிர்தமதி, அட்டபங்கனுடன் கூடி ஒழுகுவதற்குரிய அனைத்து உதவிகளையும் செய்கிறாள்.

### 2.2.3.2.5. புட்பாவலி

யசோமதி மன்னனின் மனைவி புட்பாவலி. அவள் அபயமதி, அபயருசி எனும் இரட்டையரைப் பெற்றெடுக்கிறாள். பின்னர் யசோதரனைப் பெறுகிறாள்.

**“பொன்னிய லணிகொள் புட்பா வலியெனும் பொங்கு கொங்கை**
**இன்னிய இரட்டை யாகு மிளையரை யீன்று சின்னாள்**
**பின்னுமோர் சிறுவன் தன்னைப் பெற்றனள் பேதை தானே”**[67]

நாடக மகளிர் இயல்புகள் குறித்த செய்திகள்,

**“பாடக மிலங்கு செங்கேழ்ச் சீறடிப் பரவை யற்குற்**
**சூடக மணிமென் தோளின் தொழுதனர் துளங்கத் தோழி**
**நாடக மகளி ராடு நாடக நயந்து நல்லார்**
**பாடலி லமிர்த வூறல் பருகினனன் மகிழ்ந்தி ருந்தான்”**[68]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

### 2.2.3.2.6. பெண்தெய்வம் சண்டமாரி

யசோதர காவியத்தில் ‘சண்டமாரி’ என்ற பெண்தெய்வம் குறித்தும் அத்தெய்வத்திற்குரிய வழிபாட்டு முறைகள் குறித்தும் அறியமுடிகிறது. சண்டமாரித் தெய்வத்தின் இயல்பினை,

**“நோவு செய்திடும் நோய்பல ஆக்கிடும்**
**ஆவி கொள்ளும் அலாதன வுஞ்செயும்**
**தேவி சிந்தை சிதைந்தனள் சீறுமேல்**
**காவன் மன்ன கடிதெழு கென்றனர்”**[69]

என்ற பாடல்வாயிலாக அறியமுடிகிறது. சண்டமாரித் தெய்வம் வெகுண்டால் மக்களுக்குப் பல்வேறு துன்பங்களைச் செய்கின்ற தன்மையை உடையவளாக விளங்குவாள் என்பதை இப்பாடற்கருத்து வாயிலாக

அறியமுடிகிறது. இப்பெண் தெய்வத்திற்கு எருமை முதலிய விலங்குகளைப் பலிகொடுத்து வணங்கும் வழிபாட்டு முறைகள் குறித்து,

**“மற்றோர் நாள்மற மாதிற்கு மன்னவன்**
**பெற்றி யாற்பர விப்பெரு வேட்டைபோய்**
**உற்ற பல்லுயிர் கொன்றுவந் தேற்றினான்**
**கொற்ற மிக்கெரு மைப்பலி யொன்றரோ”**[70]

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது.

### 2.2.4. உதயணகுமார காவியம்

கொங்குவேளிரின் பெருங்கதை எனும் காப்பியத்தின் வழிநூலாகக் கருதப்படுவது உதயணகுமார காவியமாகும். இக்காப்பிய ஆசிரியர் பெயரை அறிய இயலவில்லை. இந்நூலில் 364 செய்யுட்கள் உள்ளன. இவையாவும் ஆசிரிய விருத்தத்தாலமைந்தவை. உஞ்ஞைக் காண்டம், இலாவாண காண்டம், மகத காண்டம், வத்தவ காண்டம், நரவாகன காண்டம், துறவுக் காண்டம் என்னும் ஆறு பிரிவாக இக்காப்பியம் பகுக்கப்பட்டுள்ளது.

#### 2.2.4.1. கதைச்சுருக்கம்

நாவலந்தீவிலுள்ள வத்தவ நாட்டின் தலைநகர் கௌசாம்பி என்பதாகும். இந்நாட்டின் மன்னன் ‘சதானிகன்’. அவன் மனைவி மிருகாவதி ஆவாள். மிருகாபதியின் தந்தை சேடகன். பேரண்டப் பறவை ஒன்று கருவுற்றிருந்த மிருகாபதியை வான்வழியே எடுத்துச் சென்று சேடக மன்னன் அரசாட்சியைத் துறந்து தவம் புரிந்து கொண்டிருந்த ‘விபுலம்’ என்ற காட்டில் வைத்து விடுகிறது. அங்கு மிகாபதி உதயணனைப் பெற்றெடுக்கிறாள். சேடகமன்னின் தவப்பள்ளியில் இருந்த பிரமசுந்தர முனிவர் உதயணனுக்கு, ‘கோடாவதி’ எனும் யாழைப் பரிசளிக்கிறார். அவ் யாழிசையின் பயனாய் ‘தேவயானை’ ஒன்றை உதயணன் பெறுகிறான்.

பிரமசுந்தர முனிவரின் மகன் யூகி. இவன் உதயணனுக்கு உற்ற நண்பனாகத் திகழ்கிறான்.

சேடக முனிவரின் தவப்பள்ளிக்கு வருகைதந்த 'விக்கிரமன்' என்ற மன்னன், அங்கிருந்த உதயணனைத் தன் தங்கை மகன் என்று அறிந்து மகிழ்கிறான். உதயணனையும் தங்கை மிகாபதியும் தன் நாட்டிற்கு அழைத்துச் சென்ற விக்கிரமன், உதயணனுக்கு அரசாட்சியை வழங்கினான். மிருகாபதியைப் பிரிந்த சதானிகன் மீண்டும் அவளைக் கண்டறிந்து இன்புறுகிறான். இதன்பயனாய் இரண்டு ஆண்குழந்தைகள் அவர்களுக்குப் பிறக்கின்றன. சதானிகன் உலக வாழ்வைத் துறந்து தன் வத்தவ நாட்டு அரசாட்சியையும் உதயணனுக்கு வழங்குகிறான்.

அவந்திநாட்டு மன்னன் பிரச்சோதனன் கப்பம் கட்ட மறுத்தமைக்காக உதயணனைச் சிறைப்பிடிக்கிறான். நண்பன் யூகியின் உதவியால் பிரச்சோதாதனன் மகள் வாசவதத்தையை உதயணன் மணம்புரிகிறான். வாசவதத்தையின் அழகில் மயங்கி அரசாட்சியை மறந்த உதயணனை மீண்டும் அரசாட்சி பெறுவதற்காக யூகி, சாங்கியமகள் உதவியுடன் வாசவதத்தையைப் பிரித்து வைக்கிறான். வாசவதத்தை மாண்டொழிந்ததாக உதயணன் வருந்துகிறான். அமைச்சர் அறிவுரையை ஏற்ற உதயணன், சமண முனிவரைக் காண்பதற்காக மகதநாட்டில் உள்ள இராசகிரியம் என்ற நகருக்குச் செல்கிறான் மகதநாட்டை தருசகன் என்ற மன்னன் ஆட்சி புரிந்துவந்தான். இராசகிரிய நகரில் 'காகதுண்டகன்' என்ற முனிவனை உதயணன் சந்திக்கின்றான். அவர் உதயணனிடம் இரண்டுதிங்கள் இந்நகரில் நோன்பியற்றினால், உதயணன் இழந்த வாசவதத்தையையும் அவன் நாட்டையும் தம் தவ வலிமையால் மீளத்தருவேன் என்கிறார். பின்பு உதயணன் தருசகனின் தங்கை பதுமாவதியை மணம் புரிந்து மகிழ்கிறான். தன் பகைவன் அழியும் வகையில் போரில் வெற்றிபெற்ற உதயணன் கோசம்பி என்ற தன் நகரை அடைந்து இனிதாக ஆட்சிபுரிந்து வந்தான்.

பின்னர் யூகி முதலிய அமைச்சர்கள் வாசவதத்தையை உதயணனிடம் மீண்டும் கொண்டுவந்தனர். பின்னர் உதயணன், பந்தாடுவதில் வல்லவளான 'மானனீகை' என்பவளை மணம்புரிந்தான். பின்னர் விரிசிகை என்பவளையும் மணம் செய்து கொள்கிறான். வாசவதத்தை நரவாணன் என்ற மகனைப் பெறுகிறாள். ஏற்ற காலத்தில் மகனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து விட்டுத் துறவுநெறியில் உதயணன் செல்கிறான். அவன் மனைவியர் நால்வரும் அவ்வாறே துறவு நெறியில் செல்கின்றனர்.

### 2.2.4.2. மகளிர் பாத்திரங்கள்

உதயணகுமார காவியத்தில் மிருகாபதி, வாசவதத்தை, காஞ்சனை, பதுமாபதி, யாப்பியாயினி, யாப்பி, திலதமாசேனை, மதனமஞ்சிகை, வேகவதி, நாகதத்தை, அநங்கவிலாசனை, மானனீகை, விரிசிகை, சானகி, அமரி, குலாங்கனை, சோமசுந்தரி ஆகிய மகளிர் பாத்திரங்களும், குறத்தி, சாங்கியமகளிர், நாடகமகளிர் ஆகிய மகளிர் பற்றிய செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

#### 2.2.4.2.1. மிகாபதி

சேதி நாட்டு மன்னன் 'சேடகன்' என்பவனின் மகள் மிகாபதி. இவளது கணவன் சதானிகன். இவளே காப்பியத் தலைவனான உதயணகுமாரனின் தாயாவாள். அவள் தன் கணவனான சாதானிகனின் உள்ளத்தில் உறைகின்ற தன்மையையும் அவள் அழகு நலத்தையும், அருந்ததி அனையத் திகழ்ந்த அவளின் கற்பின் மேன்மையையும்,

**"மன்னவ னுள்ளத் துள்ளாண்**
**மாமணி மயிலஞ் சாயல**
**அன்னமென் னடைவேற் கண்ணா**
**ளருந்ததி யணைய நங்கை**
**பொன்னணி சுணங்கு பூத்த**

**புணர்முலை யமிர்த மன்னாள்**

**மின்னுநுண் ணிடையா ணாம**

**மிகாவதி யென்று மிக்காள்"[71]**

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**2.2.4.2.2. வாசவதத்தை**

அவந்தி நாட்டு மன்னன் பிரச்சோதனனின் மகள் வாசவதத்தை. உதயணன் வாசவதத்தைக்கு யாழ் இசைக்கக் கற்றுத் தருகிறான். வாசவதத்தையின் அழகு நலனை,

**"பூந்துகில் செறிமருங்குற் பொருகயற் கண்ணி வேய்த்தோள்**

**வாயத்தவா சவதத் தைக்கு வருவித்தும் வீணை தன்னைச்**

**சேர்த்தவ ணிகரி லின்பிற் செல்வனு மகிழ்வுற் றானே"[72]**

என்ற பாடலில் காப்பிய ஆசிரியர் எடுத்துரைத்துள்ளார். வாசவதத்தை இறந்துவிட்டதாக எண்ணிப் புலம்பும் உதயணன் கூற்றில் வாசவதத்தையின் இயல்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**"மானெனும் மயிலெனும் மரைமிசைத் திருவெனும்**

**தேனெனுங் கொடியெனுஞ் சிறந்த கொங்கை நீயெனும்**

**வானில மடந்தையே மாதவத்தின் வந்தனை**

**நானிடர்ப் படுவது நன்மையோநீ வீந்ததும்"[73]**

**"வீணைநற் கிழத்திநீ வித்தக வுருவிநீ**

**நாணின் பாவை தானுநீ நலந்திகழ் மணியுநீ**

**காணவென்றன் முன்பதாய்க் காரிகையே வந்துநீ**

**தேணிமுகங் காட்டெனச் சொல்லியே புலம்புவான்"[74]**

வாசவதத்தை மீது உதயணன் கொண்டிருந்த பேரன்பினை இப்பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

### 2.2.4.2.3. காஞ்சனை

வாசவதத்தையின் தோழி காஞ்சனை. உஞ்ஞை நகரம் யூகியின் செயலால் தீப்பற்றி எரியும் வேளையில் காஞ்சனை வாசவதத்தையைக் காக்கும் செயலை,

**"தோழி கயந்தனை விட்டு வந்த காஞ்சனை யேறி னாளே"[75]ஸ**

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது.

### 2.2.4.2.4. பதுமாபதி

மகதநாட்டு மன்னன் தருசகனின் தங்கை பதுமாபதி. இவள் உதயணனைக் கண்டு காதல் கொண்டு களவு மணம் புரிகிறாள். உதயணனிடம் யாழிசை நுணுக்கங்களைக் கற்றுத் தேர்கிறாள். பதுமாபதி குறித்த அறிமுகம்,

**"பருவமிக் கிலங்குங் கோதைப் பதுமைதே ரேறி வந்து"[76]**

என இடம்பெற்றுள்ளது. பதுமாபதி உதயணனுடன் இனிதே இல்லறம் நடத்தியமையையும் அவளின் அழகு நலனையும்,

**"மதுமலர்க் குழலி விண்மின் மாலைவேல் வழிமென் றோளி**

**பதுமைவந் தரசற் கண்டு பன்னுரை இனிது கூறும்"[77]**

என்ற பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. உதயணன் பதுமாபதியை மணந்தமையால் ஊடல் கொண்ட வாசவதத்தையிடம் பதுமாபதியின் பண்பு குறித்து,

**"பாடக மிரங்கும் பாதப் பதுமையி னோடு மன்னன்**

**கூடிய கூட்டந் தன்போற் குணந்தனை நாடி யென்ன"[78]**

எனக் குறிப்பிடுகின்றான். வாசவதத்தையைப் போன்று குணநலன் மிக்கவளாகப் பதுமாபதியை உதயணன் போற்றுகிறான்.

### 2.2.4.2.5. யாப்பியாயினி.

பதுமாபதியின் தோழி யாய்ப்பியாயினி. பதுமாபதியின் உள்ளக்குறிப்பினை உதயணனிடம் அவள் எடுத்துரைப்பதை,

**"யாப்பியா யினியா ளென்னு மவளுடைத் தோழி சென்று**

**நாப்புகழ் மன்னற் கண்டு நலம்பிற வுரைத்துக் கூட்ட"**[79]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

### 2.2.4.2.6. யாப்பி

சாலங்காயன் என்ற அமைச்சனின் தங்கையான யாப்பியை பிரச்சோதனன் யூகிக்கு மணம் செய்து கொடுக்கிறான். யாப்பியின் அழகுநலன்,

**"சாலங் காயன் சகோதர மானநன்**

**னீலங் காய்ந்த நெடுவேல் விழிநுதற்**

**பாலங் கோர்பிறை யாம்படா வெம்முலைக்**

**கோலங் காரன்ன கூரெயி றாப்பியும்"**[80]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

### 2.2.4.2.7. திலதமாசேனை

உதயணின் அமைச்சனான யூகிக்கு பிரச்சோதன மன்னன் மணம் முடித்துக் கொடுத்த மகளிர் இருவருள் 'திலதமாசேனை' என்பவளும் ஒருத்தியாவாள். இதனை,

**"பரதகன் றங்கை பான்மொழி வேற்கணி**

**திருநி லம்புகழ் திலதமா சேனையும்**

**பெருநில மறிய மணமிகப் பெற்றுடன்**

**அரிய யூகிக் கரசன் கொடுத்தனன்"**[81]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

**2.2.4.2.8. மதன மஞ்சிகை**

உதணனின் மகனான நரவாகனின் மனைவி மதனமஞ்சிகை. இவள் கலிங்கசேனை என்ற கணிகை வயிற்றில் பிறந்தவள் என்பதையும், அழகில் சிறந்தவள் என்பதையும்,

**"ஒளிர்குழற் கலிங்க சேனை யுதரத்தி னுற்ப வித்த**

**வளிநறும் பூஞ்சு கந்த மதனமஞ் சிகை"**[82]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. விச்சாதர மன்னனாகிய 'மானசசேவகன்' என்பவன் மதனமஞ்சிகை மீது காமம் கொண்டு அவளைத் தன்வயப்படுத்த முயல்கிறான். நரவாகணன் மீது கொண்ட அன்பின் காரணமாக கற்பில் சிறந்த மதன மஞ்சிகை, மானசசேவகன் செயலுக்கு உடன்பட மறுக்கிறாள். இதனை,

**"இன்னுயிர்க் கணவன் றன்னை இனிமையி னினைத் திருப்ப"**[83]

எனக் குறிப்பிடுவதன் வாயிலாக அறியமுடிகிறது.

**2.2.4.2.9. வேகவதி**

விச்சாதர மன்னன் மானசசேவகனின் தங்கை வேகவதி. அண்ணனின் காதலை ஏற்றுக் கொள்ளுமாறு மதனமஞ்சிகையிடம் 'வேகவதி' வேண்டுகிறாள். ஆனால் மதனமஞ்சிகை நரவாகணின் பண்புகளை எடுத்துக் கூறிய அளவில் 'வேகவதியும் நரவாகணன் மீது காதல் கொள்கிறாள். மதனமஞ்சிகை வடிவத்துடன் நரவாகணனிடம் சென்ற வேகவதி, அவளைக் கூடுகிறாள். அவள் செயலை உணர்ந்த நரவாகணன் அவள் வேகவதி என்பதை அறிந்து அவளை ஏற்றுக்கொள்கிறான்.

**2.2.4.2.10. நாகதத்தை**

வித்தியாதர உலகின் மன்னன் நீலவேகன் என்பவனின் மனைவி நாகதத்தை ஆவாள்.

**"நாவி ளங்குஞ்சீர் நாகதத்தை"**[84]

என இவள் குறித்துக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

***2.2.4.2.11. அநங்கவிலாசனை***

நீலவேகன் - நாகதத்தை ஆகிய இருவரின் மகள் அநங்கவிலாசனை. இவளை,

**"பூவி ளங்கொடி புத்திரி நாகமும்**

**மேவி ளங்கு மநங்கவி லாசனை"**[85]

என்று உதயணகுமாரக் காவிய ஆசிரியர் குறிப்பிட்டுச் சிறப்பிக்கிறார். அநங்க விலாசனை சுயம்வரத்தின் வாயிலாக நரவாகணனை மணம் செய்து கொள்கிறாள்.

**"அன்ன மென்னடை யமிர்த மன்னவன்**

**மின்னின் மாலையை விரகி னேந்திமுன்**

**சொன்ன காளைமேற் சூட்டி நின்றனள்"**[86]

எனும் பாடலடிகள் வாயிலாக அநங்கவிலாசனை செயலை அறியமுடிகிறது. வித்தியாதர மகளிர் சுயம்வரத்தின் வாயிலாக மணமகனைத் தேர்ந்தெடுத்துக் கொள்வர் என்பதை இதன்வழி அறியமுடிகிறது.

***2.2.4.2.12. மானனீகை***

கோசல நாட்டு மன்னனின் மகள் 'மானனீகை' ஆவாள் பந்தாடுதலில் வல்லவளான இவளை,

**"மருவுகோ சலத்து மன்னன் மகளுரு வரிவை நாமம்**

**சுரிகுழன் மான னீகை சொலற்கருங் கற்பினாளே"**[87]

எனக் காப்பிய ஆசிரியர் அறிமுகம் செய்து, அவளின் அழகுநலத்தை,

**"இளம்பிறை நுதல்வேற் கண்ணி யினியவிற் புரவ வேய்த்தோள்**

**இளங்கிளி மொழிநற் கொங்கை யீடில்பொற் கலச மல்குல்**

**இளமணிப் படம்பொன் வாழை யிருகுறங் காலம் பண்டி**

**இளம்புற வடிக ளாமை யிடைமின்பூங் குழலினாளே"**[88]

எனச் சிறப்பித்துப் போற்றுகிறார். உதயணன் மணம் செய்து கொண்ட பெண்களுள் மானனீகையும் ஒருத்தியாவாள்.

### *2.2.4.2.13. விரிசிகை.*

வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை ஆகிய மூவரையும் மணந்த உதயணன், விரிசிகை என்பவளையும மணம் செய்து கொள்கிறான். இவளைக் குறித்த செய்தி காப்பியத்தில் ஒரே ஒரு பாடலில் இடம்பெற்றுள்ளது.

**“தேவியர் மூவர் கூடத் தேர்மன்னன் சேர்ந்து சென்னாட்**
**காவின்முன் மாலை சூட்டிக் காரிகை கலந்து விட்ட**
**பூவின்மஞ் சரியைப் போலும் பொற்புநல் விரிசி கையைத்**
**தாவில்சீர் வேள்வி தன்னாற் றரணீசன் மண்நதா னன்றே”**[89]

சோலையில் உதயணனை விரும்பிக் கூடியவளாகவும், அழகுநலன் நிரம்பப்பெற்றவளாகவும் விரிசிகை குறிப்பிடப்பட்டுள்ளாள்.

### *2.2.4.2.14. சானகி*

துறவுச் சருக்கத்தில் உதயணனுக்கு நல்லறம் கற்பிக்கும் முனிவர் விடபகன் என்ற அந்தணனின் மனைவியான சானகி என்பவளைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**“இடைமின் றேவியுஞ் சானகி யென்பவள்”**[90]

மனைவி இல்லகத்தே இருந்தபோதும் விடபகன் கணிகையுன் கூடி இன்புறுகிறான்.

### *2.2.4.2.15. அமரி*

உதயணகுமார காவியத்தில் ‘அமரி’ என்ற வேசிப் பெண் குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது. சானகியின் கணவனான விடபகன், அமரியிடம் கொண்ட ஒழுக்கம் குறித்து,

**“அமரி யென்னு மணிமுலை வேசிதன்**

**அமையுங் காமத் தழுங்கி"**[91]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

### *2.2.4.2.16.* குலாங்கனை

சுகந்தி என்ற ஊரின் அரசனாகிய வயந்தன் என்பவன் மனைவி குலாங்கனை என்பவளாவாள். இல்வாழ்வில் இவள் கற்பில் மேம்பட்டு விளங்கியமையை,

**"செகந் தனிப்புகழ் சீரார் குலாங்கனை"**[92]

என உதயணகுமார ஆசிரியர் போற்றுகிறார்.

### *2.2.4.2.17.* சோமசுந்தரி

குலாங்கனையின் மகனான கோமுகனின் செவிலித்தாய் சோமசுந்தரி ஆவாள். இவளின் மகன் விசையன். விசையனைக் குறித்த அறிமுகத்தில் சோமசுந்தரி,

**"காம னென்னுமக் காளைகைத் தாய்பெயர்**
**சோம சுந்தரி யென்னுஞ் சுரிகுழல்**
**நாம வேன்மக னன்மை விசையனும்"**[93]

எனக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளாள்.

### *2.2.4.2.18.* குறத்தி

குறி சொல்லும் குறவ மகளிர் பற்றிய குறிப்பு உதயணகுமார காவியத்தில் இடம்பெற்றுள்ளது. குறத்தி வேடமிட்ட யூகியின் செயல் வாயிலாக இதனை

**"வாகுடன் குறத்தி வேடம் வகுத்தனன் குறிகள் கூற்றாம்"**[94]

என்னும் பாடலடியால் அறியமுடிகிறது.

### *2.2.4.2.19.* சாங்கிய மகள்

'சாங்கியமகள்' என்ற தவமூதாட்டி இலாவண காண்டத்தில் இடம்பெறுகிறாள். உதயணன், வாசவதத்தை மீது கொண்டுள்ள கழிபெருங்

காதலைக் குறைத்து அவனை அரசாட்சியின் பக்கம் திருப்ப விரும்பிய யூகிக்குச் சாங்கிய மூதாட்டி உதவுகிறாள்.

**"சாங்கிய மகளெனுந் தபசினியைக் கண்டு"**

**"பாந்தவக் கிழவியும் பண்பினிய சொல்லி"[95]**

எனும் பாடலடிகளில் சாங்கியத்தாய் குறித்த செய்திகளை அறியமுடிகிறது. யூகி அமைத்த சுருங்கை வழியில் வாசவதத்தையைச் சாங்கிய மகள் அழைத்து வந்தமையை,

**"இலங்குசாங்கி யம்மக ளெழில் பெறக் கொண்டுவந்**

**தலங்கலணி வேலினா னமைச்சன் மனைசேர்த்தனள்"[96]**

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

### 2.2.4.2.20. நாடக மகளிர்

பிரச்சோதனன் நாட்டை 'நளகிரி' என்ற யானை அழித்தமையால் அங்கு வாழ்ந்திருந்த பாடல் மகளிர், ஆடல் மகளிர், இல்லற மகளிர் கொண்ட துன்பத்தை,

**"பாடுநன் மகளி ரெல்லாம் பாட்டொழிந் தரற்றி யோட**

**ஆடுநன் மாதர் தாமு மாடல்விட் டலந்து செல்லக்**

**கூடுநன் மகங்கை மைந்தர் குலைந்தவ ரேகிச்செம்பொன்**

**மாடநன் மேனி மலைப்பான் மன்னினார் பலரோ டாங்கே"[97]**

என்ற பாடற்கருத்தின்வழி அறியமுடிகிறது.

### 2.2.5. நாககுமார காவியம்

ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றான நாககுமார காவியம் முதன் முதலில் 1973 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பெற்றது. ஐந்து சருக்கங்களைக் கொண்ட இந்நூலில் 170 விருத்தப்பாக்கள் இடம்பெற்றுள்ளன. 'நாகபஞ்சமி கதை', 'நாககுமார சரிதம்' என்னும் பெயர்களில் இக்காப்பியக் கதை பிற

மொழிகளில் வழங்கி வருகிறது. இந்நூலின் ஆசிரியர் சமணசமயத்தைச் சேர்ந்தவர் ஆவார். இவர் பற்றிய பிற குறிப்புகள் கிடைக்கவில்லை.

### 2.2.5.1. கதைச்சுருக்கம்

மகதநாட்டு மன்னன் சிரேணிகனும் அவன் மனைவி சாலினியும் விபுலமலையிலிருந்த சமணமுனிவரை வணங்கி, அறவுரைகளைக் கேட்கின்றனர். சிரேணிகன் முனிவரிடம் நாகபஞ்சமியின் கதையைத் தனக்கு உரைத்தருள வேண்ட முனிவர் அவனுக்கு நாககுமாரக் கதையைக் கூறுகிறார்.

மகதநாட்டிலுள்ள கனகபுரத்தை 'சயந்தரன்' என்ற மன்னன் ஆண்டு வந்தான். விசாலநேத்திரை, பிரிதிதேவி என்போர் அவன் மனைவியர் ஆவார். விசாலநேத்திரை சிரீதரன் என்ற மகனையும், பிரிதிதேவி பிரதாபந்தன் என்ற மகனும் பிறக்கின்றனர். பிரதாபந்தனே நாககுமாரன் ஆவான். 'நாகவாவி' என்ற கடாகத்தில் விழுந்த பிதாபந்தனை நாகப்பாம்பு ஒன்று தாங்கிக் காத்தது. நாகமானது எவ்விதத் தீங்கையும் செய்யாமல் தன் தலையில் வைத்துப் பிரதாபந்தனைக் காத்தமையால் அவன் 'நாககுமாரன்' என அழைக்கப்பட்டான். நாககுமாரன், கின்னரி, மனோகரி, திரிபுவனாரதி, கணைவிழி, குணவதி, சந்திரப்பிரபை, சுயம்பிரபை, சப்பிரபை, சுநந்தை, கனகமாலை, நங்கை, பதுமை, நாகதத்தை, மேனகை, சரீமதி, மதனமஞ்சிகை, இலக்கணை ஆகிய பெண்களைத் திருமணம் செய்து கொள்கிறான். இறுதியில் தன் மகன் தேவகுமாரனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு நாககுமாரன் துறவு மேற்கொள்கிறான். அவன் மனைவியர் அனைவரும் அவ்வாறே துறவேற்று உலக வாழ்வை விடுக்கின்றனர். இவ்வாறு நாககுமாரனின் கதையை முனிவர் சிரேணிகராசனுக்குக் கூறுகிறார்.

### 2.2.5.2. மகளிர் பாத்திரங்கள்

ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக எண்ணிக்கையில் மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்ற காப்பியமாக நாககுமார காவியம் திகழ்கிறது. இக்காப்பியத்தில் இடம்பெற்ற மகளிர் பாத்திரங்களைப் பட்டத்தரசியர், நாககுமாரனின் மனைவியர், ஆர்யங்கணைகள் எனும் மூவகையில் பகுக்கலாம். ஒரே பெயரில் வெவ்வேறு நாட்டைச் சேர்ந்த மகளிர் காப்பியத்தில் இடம்பெறுகின்றனர்.

### 2.2.5.2.1. பட்டத்தரிசியர்

சாலினி, விசாலநேத்திரை, பிரிதிதேவி, சரீமதி, இலளிதா சுந்தரி, கணிகை சுந்தரி, தாரணி, செயவதி, மிருகலோசனை, சுகாவதி, செயஸ்திரி, சந்திரமதி, விஜயை ஆகிய பட்டத்தரசியர் பற்றிய செய்திகள் நாககுமார காவியத்தில் இடம்பெற்றுள்ளன. நாட்டின் அரசர்களைக் குறித்துக் குறிப்பிடும் போது அவனது பட்டத்து அரசியரைக் குறிப்பிடும் மரபினை நாககுமார காவியத்தின் ஆசிரியர் பின்பற்றியுள்ளார்.

### 2.2.5.2.1.1. சாலினி

மகதநாட்டு மன்னன் சிரேணிகனின் மனைவி சாலினி. அன்ன நடையும், கூரிய கண்களையும் கொண்ட சாலினி கற்பில் சிறந்து விளங்கியமையை,

**“ஆறிலொன் றிறைகொண்டாளு மரசன்மா தேவி யன்னப்**
**பேறுடை நடைவேற் கண்ணாள் பெறற்கருங் கற்பி னாள்பேர்**
**வீறுடைச் சாலி னீதா மிடைதவழ் கொங்கை கொண்டை**
**நாறுடைத் தார ணிந்த நகைமதி முகத்தி னாளே”**[98]

எனக் காப்பிய ஆசிரியர் சிறப்பிக்கிறார்.

### *2.2.5.2.1.2. விசாலநேத்திரை*

கனகபுர நகரத்தின் அரசன் சயந்தனின் பட்டத்தரசி 'விசாலநேத்திரை' ஆவாள். இவளை,

**"அந்ந கர்க்கிறை யான சயந்தரன்**

**நன் மனைவிவி சாலநன் நேத்திரை"**[99]

எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இளையவள் பிரிதிதேவி மகனான நாககுமாரன் மீது பொறாமை கொண்டவளாக விசாலநேத்திரை திகழ்ந்தமையை,

**"தேசநற் புரங்க ளெங்குந் திகழ்பணி குமரன் கீர்த்திப்**

**பேசொணா வகையிற் கேட்டேன்"**[100]

என அவள் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. பிரிதிதேவி குறித்துப் பொய்யான மொழிகள் பேசுபவளாகவும் விசாலநேத்திரை திகழ்கிறாள்.

### *2.2.5.2.1.3. பிரிதிதேவி*

பரங்கிய நாட்டின் பிரிதிதேவி சயந்தர மன்னனின் இரண்டாவது மனைவியாவள். இவளைச் சயந்தரன் மணந்து கொண்டமையை,

**"மௌவ லங்குழன் மாதரைத் தானழைத்துத்**

**தெய்வ வேள்வியிற் சேர்ந்து புணர்ந்தனன்"**[101]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. பக்தியில் சிறந்தவளாகப் பிரிதிதேவி, காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளாள். இதனை,

**"பான்மொழி யமிர்த மன்னாள் பரம னாலைய மடைந்து**

**நான்மொழீ இறைவன் பாதம் நோக்கிநன் கிறைஞ்சி னாளே"**[102]

### *2.2.5.2.1.4. சூதேசன நாட்டுச் செயவர்மனின் பட்டத்தரசி செயவதி*

சூதேசனம் என்ற நாட்டின் மன்னனான செயவர்மனின் மனைவி செயவதி. இவள் வியாளன், மாவியாளன் என்ற இரட்டையர்களைப்

பெற்றெடுக்கிறாள். இவர்கள் நாககுமாரனுக்கு உற்றதோழர்களாக விளங்குகின்றனர்.

**“வாரணி கொங்கை மார்க்கு ̇மாரனேர் செயவரமாவின்**

**சீரணிதேவி நாமம் செயவதி”**[103]

எனச் செயவதியின் பாத்திரம் காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது

### *2.2.5.2.1.5. சிரீவர்மன் மனைவி சிரீமதி*

பாடலிபுரநாட்டின் அரசன் சிரீவர்மனின் மனைவியான சிரீமதி குறித்து,

**“தன்னவன் றேவி பேருந் தக்கசிரீ மதி”**[104]

என்ற பாடலடி வாயிலாக அறியமுடிகிறது.

### *2.2.5.2.1.6. இலளிதா சுந்தரி*

வியாளனின் மனைவி ‘இலளிதா சுந்தரி’. இவள் பாடலிபுர மன்னன் சிரீவர்மனின் தாதி மகளாவாள். இவளை வியாளனுக்கு மன்னன் மணம் செய்து கொடுக்கிறான். இதனை,

**“தாதி துன்னிய மகளி தன்னைச் சுந்தரி வியாளனுக்கு**

**மன்னியற் கொப்ப”**[105]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

### *2.2.5.2.1.7. கணிகை சுந்தரி*

மாவியாளனின் மனைவி கணிகை சுந்தரி. இவள் பாடலிபுர மன்னன் சரீவர்மனின் மகள். இவளை மாவியாளன் மணப்பதை,

**“மாவியாளன் றகமை கண்டு**

**தன்னுடைய புதல்வி தன்னைத் தானவற் கொடுத்து”**[106]

எனும் பாடலடிகள் புலப்படுத்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது.

### *2.2.5.2.1.8. தாரணி*

காம்பீரநாட்டின் மன்னன் நந்தன் என்பவனின் பட்டத்தரசி தாரணி. இவளை,

**நந்துகாம் பீரநாட்டி னகருங் காம்பீர மென்று**

**நந்தன ராசன் றேவி நாமந் தாரணி"**[107]

எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### *2.2.5.2.1.9. சுப்பிரதிட்ட நாட்டுச் செயவர்மன் மனைவி செயவதி*

சுப்பிரதிட்டம் என்ற நாட்டை ஆண்ட செயவர்மன் மனைவி செயவதி குறித்த செய்தி காப்பியத்தின் நான்காம் சருக்கத்தில் இடம்பெற்றுள்ளது.

**"சுப்பிர திட்டமெனும்புர மாள்பவன்**

**செப்பு வன்மை செயவர்ம ராசன்றன்**

**ஒப்பில் பாவையு மோவிய போற்செம்பொன்**

**செப்பு நேர்முலை யாணற் செயவதி"**[108]

பாவையைப் போன்ற செயவதியின் அழகுத்திறம் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### *2.2.5.2.1.10. மிருகலோசனை*

கிரிநகரம் என்ற நகரின் அரசன் அரிவரன். அவன் மனைவி மிருகலோசனை. கற்பில் சிறந்த மிருகலோசனை குறித்து,

**"அரிவர ராசன் றேவி யருந்ததி அனைய கற்பின்**

**மிருகலோ சனையென் பாள்"**[109]

எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### *2.2.5.2.1.11. சுகாவதி*

வத்தவ நாட்டின் கௌசாம்பி நகரின் மன்னன் சுபச்சந்திரன். அவனது மனைவி 'சுகாவதி' என்பவளாவாள். மலையைப் பேன்று அவள் கற்பில் திண்மையுடையவள் என்பதைக் காப்பிய ஆசிரியர்,

**"வெற்புநிகர் கற்பினாள் வேந்தன்மகா தேவியும்**

**நற்சுகா வதியெனு நாமமினி தாயினாள்"**[110]

எனக்குறிப்பிடுகிறார்.

### *2.2.5.2.1.12. செயஸ்திரி*

அவந்தி நாட்டு மன்னன் செயசேனனின் மனைவி செயஸ்திரி. இவளைக் குறித்து,

**"அவந்தியென்னு நாட்டினு ளானவுஞ்சை நீணகர்**

**உவந்தமன்ன னாமமு மோங்குஞ்செய சேனனாம்**

**அவன்தனன் மனை வியரானநற் செயசிரீ"**[111]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

### *2.2.5.2.1.13. சந்திரமதி*

கலிங்க நாட்டின் இரத்தினபுர நகர மன்னான சந்திரகுப்தனின் மனைவி சந்திரமதி. இவளை,

**"திலங்கு ரத்னபுர மிந்நகர்க்கு மன்னவன்**

**துலங்குசந்திர குப்தன் றோகைசந் திரம்மதி"**[112]

எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### *2.2.5.2.1.14. விஜயை*

கங்காள நாட்டு மன்னனான விஜயநந்தனின் மனைவியான விஜயை எனும் பட்டத்தரசி குறித்து,

**"பொங்குமகு டம்முடி பொற்புவிசை யந்திரன்**

**இங்கித மனைவிபேர் இயல்விசையை யென்பளே"**[113]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

### 2.2.5.2.2. நாககுமாரனின் மனைவியர்

சகலகலா வல்லி, கின்னரி, மனோகரி, திரிபுவனாரதி, கணைவிழி, குணவதி, சுபசந்திர மன்னனின் மகள்களான சுயம்பிரபை, சுப்பிரபை, சுதந்தை, கனகமாலை, நங்கை, பதுமை, நாகதத்தை, அபிசந்திரன் மகள் சந்திரபிரபை, சுகண்டனின் மகள்கள் அனுயை, உருக்குமணி, செயசேனனின் மகள் மேனகி, மதுரை மன்னனின் மகள் சிரீமதி, வரதிரட்சகனின் ஐந்நூறு மகள்கள், சந்திரகுப்தனின் மகள் மதனமஞ்சிகை, விஜயந்தன் மகள் இலக்கணை ஆகியோரை நாககுமாரன் மணம் செய்த மகளிராவர்.

#### 2.2.5.2.2.1. சகலகலாவல்லி

சகலகலாவல்லியை ‘நாமகள்’ என்றே காப்பிய ஆசிரியர் சுட்டுகிறார். நாககுமாரன் இவளை மணந்தமையை,

**“நாகநே ரகலத் தானை நாமகட் சேர்த்தி”**[114]

என்றபாடலடி குறிப்பிடுகிறது.

#### 2.2.5.2.2.2. கின்னரி

பஞ்ச சுகந்தனி எனும் கணிகையின் மூத்தமகள் கின்னரி. யாழிசைப்பதில் சிறந்தவளான இவளை நாககுமாரன் மணம் புரிகிறான்.

#### 2.2.5.2.2.3. மனோகரி

சுகந்தனியின் இளையமகள் மனோகரி. இவளும் யாழிசைப்பதில் வல்லவள். கின்னரியுடன் மனோகரியையும் நாககுமாரன் மணம்புரிந்தமையை,

**“பலகல மணிந்த வல்குற் பஞ்சநற் சுகந்த னீயும்**

**துலங்குதன் சுதையர் தம்மை தூய்மணிக் குமரற் கீந்தான்”**[115]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

### *2.2.5.2.2.4. திரிபுவனாரதி*

*காம்பீர நாட்டின் மன்னனான நந்தனின் மகளான திரிபுவனாரதியை வீணைப் போட்டியில் வென்று நாககுமாரன் மணந்தமை,*

**"விற்புரு வதனத் தாளை வீணையின் வென்று கொண்டு**

**கற்புடை யவடன் காமக் கடலிடை நீந்து"**[116]

*எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.*

### *2.2.5.2.2.5. கணைவிழி*

*திரிகூட நகரத்தின் வனராசன் மகளான கணைவிழியை நாககுமாரண் மணந்தமையை,*

**"அந்நகர்க் கதிப னான வனராசன் றேவி தானு**

**மன்னிய முலையி னாள்பேர் வனமாலை மகணன் னாமம்**

**நன்னுதற் கணைவிழியை நாகநற் குமர னுக்குப்**

**பன்னரும் வேள்வி தன்னால் பார்த்திபன் கொடுத்த தன்றே"**[117]

*எனும் பாடல்வழி அறியமுடிகிறது.*

### *2.2.5.2.2.6. குணவதி*

*கிரநகர மன்னன் அரிவரனின் மகளான குணவதியை அந்நகருக்குச் சென்று நாககுமாரன் மணந்து கொள்கிறான். குணவதி சுருண்ட கூந்தலையும், கரிய கண்களையும், சிவந்த வாயையும் உடையவளாகத் திகழ்ந்தமையை,*

**"சுரிகுழற் கருங்கண் செவ்வாய்த் துடியிடைக் குணவதி"**[118]

*எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது. குணவதியை விரும்பிய பிரத்தியோதனனை நாககுமாரன் வெற்றி கொண்டு, அவளை வேள்வி முறைப்படி மணந்து கொண்டமையை,*

**"நாகநற் குமரன் கேட்டு நாற்படை யோடுஞ் சென்று**

**வேகநற் போர்க்க ளத்தில் வெற்றிகொண் டவனை யோட்டி**

**நாகநல் லெருத்தின் வந்து நகர்புகுந் திருப்ப மிக்க**

**போகமிக் குணவதீயை புரவலன் கொடுத்த தன்றே"**[119]

என்றபாடல் வழி அறியமுடிகிறது.

**2.2.5.2.2.7. சுபசந்திரனின் ஏழு மகள்கள்**

வத்சை நாட்டு மன்னனான சுபசந்திரனுக்குச் சுயம்பிரபை, சுப்பிரபை, சுதந்தை, கனகமாலை, நங்கை, பதுமை, நாகதத்தை என்னும் ஏழு மகள்கள் இருந்தனர்.

**"நன்சுயம் பிரபையும் நாமசுப் பிரபையு**

**இன்பநற் பிரபையும் இலங்குசொர்ண மாலையும்**

**நங்கைநற் பதுமையு நாகதத்தை யென்பரே"**[120]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக இவர்களைக் குறித்து அறியமுடிகிறது. இவ்வேழு கன்னியரையும் சுகண்டன் எனும் மன்னன் மணக்க விரும்பினான். ஆனால் சுபசந்திரன் இதனை ஏற்கவில்லை. இதனால் வெகுண்ட சுகண்டன் சுபச்சந்திரனைக் கொன்றுவிட்டு ஏழு கன்னியரையும் ஓர் இருட்டறையில் சிறைவைத்தான். சிறையிலிருந்து தப்பிவந்த நாகதத்தை இதனைத் தன் தந்தையின் தம்பியாகிய அபிச்சந்திரனிடம் குறிப்பிட்டாள். அபிச்சந்திரன் தன் அண்ணன் புதல்வியரை விடுவிக்க நாககுமாரனின் உதவியை நாடினான். படையெடுத்துச் சென்ற நாககுமாரன் சுகண்டனைக் கொன்று ஏழுகன்னியரையும் மணந்தமையை,

**"சுபமுகூர்த்த நற்றினஞ் சுபசந்திரன் சுதைகளும்"**[121]

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது.

**2.2.5.2.2.8. அபிசந்திரன் மகள்**

சுபசந்திரனின் தம்பியான அபிச்சந்திரன் மகளான சந்திரபிரபையை நாககுமாரன் மணந்து கொண்டமையை,

**"அபிசந்திரன் றன்மக ளாம்"**[122]

எனக் குறிப்பிடுவதிலிருந்து உய்த்தறிய முடிகிறது. அபிசந்திரன் மகளின் பெயர் சந்திரபிரபை என்பதை உரையாசிரியர் தரும் குறிப்பிலிருந்து அறியமுடிகிறது,[123]

### 2.2.5.2.2.9. சுகண்டன் மகள்கள் இருவர்

நாககுமாரன், தான் போரில் கொன்ற சுகண்டனின் மகள்களையும மணந்து கொண்டமை குறித்து,

**"சுகண்டன் சுதையுயுடன் செபமந்தி**

**வேள்வியாற் செல்வனெய்தி யின்புற்றான்"**[124]

எனும் பாடலடிகள் உணர்த்தும் கருத்துகள் புலப்படுத்துகின்றன. சுகண்டனனி மகள்கள் பெயர்கள் அனுஜை, உருக்குமணி என்பதை நாககுமார காவிய உரையாசிரியர் கருத்திலிருந்து அறியமுடிகிறது.[125]

### 2.2.5.2.2.10. மேனகி

அவந்தி நாட்டு மன்னன் செயசேனனின் மகள் மேனகி. இவளை மாவியாளன் மணக்க விரும்பி உஞ்சை நகருக்கு வந்தான். ஆனால் மேனகை மாவியாளனின் அழகின்மையைக் கண்டு அவனை மணக்க விரும்பவில்லை. பின்னர் அங்கு சென்ற நாககுமாரன் அவளை மணம்புரிந்தமையை,

**"மின்னிடை நேரிழை மேனகி யெனவொரு**

**மன்தனை யிச்சியாள் மாவியாளன் சொல்லும்**

**அந்நகரிற் செல்லலு மரிவையர் தரித்திட**

**மன்னனம்பு வேள்வியான் மன்னிநற் புணர்ந்தான்"**[126]

என்ற பாடற்கருத்து வாயிலாக அறியமுடிகிறது.

### *2.2.5.2.2.3.11. சிரீமதி*

மதுரை மன்னனின் மகள் சிரீமதி. நடனக்கலையில் வல்லவளான சிரீமதியை அவள் நடனத்திற்கேற்றவாறு இசை முழக்கி அவளை மணந்தான். இச்செய்திகளை,

**"மதுரைமா நகரியில் உற்றிருந்த சரீமதி"**[127]

**"அங்குசென்றவ் வண்ணலு மவளை வென்று கொண்டனன்"**[128]

எனும் பாடலடிகள் உணர்த்தும் கருத்துகளிலிருந்து அறியமுடிகிறது.

### *2.2.5.2.2.3.12. வரதிரட்சகனின் ஐந்நூறு மகள்கள்*

பரிதிவீ திலகம் என்ற நகரை ஆண்ட வரதிரட்சகனுக்கு ஐந்நூறு புதல்வியர் இருந்தனர். அவர்களைத் தாய்மாமனான வாயுவேகன் என்பவன் மணக்க விரும்பினான். அழகற்ற அவனை மணக்க ஐந்நூறு மகளிரும் ஒப்பவில்லை. இதனால் வெகுண்ட வாயுவேகன் வரதிரட்சகனைக் கொலை செய்து விட்டு அவன் புதல்வியர் அனைவரையும் சிறை வைத்தான். தங்கள் தந்தையைக் கொன்றவனை எவரொருவன் கொல்கின்றானோ அவனையே தாங்கள் மணப்பதாக வரதிரட்சகனின் புதல்வியர் உறுதியேற்கின்றனர். மங்கையர் அனைவரும் அருகதேவன் ஆலயத்தின் முன் உச்சிப் பொழுதில் அழுது அரற்றுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இவையாவற்றையும் ஐந்நூறு புதல்வியருள் ஒருத்தியான தரணி சுந்தரி வாயிலாக அறிந்த நாககுமாரன் வாயுவேகனை வதைசெய்து கொன்று, ஐந்நூறு மகளிரையும் மணம்செய்கிறான். இதனை,

**"அஞ்சுநூற்று மங்கையரை யண்ணல்வேள் வியாவெய்தி**
**நெஞ்சிலன்பு கூரவே நிரந்தரம் புணர்ந்தபின்"**[129]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

***2.2.5.2.2.3.13. மதனமஞ்சிகை***

கலிங்க நாட்டு மன்னன் சந்திரகுப்தனின் மகள் மதனமஞ்சிகை. மதனமஞ்சிகையின் அழகுநலனைக் கேள்வியுற்ற நாககுமாரன், நடந்தே கலிங்கநாடு சென்று மதனமஞ்சிகையை மணந்த செய்தி,

**"நாகநற் குமரன் சென்று நன்மந்திர வேள்வியால்**
**வாகன மினிதினின்று மனதனமஞ்சி கையொடுந்**
**தாகமிக் குடையானாய்த் தான்லயப் பருகினன்**
**நாகநற் புணர்ச்சிபோல் நன்குட னிருந்தரோ"**[130]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

***2.2.5.2.2.314. இலக்கணை***

கங்காள நாட்டு விஜயந்தன் மகள் இலக்கணை. நாககுமாரன் இறுதியாக மணம் செய்து கொண்ட பெண் இலக்கணை ஆவாள். இவள் பெண்மை அழகிற்கு இலக்கணமாகத் திகழந்தமையையும் அவளை நாககுமாரன் வேள்வி முறைப்படி மணம் செய்து கொண்டமையையும்,

**"இலக்கணை யெனுமக ளிலக்கண முடையவள்"**[131]
**மிக்கவண்ண லுஞ்சென்று மெய்ம்மைவேள் விதன்மையால்**
**அக்கணத் தவனெய்தி யவளுடன் போகந் துய்த்தபின்"**[132]

எனும் பாடலடிகள் புலப்படுத்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது. நாககுமாரன், தான் மணந்த பெண்களுள் இலக்கணையின் மீதே தனக்கு அதிக அன்பு இருப்பதாக முனிவர் ஒருவரிடம் குறிப்பிடுகிறான். இதற்குகான காரணத்தை முனிவரிடம் வேண்டுவதை,

**"நாற்றமிக் குமரனு நன்புறப் பணிந்தபின்**
**யேற்றவறங் கேட்டுட னிருந்தலக் கணையின்மேல்**
**ஏற்றமோக மென்னென னியன்முனி யுரைப்பரே"**[133]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இலக்கணை மீது நாககுமாரன் மிகுந்த அன்பு கொண்டிருப்பதற்கான காரணத்தை முனிவர்

அவர்தம் முற்பிறவி வரலாற்றின் வாயிலாக உணர்த்துகிறார். முற்பிறவியில் நாகதத்தன் எனும் பெயரிலிருந்த நாககுமாரன், நாகவசு என்பவளைத் திருமணம் செய்து கொள்கிறான். பரமா முனிவரிடம் அறங்கேட்ட நாகதத்தன் பஞ்சமி நோன்பியற்றி உயிர்விடுத்தான். அவன் மனைவி நாகவசுவும் அவ்வாறே உயிர்விடுத்தாள். அவளே மறுபிறவியில் இலக்கணையாகப் பிறந்து நாககுமாரனை மணக்கிறாள். இதன்பொருட்டே நாககுமாரனுக்கு இலக்கணை மீது மிகுந்த அன்பிருப்பதை முனிவர் முற்பிறவி வரலாற்றை எடுத்துரைத்து விளக்குகிறார். நாககுமாரன் தன்மனைவியருள் இலக்கணைக்குப் பட்டத்தரசி என்ற சிறப்பினை வழங்கியமையை,

**“சேர்ந்ததன் மனைவியருள் செயலக் கணைதன்னை**
**வாய்த்தமகா தேவிபட்டம் வன்மைபெற வைத்தான்”**[134]

என்ற பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

### 2.2.5.2.3. ஆசை நாயகியர்

உதயணகுமார காவியத்தில் இடம்பெற்றுள்ள மன்னர்கள் பட்டத்தரசியரைத் தவிரப் பல்வேறு பெண்களை தம் மனதிற்கு இனியராகக் கொண்ட செய்திகள் இடம்பெற்றுள்ளன. சிரேணிக மன்னனுக்கு எட்டாயிரம் பேர் உரிமை மகளிராக இருந்தமையை,

**“மற்றுமெண் ணாயி ரம்பேர் மன்னனுக் கினய மாதர்”**[135]

என்ற பாடலடி வாயிலாக அறியமுடிகிறது.

இவ்வாறே கனகபுர மன்னன் சயந்தரனுக்குப் பட்டத்தரசியைத் தவிர்த்து எட்டாயிரம் மகளிர் இருந்தமையை,

**“மற்றுந் தேவியர் மன்னுமெண் ணாயிரர்**
**வெற்றி வேந்தன் விழைந்து”**[136]

### *2.2.5.2.4. ஆரியங்கணைகள்*

*நாககுமாரனின் தாயான பிரிதிமதிக்கு அறங்களைப் போதிக்கும் சிரீமதி என்னும் பெண்துறவி பற்றிய குறிப்பு,*

**“பிரிதிநவிநற் றேவியுந்தன் பெருமகனை விட்டு**

**சிரீமதி யெனுந் துறவி சீரடி பணிந்து**

**அரியதவத் தரித்தவளு மச்சுத மடைந்தாள்”**[137]

*என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.*

*நாககுமாரனின் மனைவியான இலக்கணையும் பிற மனைவியரும் பதுமை எனும் பெண்துறவியைப் பணிந்து அறங்கேட்டு நோன்பியற்றியமையை,*

**“கமலமல ராணிகர்நற் காட்சியிலக் கணையும்**

**துமிலமனைப் பதுமையெனும் துறவரடி பணிந்தான்”**[138]

*என்ற பாடற்கருத்து வாயிலாக அறியமுடிகிறது.*

### *2.2.5.2.5. இயக்கி*

*இரம்மியக நாட்டிலுள்ள அலகாபுரி மன்னன் ஜிதசத்துரு பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிந்து நான்காயிரம் இயக்கியர்களைப் பெற்றான். பின் அவன் இயக்கியர்களிடம் பின்னாளில் நாககுமாரன் என்ற அரசிளங்குமரனுக்கு ஏவல் புரியக் கட்டளையிட்டான். அவ்வாறு இயக்கியர்கள் நாககுமாரனின் ஏவலுக்கு உரியவர்களாகத் திகழ்ந்தமையை,*

**“இனியுனக காள ரானோ மீரி ரண்டா யிரவர்**

**எனவவள் சொல்ல நன்றென்று”**[139]

*எனும் பாடற்கருத்து வாயிலாக அறியமுடிகிறது.*

## 2.3. தொகுப்புரை

நீண்ட கதைப்பின்னல் உடைய தொடர்நிலைச் செய்யுட்களால் அமைந்த நூல்களே பிற்காலத்தில் காப்பியங்கள் என வழங்கலாயின.

தமிழில் தோன்றிய காப்பியங்களை ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் என வகைப்படுத்துவர். இவ்வாறு வகைப்படுத்திப் பகுத்தமை பிற்காலத்தார் செயலே எனலாம்.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களில் ஒன்றோ பலவோ குறைந்த முறையில் படைக்கபடுவது சிறுகாப்பியம் எனப்பட்டது. தமிழில் சூளாமணி, நீலகேசி, யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம் ஆகியன ஐஞ்சிறு காப்பியங்கள் எனப்படுகின்றன. வெவ்வேறு காலக்கட்டங்களில் படைக்கப்பட்ட இவ்ஐந்து காப்பியங்களும் சமண சமயத்தைச் சார்ந்தவையாகும்.

தோலாமொழித் தேவரால் இயற்றப்டட சூளாமணி, பிரதமாநுயோக மகாபுராணம் என்ற சமணசமய நூலில் கூறப்பட்டுள்ள பழைய கதையைத் தழுவி இயற்றப்பட்டதாகும். திவிட்டன் என்ற மன்னனின் வாழ்வியலை விளக்கும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது. சமண சமயம் சார்ந்த பல்வேறு கருத்துகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. அரசர்கள் உலக வாழ்வைத் துறத்தலின் தேவையை இந்நூல் வலியுறுத்தியுள்ளது. சூளாமணியில் மன்னர்களின் தாய்மார், மனைவியர், மகள்கள், அரசியர் மற்றும் இளவரசியரின் தோழியர், இளவரசனின் தங்கையர் ஆகியோர் மகளிர் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர். வானவ மகளிர் குறித்த செய்தியும் சூளாமணியில் இடம்பெற்றுள்ளது.

நீலகேசி சமணசமயக் கொள்கைகளை எடுத்துரைக்கும் தருக்க நூலாகும். தன் அறிவுத்திறனால் சமயவாதிகள் பலரை வெற்றிகொள்ளும் பாத்திரமாக நீலகேசியின் பாத்திரம் காப்பியத்தில் அமைந்துள்ளது. பௌத்த

சமயத்தைச் சேர்ந்த குண்டலகேசி என்ற பெண் பாத்திரமும் இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

யசோதரன் என்ற அவந்தி நாட்டு மன்னனின் வரலாற்றை விரித்துரைக்கும் யசோதரகாவியம் வடமொழிக் கதையைத் தழுவித் தமிழில் படைக்கப்பட்டதாகும். யசோதர காவியத்தில் அபயமதி, சந்திரமதி, அமிர்தமதி, குணவதி, புட்பாவலி, ஆகிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. அமிர்தமதியைத் தீய ஒழுக்கம் நிறைந்த பெண்ணாகக் காப்பிய ஆசிரியர் படைத்துள்ளார்.

உதயணன் என்ற வடநாட்டு மன்னன் வரலாற்றை உதயணகுமார காவியம் எடுத்தியம்புகிறது. அரசகுடும்ப மகளிர் இக்காப்பியத்தில் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர். அறம் கற்பிக்கும் மகளிர், குறிகூறும் மகளிர் குறித்தும், பரத்தையர், நாடக மகளிர் பற்றிய செய்திகள் உதயணகுமார காவியத்தில் இடம்பெற்றுள்ளன.

ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக எண்ணிக்கையில் மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்ற காப்பியமாக நாககுமார காவியம் திகழ்கிறது பட்டத்தரசியர், நாககுமாரன் மணந்த மனைவியர், சமயமகளிர் என இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிரைப் பாகுபடுத்தலாம். இந்நூலில் அதிக அளவிலான மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன.

ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களின் பெயர்கள் வடமொழிப் பெயர்களாகவே உள்ளன. ஆடவன் ஒருவன் அதிக எண்ணிக்கையில் பெண்களை மணம் புரிந்தமையை நாககுமார காவியத்தின் வழி அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. பன்னிருபாட்டியல், நூ.225.
2. மேலது. நூ.225.
3. மேலது, 226.
4. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.169.
5. எஸ்.சௌந்தரபாண்டியன், தமிழில் காப்பியங்கள், ப.1.
6. தண்டியலங்காரம் நூ.88:1.
7. மேலது, நூ.10.
8. மயிலைநாதர், (உ.ஆ.), நன்னூல், ப. 123.
9. வச்சணந்திமாலை, நூ.43.
10. ஆ.சு.அடைக்கலசாமி, தமிழ் இலக்கிய வரலாறு, ப.163.
11. சூளாமணி, பா.2:4.
12. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.156.
13. சூளாமணி, பா.64:1-2.
14. மேலது, பா.65:1-2.
15. மேலது, பா.59:4.
16. மேலது, பா.63:1-3.
17. மேலது, பா.71.
18. மேலது, பா.63:4.
19. மேலது, பா.72:1.
20. மேலது, பா.146
21. மேலது, பா.147.
22. மேலது, பா.150:2-3.
23. மேலது, பா.151:3-4.
24. மேலது, பா.1003:2

25. மேலது, பா.1001.
26. மேலது, பா.160.
27. மேலது, பா.1004:2-3.
28. மேலது, பா.296:2-3.
29. மேலது, பா.315.
30. மேலது, பா.337:3-4.
31. மேலது, பா.344.
32. மேலது, பா.345.
33. மேலது, பா.1746:3-4.
34. மேலது, பா.353.
35. மேலது, பா.1469:3-4.
36. மேலது, பா.121:1.
37. மேலது, பா.123:2.
38. மேலது, பா.124:4.
39. நீலகேசி, பா.3.
40. மேலது. ப.
41. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.991.
42. சரளா இராசகோபாலன், சமயம் வளர்த்த மகளிர், பக்.109-11.
43. எஸ்.சௌந்திரபாண்டியன், தமிழில் காப்பியங்கள், ப.369
44. நீலகேசி, பா.671:1-2.
45. மேலது, பா.669:2.
46. மேலது, பா.764.
47. மேலது, பா.4.
48. சமயதிவாகர வாமன முனிவர், (உ.ஆ), நீலகேசி, ப.15.
49. நீலகேசி, பா.164:3-4.

50. மேலது, பா.176:3-4.

51. மேலது, பா.227:4.

52. மேலது, பா.173:4.

53. மேலது, பா.181:4.

54. மேலது, பா.186:4.

55. மேலது, பா.193:1.

56. மேலது, பா.206:4.

57. மேலது, பா.59.

58. மேலது, பா.60:3-4.

59. வீடூர் பூர்ணசந்திரன், (உ.ஆ), யசோதரகாவியம் ப.10.

60. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.198.

61. யசோதரகாவியம், பா.45.

62. மேலது, பா.47.

63. மேலது, பா.169:4

64. மேலது, பா.180:1-2.

65. மேலது, பா.96.

66. மேலது, பா.109.

67. மேலது, பா.259:2-4.

68. மேலது, பா.228.

69. மேலது, பா.16.

70. மேலது, பா.191.

71. உதயணகுமார காவியம். பா.11.

72. மேலது, பா.103:2-4.

73. மேலது, பா.143.

74. மேலது, பா.145.

75. மேலது, பா.111:3-4.

76. மேலது, பா.157:1.

77. மேலது, பா.190

78. மேலது, பா.202:1-2.

79. மேலது, பா.158:1-2.

80. மேலது, பா.218.

81. மேலது, பா.219.

82. மேலது, பா.256:1-2.

83. மேலது, பா.259:2.

84. மேலது, பா.278:2.

85. மேலது, பா.278:3-4.

86. மேலது, பா. 287:2-4.

87. மேலது, பா.228:3-4.

88. மேலது, பா.229.

89. மேலது, பா.240.

90. மேலது, பா.333:3.

91. மேலது, பா.338:1-2.

92. மேலது, பா.344:3.

93. மேலது, பா.345:1-3.

94. மேலது, பா.109:2.

95. மேலது, பா.132:2.

96. மேலது, பா.137:2-3.

97. மேலது, பா.91.

98. நாககுமார காவியம், பா.9.

99. மேலது, பா.27:1-2.

100. மேலது, பா.60:1-2.

101. மேலது, பா.31:3-4.

102. மேலது, பா.35:3-4.

103. மேலது, பா.75:3-4.

104. மேலது, பா.79:2.

105. மேலது, பா.80:2-4.

106. மேலது, பா.80:1-2.

107. மேலது, பா.89:1-2.

108. மேலது, பா.102.

109. மேலது, பா.13:1-2.

110. மேலது, பா.122:2-4.

111. மேலது, பா.128:1-3.

112. மேலது, பா.140:1-2.

113. மேலது, பா.142:3-4.

114. மேலது, பா.53:3.

115. மேலது, பா.56.

116. மேலது, பா.90:1-2.

117. மேலது, பா.99.

118. மேலது, பா.113:3-4.

119. மேலது, பா.114.

120. மேலது, பா.123:2-4.

121. மேலது, பா.126:2.

122. மேலது, பா.126:3.

123. ஏ.சந்தானம், (உ.ஆ), நாககுமார காவியம், ப.173.

124. நாககுமார காவியம், பா.126:3-4.

125. ஏ.சந்தானம், (உ.ஆ), மு.நூ.,ப.173.

126. நாககுமார காவியம், பா.131.

127. மேலது, பா.132:1-2.

128. மேலது, பா.133.

129. மேலது, பா.139:1-2.

130. மேலது, பா.141.

131. மேலது, பா.143:1.

132. மேலது, பா.143:1-3.

133. மேலது, பா.144:2-4.

134. மேலது, பா.159:3-4.

135. மேலது, பா.10:1

136. மேலது, பா.28:1-2.

137. மேலது, பா.158:2-4.

138. மேலது, பா.163:2-4.

139. மேலது, பா.97:1-2.

# இயல் - 3

# மகளிரும் இல்வாழ்வும்

## *3.0. முன்னுரை*

இல்லற வாழ்வில் மகளிர்க்குரிய வாழ்வியல் நெறிமுறைகள் தமிழ் இலக்கண, இலக்கியங்களில் தொல்காப்பியர் காலம் முதலே குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க இலங்கியங்களும் தமிழில் தோன்றிய நீதி இலக்கியங்களும் காப்பிய இலக்கியங்களும் இல்வாழ்வில் மகளிர்க்கு வேண்டிய பண்புகளை வலியுறுத்தியுள்ளன. நற்பண்புகளில் சிறந்து விளங்கும் மகளிர் குறித்தும் வாழ்வியல் ஒழுக்கங்களைப் பின்பற்றி வாழாத மகளிர் குறித்தும் தமிழ் இலக்கியங்களில் பல்வேறு செய்திகள் விரவிக் கிடக்கின்றன. பதினெண் கீழ்க்கணக்கு அறநூல்கள் இல்வாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்த மகளிர்க்கு வேண்டிய பல்வேறு வாழ்வியல் அறங்களை உணர்த்தியுள்ளன. காப்பிய இலக்கியங்களிலும் இவ்வறங்கள் இடம்பெற்றுள்ளன. பெண்மையின் மேன்மையை எடுத்துரைக்கும் தமிழ்க் காப்பிய ஆசிரியர்கள், மகளிரின் இழிகுணங்களையும் தம் நூல்களில் ஏற்ற இடங்களில் எடுத்துரைத்துள்ளனர். ஐஞ்சிறு காப்பியங்களில் அரசகுடும்ப மகளிரின் இல்லற வாழ்வியல் குறித்தே பெருமளவில் அறியமுடிகிறது. மிகக் குறைந்த அளவிலேயே இந்நூல்களில் சமூக வாழ்க்கையில் இடம்பெற்றுள்ள பிற மகளிர் குறித்த செய்திகளை அறிய முடிகிறது. ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள இல்வாழ் மகளிர்க்குரிய பண்புகள், இல்லறம் குறித்த சமண சமயக் கொள்கைகள், மகளிரின் திருமண முறைமைகள், கருவுற்ற மகளிர் நிலை, தாய்மார் பண்பு, குழந்தைப் பேற்றிற்கான மகளிர் வழிபாடு, மாமியார், மருமகள் உறவு நிலை, மகளிரின் தீய ஒழுக்கங்கள், பட்டத்தரசியர் பண்பாடு, மகளிரின்

வழிபாட்டு முறைகள், மகளிர் விளைாடல்கள், ஒப்பனை மற்றும் அணிகலன்கள் குறித்த செய்திகள், மகளிர் பணிகள், கணவன் இறப்பிற்குப் பின் மகளிர் நிலை ஆகியன குறித்த செய்திகள் இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

### 3.1. இல்வாழ்வில் மகளிர்க்குரிய குணங்கள்

மகளிர்க்கான வாழ்வியல் ஒழுக்க நெறிகள் குறித்துத் தொல்காப்பியர் காலந்தொட்டே அறியமுடிகிறது. தொல்காப்பியர்,

**"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்துபுறந் தருதலுஞ் சுற்றம் ஓம்பலும**
**பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்"**[1]

என மகளிர்க்குத் தேவையான பண்புநலன்களைக் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியர்க்குப் பின்பு சங்க இலக்கியப் புலவர்களும் மகளிர் வாழ்விற்குத் தேவையான பல்வேறு நற்பண்புகளை வலியுறுத்தியுள்ளனர்.

சங்கம் மருவிய காலத்தில் எழுந்த பதினெண் கீழ்க்கணக்கு அற நூல்களில் சமணசமய நூலாசிரியர்கள் உணர்த்தும் கருத்துகள் சமணசமயக் கொள்கைகளை அடியொற்றி உள்ளன. சமண முனிவர்களால் இயற்றப்பட்ட நாலடியாரில்,

**"நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்**
**மேலாறு மேலுறை சோரினும் - மேலாய**
**வல்லாளாய் வாழும்ஊர் நற்புகழு மாண்கற்பின்**
**இல்லாள் அமர்ந்ததே இல்"**[2]

எனும் பாடல் இல்லற மகளிரின் மாண்புகளை விளக்குகிறது. 'உயர்ந்த இல்லொழுக்கங்களில் திறமையுடையவளாய், கற்பு நிலையுடைய மனைவி

அமர்ந்திருக்கும் வீடே இல்லம் எனப்படும்' என்ற கருத்தை இப்பாடல் உணர்த்தி நிற்கிறது. இக்கருத்து நாலடியாரில்,

**"மாண்ட மனையாளை யில்லாதான் இல்லகம்**

**காண்டற் கரியதோர் காடு"[3]**

எனும் பாடலடிகளிலும் இடம்பெற்றுள்ளது. திரிகடுகம் என்ற சமணசமய நூல், விருந்தோம்பல், இல்லறம் ஓம்பல், நன்மக்களைப் பெறுதல் ஆகியனவற்றை மகளிர்க்குரிய பண்புகளாகக் குறிப்பிடுகிறது. இதனை,

**"நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்**

**இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் - தொல்குடியின்**

**மக்கள் பெறலின் மனைக் கிழத்தி இம்மூன்றும்**

**கற்புடையாள் பூண்ட கடன்"[4]**

என்ற பாடலுணர்த்தும் கருத்துகள் வாயிலாக அறியமுடிகிறது. இல்லற வாழ்வில் ஆடவர்க்குரிய ஒழுக்கங்களையும் சமணச் சான்றோர்கள் வலியுறுத்தியுள்ளனர். திருக்குறள், நாலடியார், சிலப்பதிகாரம் ஆகிய நூல்களில் பிறன் மனைவியை விரும்புதல் தவறென்ற கருத்து இடம்பெற்றுள்ளது. இக்கருத்து நீலகேசியில்,

**"கோறல் பொய்த்தல் கொடுங்களவு நீக்கிப் பிறர்ம னைகண்மேற்**

**சேறலின்றிச் செழும்பொருண்மேற் சென்ற சிந்தை வேட்கை"[5]**

எனும் பாடலடிகளில் இடம்பெற்றுள்ளது.

### 3.2.இல்வாழ்வில் மகளிர்க்கு ஆகாத குணங்கள்

இல்வாழ்க்கையில் மகளிர்க்கு ஆகாத குணங்களைக் கொண்டொழுகும் மகளிர் 'இல்வாழ்பேய்' எனச் சமண முனிவர் ஒருவர் குறிப்பிடுகிறார். 'கணவனை எதிர்த்து நின்று பேசும் பெண்கள், சமையல் செய்யாத பெண்கள், சமைத்த உணவினை வழங்காத பண்புடையவள் ஆகிய தீய குணம் உடைய மகளிர், தம் கணவரை வருத்துவர் என்பதை,

**“எறியென்று எதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை**

**அட்டில் புகாதாள் அரும்பிணி – அட்டதனை**

**உண்டி உதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்**

**கொண்டானைக் கொல்லும் படை”[6]**

என்ற பாடல் புலப்படுத்தும் கருத்திலிருந்து அறியலாம்.

**“கள்ளுண்டல் காணில் கணவற் பிரிந்துறைதல்**

**வெள்கில ளாய்ப்பிற ரிற்சேறல் - உள்ளிப்**

**பிறர்கரும மாராய்தல் தீப்பெண் கிளமைத்**

**திறமதுதீப் பெண்ணின் தொழில்”[7]**

என்ற பாடல் தீய ஒழுக்கம் மேற்கொண்டொழுகும் பெண்களின் இயல்புகள் சுட்டப்பட்டுள்ளன. கள்ளுண்ணல், கணவனைப் பிரிந்து வாழ்தல், பிறர் இல்லத்தை விரும்பி அடைதல், மற்றவர் செயல்களை ஆராய்தல் முதலியன தீய குணங்கள் நிறைந்த பெண்களின் இயல்புகளாகும் எனச் சமண முனிவர்கள் சுட்டியுள்ளனர். சமணசமயம் சார்ந்த கருத்துகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன எனக் கருதுவதற்கு இடமுண்டு. மேலும்,

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் சமணக் கொள்கைகள் பலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். சமூக வாழ்வில் கற்பில் சிறந்த மகளிர் போற்றுதற்குரியவராவார் என்பதை,

**“உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ரேத்தலும்”[8]**

எனக்குறிப்பிடுகிறார். இல்வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் மகளிர்க்குரிய பொறுப்புகள், கடமைகள், ஒழுக்கங்கள் ஆகியவற்றை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் தாம் படைத்த பல்வேறு பாத்திரங்களின் வாயிலாக விளக்கியுள்ளார். கவுந்தியடிகள் எனும் சமணப் பெண்துறவி வாயிலாக மனித வாழ்வியலுக்குத் தேவையான பல்வேறு அறங்களை இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். கோவலனிடம் கண்ணகி

**“அறவோர்க் களித்தலும் அந்தனர் ஓம்பலும்**

**துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்**

**விருந்தெதிர் கோடலும்”[9]**

எனக் குறிப்பிடுவதிலிருந்து இல்லற மகளிர்க்குரிய கடமைகளை அறியமுடிகிறது.

### 3.3.சமணசமயமும் இல்லறமும்

மனைவியோடு ஓர் இல்லத்திலிருந்து வாழும் இல்வாழ்க்கையைச் சமணசமயம் வெறுக்கவில்லை. இல்லற வாழ்க்கையை மேற்கொள்வோர் ‘சாவகர்’ எனப்பட்டனர். சமணசமயம் மனித வாழ்வியலை இல்லறம், துறவறம் எனும் இருபெரும் பிரிவாகப் பகுத்து வாழ்வியல் ஒழுக்கங்களையும் நெறிமுறைகளையும் வகுத்துள்ளது. புத்தசமயத்தார் கொண்டிருந்த இல்லற நெறிமுறைகள் குறித்த செய்திகளைத் தமிழ் இலக்கியங்களின் வாயிலாக முழுமையாக அறிந்து கொள்ள இயலவில்லை. இருப்பினும் நீலகேசிக் காப்பியத்தின் வாயிலாகவும், புத்த சாதகக் கதைகள் வாயிலாகவும் சிறிதளவு அறியமுடிகிறது. புத்தசமயம் இல்லறத்தாரைப் பழித்துரைக்கும் கொள்கையினை உடையவர்களாகத் திகழ்ந்தமையைப் புத்தசமயத்தைச் சேர்ந்த அருக்கச்சந்திரனிடம் நீலகேசி,

**“பிறந்த வில்லினுள் வாழ்க்கை பிழைப்பெனு**

**மறங்கொண் டான்கொண் டவாச்சிய வேடத்தாற்**

**சிறந்தன வல்லன சிங்கின வெங்கணுந்**

**துறந்த வான்பொருள் சொல்லவும் வல்லையோ”[10]**

எனக் குறிப்பிடுகிறாள். ‘ஒருவன் தான் பிறந்த வீட்டிலேயே இருந்து கொண்டு மனைவி, மக்களுடன் வாழ்கின்ற வாழ்க்கை தவறான வாழ்க்கை’ என்ற அறத்தைப் புத்தர் கற்பித்ததாக இப்பாடலில் நீலகேசி குறிப்பிட்டு,

இல்லறம் குறித்த புத்தமதக் கொள்கையினைச் சாடுகிறாள். இவ்வாறே மொக்கலனிடம்,

**“சவருடைய மனைவாழ்க்கை யெனப் போந்து தவம்புரிந்தாய்”**[11]

எனக் குறிப்பிடுவதிலிருந்தும் இல்லறம் குறித்துப் புத்தசமயத்தார் கொண்டிருந்த கருத்தை அறியமுடிகிறது. ‘இல்லத்தில் மனைவியுடன் மகிழ்ந்து வாழ்கின்ற வாழ்க்கை குற்றமுடையது’ என்பது இப்பாடலடி உணர்த்தும் கருத்தாகும்.

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய வளையாபதி சமணசமயம் சார்ந்த நூலென்பதனை நூலின் தொடக்கத்தில் இடம்பெற்றுள்ள அருகக் கடவுள் வாழ்த்திலிருந்து அறியமுடிகிறது. “இதில் அறிவன் பற்றிய குறிப்பிருப்பதால் இது சமணநூலாதல் வேண்டுமென்பர்”[12] எனத் தமிழண்ணல் குறிப்பிடுகிறார். இல்வாழ்வில் நன்மக்களைப் பெற்று மனையறம் ஆற்றுதலே ஆடவர்க்கு உறுதிபயக்கும் என்பது,

**“மக்கட் பயந்து மனையற மாற்றுதல்**
**தக்க தறிந்தார் தலைமைக் குணமென்ப**
**பைத்தர வல்குற் படிற்றுரை யாரொடு**
**துய்த்துக் கழிப்பது தோற்றமொன் றின்றே”**[13]

என்ற பாடலில் விளக்கப்பட்டுள்ளது. ‘பரத்தையரை ஒதுக்கிக் கற்புடை மனைவியோடு கூடி இன்பம் நுகர்ந்து வாழ்வது ஆடவர்க்குரிய கடமையாகும்’ என இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இல்வாழ்க்கையில் கணவனைப் போற்றி வழிபட்டு வாழ்ந்திடும் மகளிர் குறித்தும் இந்நூல்,

**“ஒத்த பொருளாள் உறுதிசெய் வார்களை**
**எத்திறத் தானும் வழிபட் டொழுகலின்**

**பைத்தரவு அல்குல் பொற்பாவை யினல்லவர்**

**பத்தினிப் பெண்டிர் படியும் பரைப"[14]**

எனக் குறிப்பிட்டுள்ளது. இப்பாடற்கருத்துகள் சமணசமயத்தார் இல்வாழ்க்கை குறித்துக் கொண்டிருந்த கருத்துகளை எடுத்துரைக்கின்றன.

இல்வாழ் மானிடர்களுக்குரிய நோன்பு முறைகள், ஒழுக்கங்கள், உண்ணத்தக்கவை, உண்ணத்தகாதன ஆகியவற்றைச் சமணசமயக் கோட்பாடுகள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளன. இல்லற வாழ்விற்குப் பிந்தைய துறவு வாழ்க்கையைச் சமணம் போற்றுகிறது. இத்துறவு வாழ்வானது ஆடவர், மகளிர் ஆகிய இருதிறத்தார்க்கும் பொருந்துவதாகும். இல்லறவாழ்வில் ஆடவரும் மகளிரும் வாழ்ந்திடும் முறைமையை

**"தானமொடு சீலமவை தாங்கிநல மோங்கி**

**மானமொடு மாயிமில ராயமனை யாருங்**

**கானமொடு கல்லடரு ளில்லிடரு நீங்கி**

**ஞானமொடு செய்வினைக ணையமுயல் வாரும்"[15]**

என நீலகேசி விளக்குகிறது. இல்வாழ்வில் ஆடவரும் மகளிரும் துறவியர்க்குத் தானம் அளித்தல், தேன், கள், ஊன், முதலிய தீய உணவுகளை விலக்குதல், நன்மைகளைச் செய்து உயர்வடைதல், பொய்கூறுதலை விலக்கி வாழ்தல், மானங்காத்தல் ஆகியவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று சமணம் வலியுறுத்துவதை இப்பாடற்கருத்து உணர்த்துகிறது. 'இல்வாழ்க்கை இடர்ப்பாடுகளை உணர்ந்து அத்துன்பங்களிலிருந்து மெய்யறிவு பெற்றோர் துறவு நெறியில் செல்வர். என்பதையும் இப்பாடல் சுட்டியுள்ளது. இல்லறம், துறவறம் ஆகிய இரு வாழ்வியல் நெறிமுறைகளையும் சமணசமயம் போற்றுவதை இவ்வாய்வின்வழி அறியமுடிகிறது.

இல்வாழ் மகளிர் துறவோர்க்கு சோறு அளிப்பதைக் கடமையாகக் கொள்ளவேண்டும் என்பதை நீலகேசி ஆசிரியர்,

**"சிறந்தாய்க்கீ துரைக்கலாஞ் சிந்தனையை முடிப்பதே**

**துறந்தார்க்குக் ககடனாகிற் சோறலாற் பிறவேண்டா"[16]**

எனும் பாடல் வாயிலாக வலியுறுத்தியுள்ளார்.

### 3.4.ஆடவர் நல்வினையும் மகளிரும்

இல்லற வாழ்விற்குத் துணையாக விளங்கும் மனைவியானவள் இல்வாழ்விற்கு ஏற்ற நற்பண்புகளைப் பெற்றிருக்க வேண்டும் என்பதை திருவள்ளுவர், 'வாழ்க்கைத் துணைநலம்' என ஒரு அதிகாரத்தைப் படைத்துத் தம் கருத்துகளைக் குறிப்பிட்டுள்ளார்.

**"மனைத்தக்க மாண்புடையவள் ஆகித்தற் கொண்டான்**

**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"[17]**

'மனையை ஆளும் மனைவியானவள் மனைக்குத் தக்க மாண்புகளைப் பெற்றவளாய் இருத்தல் வேண்டும்' என்ற கருத்து இக்குறட்பாவில் இடம்பெற்றுள்ளது.

யசோதர காவியத்தில், 'ஆடவன் ஒருவன் செய்யும் நல்வினைகளைப் பொறுத்தே அவனுக்கு தாய், மனைவி எனும் நிலையில் நற்குண மகளிர் வாய்க்கப்பெறுவர்' என்ற கருத்து இடம்பெற்றுள்ளது.

**"இனையன வினையி னாகு மியல்பிது தெரிதி யாயின்**
**இனையன துணைவ ராகு மினையரின் விளையு மின்பம்**
**இனையத தெளிவி லாதார் இருநில வாக செய்கை**
**வனைமலர் மகுட மாரி தத்தனே மதியி னெதன்றான்"[18]**

ஒருவன் செய்யும் நல் வினையின் காரணமாகவே அவனுக்குத் துணையாக அமைகின்ற மகளிரால் இன்பம் விளையும் என்பது யசோதர காவிய ஆசிரியரின் கருத்தாக உள்ளது.

### *3.5.* திருமணமும் மகளிரும்

ஐஞ்சிறு காப்பியங்களுள் நாககுமார காவியம், உதயணகுமார காவியம், சூளாமணி ஆகிய காப்பியங்களில் திருமணங்கள் குறித்த செய்திகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. திருமண முறைகள் குறித்தும், திருமண காலங்களில் மகளிர் நிலை குறித்தும் இக்காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன. அழகும் இளமையும் பொருந்திய பெண்கள் திருமணம் முடிக்காமல் வாழ்நாளைக் கழிப்பது அவர்க்குப் பெருமை தருதலில்லை என்பதை,

**“பெண்ணலங் கனிந்த பேதை யிருப்பதும் பெருமை யன்றே”**[19]

எனத் தோலாமொழித் தேவர் உணர்த்துகிறார். ஐஞ்சிறு காப்பியங்கள் வடமொழிப் புராணங்களைத் தழுவி எழுதப்பெற்றவை. இக்காப்பியங்களைப் படைத்த தமிழ்ப்புலவர்கள், சமணசமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தபோதிலும் திருமணம் குறித்த தமிழ் மரபுகள் சிலவற்றையும் தம் நூல்களில் இடம்பெற வைத்துள்ளனர். ஐஞ்சிறு காப்பியங்களில் காப்பியத் தலைவர்களாக இடம்பெற்றோர் பல்வேறு பெண்களை மணந்தமை குறித்து அறியமுடிகிறது.

தம் பெற்றோர் தேர்ந்தெடுத்துக் கொடுத்த ஆடவனை மணந்த மகளிர் குறித்தும், சுயம்வரத்தின் வாயிலாக மணமகனைத் தேர்வு செய்த மகளிர் குறித்தும், தன்னைப் போட்டிகளில் வென்ற ஆடவனைத் திருமணம் செய்த மகளிர் குறித்தும் ஐஞ்சிறு காப்பியங்கள் வழி அறியமுடிகிறது. அரச குடும்பத்தைச் சார்ந்த மகளிரின் திருமணங்கள் குறித்த செய்திகளே ஐஞ்சிறு காப்பியங்களில் பெருமளவில் இடம்பெற்றுள்ளன.

தாய், தந்தையர் விரும்பிய மணமகனைத் திருமணம் செய்து கொள்ளும் மகளிர் மாண்பினைச் சூளாமணிக் காப்பிய ஆசிரியர் விளக்கியுள்ளார். சுவலனசடி மன்னன், தன் மகள் சுயம்பிரபைக்கு ஏற்ற கணவனை மணம் முடித்து வைப்பது குறித்து எண்ணும் சூழலில் காப்பிய ஆசிரியர் மகளிர் மாண்புகளை எடுத்துரைத்துள்ளார்.

**"பொலங்கலக் குரியவாம் பொருவின் மாமணி**
**இலங்கல மென்னல வீயம் சேர்த்தினும்**
**குலங்கலந் தில்வழிக் குரவர் கூட்டினும்**
**அலங்கலங் குழலிய ரன்றென் கிற்பரோ"**[20]

'பொன்னில் பதிக்கவேண்டிய சிறந்த மாணிக்கத்தைப் பெற்றவன் அதனை ஈயத்தின்கண் பதித்து வைத்தாலும் 'யான் அங்கு இரேன்' என்று அம்மாணிக்கம் மறுப்பதில்லை. அதனைப்போன்று ஒரு பெண்ணைப் பெற்றவர் அப்பெண்ணின் மாண்பிற்குப் பொருந்தாத ஒரு கயவனுக்கு மணம் செய்விப்பினும் அம்மகளிர் அவனுடன் வாழ்கின்ற வெற்றி உடையவர்' என்ற கருத்து இப்பாடலில் இடம்பெற்றுள்ளது.

நல்லொழுக்கங்களில் சிறந்த மகளிர், தம்மணம் பொருந்தாத ஒருவனைத் தாய் தந்தையர் கூட்டிவைத்த போதிலும், மனம் நொந்து அவனுடன் கூடி வாழ முயல்வரே அன்றி 'யாம் இவருடன் வாழமாட்டேம்' என மறுத்து நீங்கிடமாட்டார்' என்பதை,

**"அந்தைதா முறுவது கருதி யாருயிர்த்**
**தந்தைதா யென்றிவர் கொடுப்பிற் றையலர்**
**சிந்தைதா யிலாதவர் திறத்துஞ் செவ்வனே**
**நொந்துதாம் பிறிதுரை நொடிய வல்லரோ"**[21]

எனும் பாடல் புலப்படுத்துகிறது. சூளாமணியில் இளவரசியான சுயம்பிரபை தன் தந்தையின் விருப்பத்திற்கு ஏற்றவாறு மணம்புரிந்த செய்தி இடம்பெற்றுள்ளது.

இளம்பெண்களை வயதில் மிக மூப்பெய்த ஆடவர்க்கு மணம் செய்துவிக்கும் வழக்கம் தவறென்ற கருத்து சூளாமணியில்,

**"அண்ணலங் களிகொள் யானை யச்சுவ கண்டன் மூத்தாற்**
**கெண்ண:லுந் தகுவ தன்றா லிவன்பணி யகற்ற லாற்றாக்**
**கண்ணலங் கவரும் வேலோர்க் கீயினும் கரும மன்றால்**
**பெண்ணலங் கனிந்த பேதை யிருப்பதும் பெருமை யன்றே"**[22]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

நாககுமார காவியத்தில் திரிபுவனாரதி, தன்னை வீணைப்போட்டியில் வென்ற நாககுமாரனை மணந்த செய்தி,

**"கந்தமார் திரிபுவ னாரதி கைவீணை யதனிற் றோற்று**
**எத்தம ரோடுங் கூட வெங்களூர்க் கேறச் சென்றோம்"**[23]
**"வெற்றிவேற் குமரன் கேட்டு வியாளனுந் தானுஞ் சென்று**
**விற்புரு வதனத் தாளை வீணையின் வென்று கொண்டு"**[24]

எனும் பாடலடிகளில் இடம்பெற்றுள்ளன.

தந்தையைக் கொன்றவனைப் போரில் அழித்தவனை பெண்கள் விரும்பி மணந்து கொண்டமை குறித்து நாககுமார காவியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. பிரீதிவீ திலக நாட்டரசன் வரதிரட்சகன். அவனது அழகில் சிறந்த ஐந்நூறு மகள்களை வாயுவேகன் என்பவன் மணக்க விரும்பினான். ஆனால் வரதிரட்சகன் மறுக்கவே, அவனைக் கொன்று மங்கையர் அனைவரையும் வாயுவேகன் சிறைவைக்கிறான். இறுதியில் நாககுமாரன் வாயுவேகனைக் கொன்று, வரதிரட்சகனின் ஐந்நூறு மகள்களையும் மணந்து கொண்ட செய்தி,

**“அஞ்சுநூற்று மங்கையரை யண்ணல்லே் வியாவெய்தி**

**நெஞ்சிலன்பு கூரவே நிரந்தரம் புணர்ந்தபின்”[25]**

எனும் பாடலடிகளில் இடம்பெற்றுள்ளது.

### 3.6. திருமண முறைமைகள்

சமுதாய நடைமுறைகள் பலவற்றைக் காப்பியங்கள் தம்முள் கொண்டுள்ளன. சமூக வாழ்வில் நடைபெற்ற திருமண நிகழ்வு குறித்த செய்திகளை ஐஞ்சிறு காப்பியங்களின் வாயிலாக அறியமுடிகிறது. திருமணத்தின் போது மகளிர் புத்தாடை உடுத்திப் புதிய அணிகலண்கள் அணிகின்ற வழக்கத்தைத் தோலாமொழித்தேவர் குறிப்பிட்டுள்ளார்.

**“மங்கலவ னப்பினதோர் கோடிமடி தாங்கி**

**யங்கொலிவி சும்பினவர் தந்தவணி சேர்த்தி”[26]**

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. மேலும், மணப்பெண்ணை, அவள் தந்தை நீர்வார்த்து மணமகனுக்கு அளிக்கும் திருமணச் சடங்கு முறையை,

**“மங்கையைம ணக்குழுவின் முன்னைவரை வேந்தன்**

**கொங்குவிரி தாரவற்கு நீரொடுகொ டுத்தான்”[27]**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. திருமணத்தின் போது மணமகன் மணமகளுக்குத் தாலிகட்டும் வழக்கம் குறித்த தெளிவான குறிப்பு ஐஞ்சிறு காப்பியங்களில் இல்லை. மணமகளுக்கு அருந்ததியைக் காட்டும் வழக்கம் சமூகத்தில் வழக்கில் இருந்துள்ளது. மணப்பெண்ணிற்கு அருந்ததி காட்டும் வழக்கத்திற்கான காரணத்தை, “வசிட்ட முனிவரின் மனைவி அருந்ததி கற்பில் சிறந்தவள். இவள் கணவனைச் சந்தேகித்தாள். அதனால் கோபம் கொண்ட முனிவர் அவளை ஆகாயத்து விண்மீனாக்கும்படி சபித்தார். சாபமும் கூட அவளை இழிவு படுத்தாது உயர்வுபடுத்தியதற்கு அவளது கற்புச் சிறப்பே காரணம். அன்று முதல் எல்லோரும் பார்க்கவும் புகழவும்

செய்யும் நட்சத்திரமாய் ஒளிவீசுகிறாள். இப்படி ஒரு புராணக் கதையையும் புனைந்துள்ளனர். இந்தக் கதைகள் திருமண நாளில் மணப்பெண்ணுக்கு நினைவூட்டப்படுகின்றன.''[28] என சரோஜினி குறிப்பிட்டுள்ளார். திருமணத்தின் போது மணமகளுக்கு அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டும் வழக்கத்தை சுயம்பிரபையின் வாயிலாகக் காப்பிய ஆசிரியர் இகழ்வதை,

**"வானநெறி யெங்கும்வளர் சோதிவட மீனைக்**
**கானமயி லன்னவடன் முன்னைநனி காட்ட**
**யானுமிவள் போலுலகு காணவியல் வேனோ**
**ஈனமொடு நாணமில னோவெனவி கழ்ந்தாள்"[29]**

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. 'அருந்ததி வானில் பலரும் காணும் வகையில் நாணமின்றித் திரிவதால் அவளைச் சுயம்பிரபை இகழ்ந்து, தான் அவ் அருந்ததியைப் போன்று பிறர்காண உலகில் திரிந்திறேன்' என்று தன்னிலையை இப்பாடல் வாயிலாக எடுத்துரைத்துள்ளாள். தோலாமொழித் தேவரின் சமயச் சார்பினைச் சுயம்பிரபையின் செயல் புலப்படுத்துகிறது எனலாம். திருமணத்தின் போது அருந்ததியை மணமகளுக்குக் காட்டுதல் என்பது ஆரியச் சடங்கென்றும், அருந்ததி கணவனை ஐயுற்றமையால் அவள் கற்புக்கரசியாகாள் என்பதை, ''அருந்ததி காட்டல் என்பதும் ஆரியத் தொடர்பு கருதியதே. தமிழ்மரபுப்படி அருந்ததி தலையாய கற்பரசி அல்லள். அவள் தன் கணவனாகிய வசிட்டமுனிவன் ஒழுக்கத்தைப்பற்றி ஐயுற்று, அவனால் விண்மீனாகச் சபிக்கப்பட்டாள் என்று கதை கூறுகிறது'' என ஞா.தேவநேயன் குறிப்பிடுகிறார்.

### 3.6.1.சுயம்வரம்

'சுயம்வரம்' வாயிலாக மகளிர் தாம் விரும்பிய கணவரைத் தேர்வு செய்தமை குறித்துச் சங்கப் பாடல்களில் சான்று இல்லை. தொல்காப்பியர்,

**“மறையோர் தேஎத்து மன்றல் எட்டு”**[30]

என எண்வகை மணங்களைக் குறித்துக் குறிப்பிடுகிறார். ‘‘மன்றல் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன’’[31] என எண்வகை மணங்களை விரித்துரைக்கும் நச்சினார்க்கினியர் குறிப்பிடும் எண்வகை மணங்களுள் ‘சுயம்வரம்’ எனும் திருமண முறை குறிப்பிடப்படவில்லை. எனவே சுயம்வரம் வாயிலாகத் திருமணம் செய்வது வடநாட்டார் மரபென்பதை அறியமுடிகிறது. ‘‘ஐஞ்சிறு காப்பியங்களில் சுயம்வரம் வாயிலாகத் தம் வாழ்க்கைத் துணைவரைத் தேர்வு செய்த மகளிர் குறித்த குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. ‘சுயம்வரம்’ எனும் முறையில் திருமணம் செய்த மகளிர் பற்றிய குறிப்புகள் ஐஞ்சிறுகாப்பியத்தில் அதிக அளவில் உள்ளன. சூளாமணியில் ‘சுயம்வரச் சருக்கம்’ என்ற பெயரில் ஒரு சருக்கம் அமைந்துள்ளது. சூளாமணிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள திவிட்டன்-சுயம்பிரபையின் மகளான சோதிமாலை, சுயம்வரத்தின் வாயிலாக அமிதசேனனைத் தனக்குரிய மணமகனைத் தேர்வு செய்கிறாள். சுயம்வரம்குறித்த செய்திகளும், திருமண நிகழ்வுகள் குறித்த செய்திகளும் சுயம்வரச் சருக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. சுயம்வரத்திற்கு வருகை தந்த பல்வேறு மன்னர்கள் குறித்துச் சோதிமாலையின் தோழியர் அவளுக்கு எடுத்துரைக்கின்றனர். இறுதியில் மாமன் மகனான அமிதசேனனைச் சோதிமாலை தன் மணவாளனாகத் தேர்வு செய்கிறாள். இதனை,

**“கொண்டதோர் குமரன் போல்வான் குங்குமக் குவவுத் தோண்மேல்**
**ஒண்டொடி மாலை வீழ்த்தாள்”**[32]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

அருக்ககீர்த்தியின் மகளான சுதாரை விசயனைத் சுயம்வரத்தின் வாயிலாகத் திருமணம் செய்தமை குறித்தும் சூளாமணி வாயிலாக

அறியமுடிகிறது. இவ்விருவரும் சுயம்வரம் வாயிலாகத் திருமணம் செய்து கொண்டமையை,

**"மாதரான் சுதாரை வாட்கண் மலரொடு மணிவண்டார்க்கும்**

**போதுலாம் பிணையல் பொன்வரை யகலஞ் சூழ"**[33]

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. தாம் விரும்பிய கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையையும் அரசகுல மகளிர் பெற்றிருந்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

**3.7.மணக்கொடை**

திருமணத்தின் போது மணமகளுக்கு அளிக்கும் சீதனங்கள் குறித்து உதயணகுமார காவியம் விளக்கியுள்ளது. அரசகுடும்பத்தில் இவ்வாறு மணக்கொடை அளிப்பது வழக்கத்தில் இருந்துள்ளது. பதுமாவதியை மணந்த உதயணனுக்கு அவள் அண்ணன் தருசகன், தன் அரண்மனையிலிருந்த ஐந்தாயிரம் யானைகளையும், இரண்டாயிரம் குதிரைகளையும், ஆயிரத்து இருநூறு தேர்களையும் அறுபத்து எண்ணாயிரம் படைவீர்களையும் எண்ணூற்று எண்பது மகளிரையும் மணக்கொடையாக அளிக்கிறான். மேலும் படைத்தலைவர்களையும் கொடையாகத் தருகிறான். இதனை,

**"புதுமணக் கோலமிவர் புனைந்தன ரியற்றிப்பின்**

**பதியுடையை யாயிரம் பருமதக் களிற்றுடன்**

**துதிமிகு புரவிகள் தொக்கவிரண் டாயிரம்**

**அதிர்மணி யாற்றுந்தே ராயிரத் திருநூறே"**[34]

**அறுபதினெண் ணாயிர மானபடை வீரரும்**

**நறுமலர்நற் கோதையர் நான்கிருநூற் றிருபதும்**

**நறுமலர்நற் கோதையர் நான்கிருநூற் றிருபதும்**

**பெறுகவென் றமைத்துடன் பேர்வருட காரியும்**

**உறுவடிவேற் சத்தியு முயர்தரும தத்தனும்”[35]**

என்னும் பாடல்கள் உணர்த்தும் கருத்துகளிலிருந்து அறியமுடிகிறது. பதுமாவதி விரும்பியவாறு அண்ணன் அளித்த சீதனம் குறித்து,

**“முற்றிழைநல் அரிவைக்கு முகமலரச் சீதனம்**

**பற்றியன்பி னாலளித்துப் பாங்குடன் விடுத்தனன்”[36]**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**3.8. கருவுற்ற மகளிர் நிலை**

கருவுற்றிருக்கும் மகளிர் செயல்கள் குறித்த சில செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. மகளிர் கருப்பையுள் குழந்தை உருவாகி வளரும் முறை குறித்து நீலகேசி ஆசிரியர்,

**“எப்பொருளு மொன்றொன்றிற் கிடங்கொடுத்த விரும்புண்ணீர்**

**புக்கிடங்கொண் டடங்குதலே போலவும் தந்தைதாய்**

**சுக்கிலமுஞ் சோணிதமுந் தழீஇச்சுதையு ணெய்யனைத்தா**

**யொத்துடம்பி னகத்தடங்கி யுடன்பெருகு மெனவுரைத்தாள்”[37]**

என்ற பாடல்வழி எடுத்துரைத்துள்ளார்.

உதயணகுமார காவியத்தில் அரசி மிருகாபதி தாய்மை அடைந்த நிலையை நூலாசிரியர் குறிப்பிடும் போது ‘கெர்ப்பமாதல்’ என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். அவளின் கருப்பொறைத் துன்பத்தையும் பிள்ளைப் பேற்றையும்,

**“நிறைமதி முகநன் மங்கை நிரம்பிய கெர்ப்ப மாதல்**

**பொறைவயி னோய்மீக் கூரப் பொருவில்வான் கோள்க ளெல்லாம்**

**முறையினல் வழியை நோக்க மொய்ம்பனத் தினத்திற் றோன்ற**

**அறையலை கடலிற் சங்க மாணிமுத் தீன்ற தொத்தாள்”[38]**

என்ற பாடலில் காப்பிய ஆசிரியர் விளக்கியுள்ளார்.

கருவுற்றிருக்கும் மகளிர் மண்ணை விரும்பி உண்கின்ற செயல் நாககுமார காவியத்தில் இடம்பெற்றுள்ளது. இதனை,

**“புண்டவழ் வேற்கண் கோதை பூரண மயற்கைச் சின்னம்**

**மண்ணினி துண்ண வெண்ணு மைந்தன்பூ வலயமாளும்”**[39]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. ஒன்பது மாதங்கள் நிறைவுற்ற பின்னரே மகளிர்க்குக் குழந்தை பிறக்கும் என்பதை,

**“திங்க ளொன்பான் நிறைந்து செல்வனற் றினத்திற் றோன்ற”**[40]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

‘கருவுற்ற மகளிர் விரும்பும் ஆசைகளை நிறைவேற்றுதல் வேண்டும்’ என்றவொரு கருத்து தமிழ்ச்சமூகத்தில் நிலவிவருகிறது. அருக்ககீர்த்தியின் மனைவியான சோதிமாலை, கருக்கொண்டிருந்தபோது விமானத்தில் ஏறிக் கற்பகச் சோலையைக் காண்பதற்கு ஆசைப்படுகிறாள். அவள் ஆசை அவ்வாறே நிறைவேற்றப்பட்டமையை,

**“வாணணிவர் மணிதகை விமான மேறவும்**
**கானிவர் கற்பகச் சோலை காணவும்**
**மானிவர் நோக்கினாள் வயாவி னாளது**
**தேனிவ ரலங்கலாய் தீர்க்கப் பட்டதே”**[41]

எனும் பாடலுணர்த்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது.

அரசகுடும்பத்தில் பெண்குழந்தைகளுக்குச் ‘சாதகம்’ எழுதப்படும் வழக்கம் இருந்துள்ளதுதைச் சூளாமணிக் காப்பியத்தின் வாயிலாக அறிந்து கொள்ளமுடிகிறது. பெண்குழந்தையின் எதிர்காலம் குறித்தும் சாதகவோலையில் குறிப்பிடும் வழக்கம் இருந்துள்ளது. இதனை,

**“நானக் கோதை நங்கை பிறந்த நாளானே**
**வானக் கோளின் மாண்புணர் வார்கண் மறுவில்லாத்**
**தானக் கோளிற் சாதக வோலை தலைவைத்தார்”**[42]

என்ற பாடலுணர்த்தும் கருத்துகள் புலப்படுத்துகின்றன. பெண்குழந்தை பிறப்பதனால் நாட்டையாளும் மன்னனுக்கு மேன்மை உண்டாகும் என்ற கருத்தும் சூளாமணியில் இடம்பெற்றுள்ளது.

**"நங்கை தோன்றிய பின்னகை வேலினாற்**

**கங்கண் ஞாலம் மமர்ந்தடி மைத்தொழில்**

**தங்க நீண்முடி யாற்றலை நின்றனர்**

**வெங்கண் யானைவி ளங்கொளி வேந்தரே"**[43]

சுயம்பிரபை பிறப்பினால் சுவலனசடி மன்னனுக்கு மென்மேலும் நன்மைகள் பெருகின என்பதை இப்பாடற்கருத்து உணர்த்துகிறது. இக்கருத்து,

**"பூந்துண ரோதிநீ பிறந்து பொன்செய்தார்**

**வேந்தவந் திறைஞ்சயான் விளங்கு கின்றதே"**[44]

என்ற பாடலிலும் இடம்பெற்றுள்ளது. வயிரக் குன்றின்மேல் ஏற்றிய விளக்குப் போன்று தன் குலம் சிறக்கப் பிறந்த நங்கை எனச் சுயம்பிரபையைப் போற்றுவதை,

**"கொங்குடை வயிரக் குன்றின் கொழுஞ்சுடர் விளக்கிட் டாங்கு**

**நங்குடி விளங்க வந்த நங்கை"**[45]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியலாம்.

### 3.9. தாய்மார் இயல்பு

இல்வாழ்வில் குழந்தையைப்பெற்றெடுத்த தாய்மார் இயல்பினை நீலகேசி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். வெகுளுதற்குரிய செயல்களைச் சிறு குழந்தைகள் செய்தவிடத்தும் தாயானவள் அக்குழந்தையின் அறியாமைக்காக வருந்துவாள். மாறாக அக்குழந்தைக்கு அருள்புரிந்து தன் முலைப்பாலை ஊட்டும் பண்பு குறித்து,

**"காய்வ செயினுங் குழவிக்கட் கவன்று கழிகண் ணோட்டத்தாற்**

**றாய்தன் முலையி லமுதூட்டுந் தகைய"**[46]

என நூலாசிரியர் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

### *3.10. குழந்தைப்பேறு அற்ற மகளிர் நிலை*

இல்வாழ்க்கையின் பயன்களுள் நன்மக்களைப் பெறுதல் முதன்மையானதாகும். குழந்தைப்பேறு வாய்ப்பதற்காக மகளிர் மேற்கொண்ட வழிபாட்டு முறைமைகளைச் சங்ககாலந் தொட்டே அறியமுடிகிறது. மகளிர் பிள்ளைப்பேற்றிற்காக முருகக் கடவுளை வழிபட்டமை குறித்துப் பரிபாடல் குறிப்பிட்டுள்ளது. இதனை,

**"கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்"**[47]

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது. 'தான் மணந்த மனைவிக்குப் பிள்ளைப்பேறு வாய்க்காத நிலையில் அவளை நீக்கிவிட்டு வேறு மணம் புரிவதைவிடுத்துத் துறவறம் மேற்கொள்ளுதல் நன்று' என்ற கருத்து நாலடியாரில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**"மாண்ட குணத்தோடு மக்கட்பே றில்லெனினும்**
**பூண்டான் கழித்தற் கருமையாற் - பூண்ட**
**மிடியென்னும் காரணத்தின் மேன்முறைக் கண்ணே**
**கடியென்றார் கற்றறிந் தார்"**[48]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

குழந்தைப்பேறு வாய்க்காத மகளிர், குழந்தைப்பேறு பெறுவதற்காகப் பிடாரி கோயிலுக்கு மறியைப் பலிகொடுக்கும் வழக்கமும் அற்றைநாட் சமூகத்தில் இருந்துள்ளது. இவ்வாறு பலியிடுவதை சமணசமயம் ஏற்கவில்லை என்ற போதிலும் இவ்வழக்கத்தை காப்பிய ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

**"பண்டிந்நின்ற பணைத்தோளி பாலற்பெ றாமையைக்**
**கண்டியா மிக் கணமோடி தன்பாற்சொன் னோமாக**
**வுண்டதாயிற் றோர்குழவி யென்னவுவப் பித்தற்குக்**
**கொண்டுவந்தே மறியறுக்க வென்றார் கொலையாளர்"**[49]

இவ்வழக்கத்தைச் சமணமுனிவர் ஒருவர் தடுத்து நிறுத்தும் செயல் நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

இல்வாழ்வில் நன்மக்களைப் பெறுதல் நங்கையர்க்கு அருமை உடைய செயல் என்பதை,

**“வாழுநீர் மக்களைப் பெறுதன் மாதரார்க்**

**காழிநீர் வையகத் தரிய தாவதே”**[50]

எனச் சூளாமணி ஆசிரியர் குறிப்பிட்டு, குழந்தைப்பேறு இல்லாத மகளிர் மரத்திற்கு நிகராவர் என்பதையும்

**“மக்களை யிலாதவர் மரத்தொ டொப்ப”**[51]

என்ற பாடலடியில் எடுத்துரைத்துள்ளார்.

### 3.11. மாமியார் மருமகள் உறவு

மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையே இருந்த நல்லுறவினைச் சூளாமணி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். திவிட்டனின் தாயான சசிதேவி, தனக்கு மருமகளாக வரவுள்ள சுயம்பிரபையின் அழகுத்திறத்தை அறிந்து வருமாறு தன் தோழியாகிய மாதவசேனையைச் சுயம்பிரபை வீற்றிருக்கும் அரண்மனைக்கண் மங்கலப் பொருள்களுடன் அனுப்புகிறாள். அவ்வாறு சென்ற மாதவசேனை, சுயம்பிரபையின் உருவத்தை ஓவியமாகத் தீட்டிய பின்னர், அவளிடம், ‘‘நும் மாமியாரிடம் யான் உரைக்க வேண்டுவது யாது?” என வினவுகிறாள். சுயம்பிரபையின் உளக்குறிப்பினை உணர்ந்த தோழியான அமிர்தபிரபை மாதவசேனையை நோக்கி,

**“அங்கவள் குறிப்பு நோக்கி யமுதமா பிரபை யென்னு**
**மங்கலத் தோழி கூறும் மாமியா ரடிக டம்மை**
**எங்கண் மெய்ச் செய்கை யாக விணையடி பணிமி னென்றாள்**
**செங்கனி கனிந்த செவ்வாய்ச் சிறுநுதற் பெரிய கண்ணாள்”**[52]

எனக் குறிப்பிடுகிறாள். மாமியார் அடிகளை வணங்கிட விரும்பும் சுயம்பிரம்பையின் பண்பினை இப்பாடற்கருத்து புலப்படுத்தியுள்ளது.

சுயம்பிரபையின் உருவத்தை மாதவசேனை வரைந்த ஓவியத்தின் வாயிலாகக் கண்ட சசிதேவியின் மகிழ்ச்சி,

**"மின்றவழ் மேனி யாளை மென்பணைத் தோளிற் புல்லி**

**இன்றினி தாகு மன்றே யிருந்தவப் பயங்க ணம்பால்**

**ஒன்றின விளைத்த வென்றாங் கொளியினாற் புதிய னாளாள்"**[53]

எனக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது. மருமகளின் அழகுநலன் குறித்து மகிழும் மாமியார், திருமணத்திற்கு முன்பு மருமகளை நேரில் சென்று பார்ப்பதற்குரிய மரபு அரசகுல மகளிர்க்கு இல்லை என்பதையும் இதன்வழி அறியமுடிகிறது.

மாமியார் போற்றும் நற்பண்புகள் மிக்கவளாகச் சுயம்பிரபையின் பாத்திரம் சூளாமணிக் காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளது. சசிதேவி, தன் மகனான திவிட்டனிடம், சுயம்பிரபையை, **'பெறுதற்கரிய அருங்கலம்'** எனக் குறிப்பிட்டுப் போற்றுகிறாள். இதனை,

**"அருங்கல முலகின் மிக்க வரசர்க்கே யுரிய வன்றிப்**

**பெருங்கல முடைய ரேனும் பிறர்க்கவை பேணலாகா**

**இருங்கலி முழவுத் தோளா யெரிமணிப் பலகை மேலோர்**

**நெருங்கொளி யுருவங் கொண்டு நின்னையா வினைந்து வந்தேன்"**[54]

என்ற பாடல் புலப்படுத்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது.

முரண்பாடுகள் கொண்ட மாமியார், மருமகள் நடத்தை குறித்து யசோதர காவியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இக்காப்பியத்தில் கணவனுடன் மாமியையும் உணவில் நஞ்சு வைத்துக் கொன்ற மருமகள் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. இதனை,

**"நஞ்சொடு கலந்த தேனி னறுஞ்சுவை பெரிய வாக**

**எஞ்சலி லட்டு கங்கள் இருவிரு மருந்து கென்று**

**வஞ்சனை வலித்து மாமி தன்னுடன் வரனுக்குக் கீந்தாள்**

**நஞ்சொடு படாத தானு மகனொடு நயந்து கொண்டாள்"**[55]

என்ற பாடற்கருத்து விளக்கி நிற்கிறது. அமிர்தமதி, தன் மாமி சந்திரமதியைக் கொன்ற செயலை இப்பாடல் வழி அறியமுடிகிறது.

### *3.12. முறையற்ற பாலுறவுச் செயல்பாடுகள்*

காம நுகர்வினை முறையாகத் துய்த்து இன்பம் பெறுதல் வேண்டும் என்பது சமணசமயக் கொள்கையாகும். காம மயக்கம் கொண்டு பிறனுடைய இல்லாளை விரும்புதல் தவறென்பதைப் 'பிறனில் விழையாமை' எனும் அதிகாரத்தில் ஆடவர்க்கு வள்ளுவர் உணர்த்தியுள்ளார். சமண முனிவர்களால் இயற்றப்பட்ட நாலடியாரிலும் 'பிறன்மனை நயவாமை' என்ற அதிகாரம் இடம்பெற்றுள்ளது.

ஆடவரின் பரத்தை ஒழுக்கம் குறித்த பதிவுகள் சங்கப்பாடல்களில் உள்ளன. ஆனால் ஆடவனொருவன் பிறன் மனைவியை நயந்து சென்றமை குறித்த பாடல்கள் இல்லை. அவ்வாறே திருமணமான மகளிர் பிற ஆடவருடன் கூடி ஒழுகியமை பற்றிக் குறிப்பிடும் பாடல்களும் இல்லை. சங்கச் சமூகத்தில் இத்தகைய முறையற்ற பாலுறவு குறித்த வழக்கம் இல்லையென்றே குறிப்பிடலாம். ஆனால் பதினெண் கீழ்க்கணக்கு நூலான ஏலாதியில் மகளிரின் முறையற்ற பாலுறவுச் செயல்பாடுகளைப் பாடலொன்றின் வாயிலாக உய்த்தறியமுடிகிறது.

**"மாண்டவர் மாண்ட அறிவினான் மக்களைப்**

**பூண்டவர்ப் போற்றிப் புரக்குங்கால் - பூண்ட**

**ஔரதன் கேத்திரசன் கானீனன் கூடன்**

**கிரிதரன் ஏற்றவன் பேர்"**[56]

ஆண்மகவின் பெயர்கள் குறித்து இப்பாடலுணர்த்தும் கருத்திலிருந்து மகளிரின் முறையற்ற பாலுறவுச் செயல்பாடுகள் குறித்து அறிய முடிகிறது. ஔரதன், கேத்திரசன், கானீனன், கூடன், கிரிதரன் என்பன ஆண்மகவின் பெயர்களாகும். மணம் செய்த கணவனுக்குப் பிறந்தவன் ஔரதன் எனப்படுகிறான். கணவன் உயிருடன் இருக்கையில் மற்றொரு ஆடவன் வாயிலாக ஒரு பெண்ணுக்குப் பிறந்த மகன் 'கோத்திரசன்' எனப்படுகிறான். திருமணம் ஆகாத பெண்ணிற்குப் பிறந்தவன் கானீனன் ஆவான். கணவனுக்குத் தெரியாமல் பிற ஆடவனுக்குப் பிறந்தவன் 'கூடன்' எனப்படுகிறான். கணவன் இறந்தபின்னர் மறுமணம் செய்தபின்னர் பெற்ற மகன் 'பௌநற்பவன்' எனப்படுகிறான். கணவன் இருக்கையில் பிற ஆடவருடன் காம இன்பத்தில் ஈடுபட்ட மகளிர் குறித்த செய்திகளை இப்பாடற்கருத்திலிருந்து அறியமுடிகிறது. சங்கம் மருவிய காலச் சமூக வாழ்வில் மகளிர் சிலரின் பண்புகளை இப்பாடற்கருத்து வெளிப்படுத்தியுள்ளது.

பிறழ் நடத்தை கொண்ட மகளிர் குறித்த சில பதிவுகள் ஐஞ்சிறுகாப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. 'மகளிர் உள்ளம் மாண்புடையது' என்ற கருத்தினைச் சான்றோர் ஒருபோதும் கூறார். ஆடவர் உடம்பில் ஆடையிருப்பினும் இல்லாவிடினும் பெண்களின் மனத்திட்பம் சிதையும் இடத்தில் ஆடவரின் தவ ஒழுக்கமும் பாழாகும் என்ற கருத்து நீலகேசியில்,

**"பெண்பாலார் கடக்ககாற் பேதுறுவ ரெனவுரைப்பாய்**
**திண்பான்மை யவர்க்கழியச் சிதையநின் றவமாயின்**
**மண்பாலா ரவருள்ள மாண்புளதா யுரையாரா**
**வெண்பாலும் படாதாகி யிழுக்குநின் குணமந்தோ"**[57]

என இடம்பெற்றுள்ளது. கற்பொழுக்கத்தில் சிறப்பில்லாத மகளிர் பண்பு இவ்வாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான

வளையாபதியில் ‘இல்வாழ்வில் அழகிய கணவனை மகளிர் பெற்றிருப்பினும் புதுவெள்ளத்தைக் கண்ட மீன்கள் அதனைவிரும்பிப் பாய்வது போல சில மகளிரின் உள்ளமானது புதிய புதிய ஆடவரை விரும்பும்’ என்ற கருத்து,

**“பள்ள முதுநீர்ப் பழகினு மீனினம்**
**வெள்ளம் புதியது காணின் விருப்புறூஉங்**
**கள்ளவிழ் கோதையர் காமனோ டாயினு**
**முள்ளம் பிறிதா யுருகலுங் கொண்ணீ”**[58]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. கற்பு இல்லாத மகளிரின் உள்ளமானது புதிய, புதிய ஆடவரை விரும்பும்’ என்பதை இப்பாடல் புலப்படுத்துகிறது. ‘உண்ணும் உணவுகள் கெடாமல் காப்பதற்கும், செல்வத்தைக் காப்பதற்கும், கல்வியைக் காப்பதற்கும் வழியுண்டு. ஆனால் கற்புத்திறம் இல்லாத மகளிரைக் காத்தற்கு இயலாது’ என்பதை வளையாபதி ஆசிரியர்,

**“உண்டியுட் காப்புண்டு உறுபொருள் காப்புண்டு**
**கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புண்டு**
**பெண்டிரைக் காப்ப திலமென்று ஞாலத்துக்**
**கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே”**[59]

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார். மகளிர் தம் கற்பொழுக்கத்தின் வாயிலாவே தம்மைக் காத்துக் கொள்ள வேண்டும். நிறைகாக்கும் காப்பே தலையானதென்பதை வள்ளுவர்,

**“சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை”**[60]

எனக் குறிப்பிடும் கருத்தும் இவ்விடத்திற் ஒப்பு நோக்கத்தக்கது.

கற்பிலா மகளிரின் பன்மைக் குணங்கள் பற்றிய கருத்துகள் சீவகசிந்தாமணியிலும் இடம்பெற்றுள்ளன. மகளிர் பகற்பொழுது முழுவதும் காம இன்பத்தை அடைந்த போதிலும், அவர் கண்ணும் மனமும் பிற ஆடவர்பால் செல்லும் என்பதை,

**"அன்புநூ லாக இன்சொ லலர்தொடுத் தமைந்த காத**
**லின்பஞ் செய்காமச் சாந்திற் கைபுனைந் தேற்ற மாலை**
**நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினு நங்கை மார்க்குப்**
**பின்செலு:ம் பிறர்க ணுள்ளம் பிணையனார்க் கடிய தன்றே"**[61]

என்ற பாடலில் குறிப்பிடும் திருத்தக்க தேவர், மனவுறுதியின்மையும், குடிப்பிறப்பின் பெருமையை நோக்காமல் தீய ஒழுக்கத்தில் ஈடுபடுதலும், கற்பில் குறைந்து ஒழுகுதலும், பொருளை விரும்புதலும் இயல்பிலே பெண்மைக்குரிய குணங்களாகும் என்பதை,

**"பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா**
**உண்ணிறை யுடைய வல்ல வொராயிர மனத்த வாகும்**
**எண்ணிப்பத் தங்கை யிட்ட ாலிந்திரன் மகளு மாங்கே**
**வெண்ணெய்க்குள் றெரியுற் றாற்போன் மெலிந்துபின்னிற்கு மன்றே"**[62]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

பிறழ்நடத்தை கொண்ட பெண்ணொருத்தி பற்றி யசோதர காவியம் குறிப்பிட்டுள்ளது. யசோதரகாவியத்தில் கணவன் இருக்கும் நிலையில் பிற ஆடவனுடன் காமவின்பத்தில் ஈடுபட்டவளாக 'அமிர்தமதி' என்பவள் படைக்கப்பட்டுள்ளாள். பட்டத்தரசியான அவள், மகன் ஒருவனைப் பெற்ற பின்னரும் காம இன்பத்தைத் துறத்தலில்லாது 'அட்டபங்கன்' என்ற குட்டரோகியுடன் கள்ளக் காதலில் ஈடுபட்டுக் காமவின்பம் துய்கிறாள். தோழியான குணவதி, அட்டபங்கன் ஒரு யானைப்பாகன் என்பதையும், அவன் அவன் தொழுநோய் உடையவன் என்று எடுத்துரைத்தும் அவள்

கூற்றை மேற்கொள்ளாது, கணவன் யசோதரன் உறங்கிய பின்னர், அவனை நீங்கி அட்டபங்கனுடன் கூடுகிறாள்.

**"ஆடவ ரன்றி மேலா ரவருத் தணங்க னாருங்**
**கூடலர் துறந்தார் நோன்மைக் குணம்புரிந் துயர்தற் காகப்**
**பீடுடை யயனார் தந்த பெருமக ளிவளென் றெண்ணித்**
**தோடலர் குழலி தோழி துணிந்தனள் பெயர்த்துச் சென்றாள்'**[63]

மகளிர் தாம் விரும்பும் ஆண்மக்களை அன்றி, மணந்து கொண்ட கணவன் மிக்க மேலானவனாயினும் அவனை வெறுப்பர்' என்ற கருத்து இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. "எத்துணை மேலோராயினும் தம் மனம் செல்லாவழி மகளிர் அருவருப்பரென்பது உலகறிந்த செயல்"[64] என இப்பாடலுக்குரிய விளக்கத்தில் உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு முறையற்ற பாலுறவில் ஈடுபடும் மகளிர் வெப்பம் மிகுந்த **'தூமப்பிரபை'** என்ற நரகத்தில் வீழ்ந்து வருந்துவர் என்பது சமண சமயக் கருத்தாகும். முறையற்ற பாலுறவில் ஈடுபட்ட அமிர்தமதி, குட்டநோய் கொண்டமையை,

"**குட்ட மாகிய மேனிக் குலமிலா**
**அட்ட பங்கனோ டாடி யமர்ந்தபின்**
**நட்ட மாகிய நல்லெழின் மேனியள்**
**குட்ட நோயிற் குளித்திடு கின்றநாள்"**[65]

என்ற பாடற்கருத்து வாயிலாகவும், தூமப்பிரபை நரகத்தில் அமிர்தமதி அடைந்த நரக வேதனையை,

**"கருகருக ரிந்தனள் கவின்கொளொரு பாவை**
**பெருகெரியி னிட்டுருக விதுபெரிது மிதென்**
**றருகணைய நுந்துதலு மலறியது தழுவிப்**
**பொருபொருபொ ரிந்துபொடி யாமுல மெல்லாம்"**[66]

என்ற பாடற் கருத்தின் வாயிலாகவும் அறியமுடிகிறது. 'நரகத் தீயால் கருகிய உடல் கொண்ட அமிர்தமதியைத் தீயிலிட்டு மிகுந்த வெப்பம் ஏற்படுத்திய ஆண் பாவையைத் தழுவ வைத்தனர். இதனால் அவள் உடம்பு பொடிந்து வீழ்ந்தது.' என்பது மேற்சுட்டிய பாடலின் பொருளாகும். மானுட வாழ்வில் தீய ஒழுக்கம் புரிந்த அமிர்தமதியைச் செக்கில் வைத்து ஆட்டித் துன்புறுத்தியும் அவளை உயிருடன் கொதிக்கும் உலைப்பானையில் வைத்தும் துன்புறுத்தினர். மேலும் கழுமரத்தில் அவளுடலை ஏற்றி அழித்தனரென்பதை,

**"திலப்பொறியி லிட்டனர் திரிப்பவு நெருப்பின்**
**உலைப்பெரு கழற்றலை யுருக்கவு முருத்துக்**
**கொலைக்கழுவி லிட்டனர் குலைப்பவு முழக்கும்**
**உலைப்பருவ ருத்தம துரைப்பரிது கண்டாய்"**[67]

என்ற பாடல் வாயிலாக யசோதரகாவிய ஆசிரியர் விளக்குகிறார். தீயொழுக்கம் கொண்ட மகளிரை நல்வழிப்படுத்த 'தூமப் பிரபை' நரகின் கொடுமைகளை யசோதரகாவிய ஆசிரியர் அமிர்தமதி அடைந்த அவலங்கள் வாயிலாக விரித்துரைத்துள்ளார். "கவிஞர்கள் காப்பியத் தலைவர்களை, உயர்ந்தவராக, கற்புடையவராகப் படைப்பதையே கவி மரபாகக் கொண்டனர். இக்காப்பியத்தில், கவிஞர் காப்பியத் தலைவி அமிர்தமதியை மிக, மிகத் தீயவளாகப் படைத்துள்ளார். சமண சமயத்தவராகிய ஆசிரியர், பெண்மையின் புன்மையை – தீமையை – மற்றையோர்க்கு அறிவுறுத்த இக்காப்பியத்தை உருவாக்கியுள்ளார்"[68]

### 3.13. அரசியர் பண்பு

பண்டைத் தமிழகத்தில் அரசன் பல்வேறு மனைவியரை மணக்கும் வழக்கம் இருந்தபோதிலும் அவர்தம் உரிமை மகளிர் தமக்குள் பிணக்கின்றி வாழ்ந்தமையை,

**“ஆயிர ரவரவர்க் கதிகந் தேவியர்”[69]**

**“மங்கைய ரிருவ ராகி மன்னவ னொருவ னாகி”[70]**

என்ற பாடலடி உணர்த்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது. பயாபதி மன்னனின் மனைவியர் குறித்த பண்புகளை மேற்சுட்டிய பாடலடி வாயிலாகவும், சுவலனசடியின் உரிமை மகளிர் குறித்து,

**“அம்பொற் பட்ட நறுங்குழ லார்க்கெலாம்**

**செம்பாற் பட்டஞ் செறிந்த திருநுதல்**

**அம்பொற் பட்டுடை யாளணி யாயினாள்”[71]**

என்ற பாடற்கருத்து வாயிலாகவும் அறியமுடிகிறது. நாட்டின் அரசன் பல்வேறு மனைவியரை உடையவனாக இருந்தபோதிலும் அவன் உரிமை மனைவியர் இதன் பொருட்டு தாம் கொண்ட ஊடலை வெளிப்படுத்தினர். மாறாக மன்னனை வெறுக்கும் பண்பு அவர்களிடத்து இல்லை. இக்கருத்திற்குச் சான்றுகளாக,

**“நட்புடைக் கற்பு மாதர் நால்வரு மன்ன னுள்ளத்**

**துட்புடை யிருப்ப நாளு மொருகுறை வின்றித் துய்த்து”[72]**

என்ற உதயணகுமாரக் காப்பியப் பாடலடிகளையும்,

**“மன்னவ னாவி யாவார் மகளிரம் மகளிர் தங்கள்**

**இன்னுயி ராகி நின்றா னிறைமக ளிவர்க டங்கட்**

**கென்னைகொ லொருவர் தம்மே லொருவர்தம் முள்ள மோட**

**முன்னவன் புணரந்த வாறம் மொய்ம்மலர்க் கணையி னானே”[73]**

எனும் சூளாமணிப் பாடலடிகளையும் குறிப்பிடலாம்.

### 3.14. செல்வக் குடும்ப மகளிர்

மாளிகையில் மை தீட்டப்பெற்ற கண்களை உடைய பெண்கள் தம் களிப்பு நிறைந்த பார்வையரால் தம் கணவர்களுடைய தோள்களைத் தழுவி மகிழ்வுடன் வீற்றிருப்பதை,

**"மானளா மதர்வை நோக்கின் மையரி மழைக்க னார்தம்**

**தேனளா முருவக் கண்ணிச் செல்வர்தோடி ளைக்குமாடங்**

**கானளாங் காம வல்லி கற்பகங் கலந்த நண்ணார்**

**வானளாய் மலர்ந்து தோன்று மணிவரை யனைய தொன்றே"[74]**

எனச் சூளாமணி குறிப்பிடுகிறது.

### 3.15. மகளிரும் வழிபாட்டு முறைகளும்

மகளிர் வழிபாட்டு முறைமைகள் பற்றிய பல்வேறு செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. அருகக் கடவுளுக்கு மகளிர் செய்யும் வழிபாட்டு முறைமைகள் குறித்த செய்திகளை,

**"திண்ணிலைய மணிக்கதவந் தாழ்திறந்து**

**திருவிளக்குத் திகழ மாட்டி**

**விண்ணியல நறும்புகையும் காழகிலும்**

**விசும்பிவர்ந்து விம்ம மூட்டிக்**

**கண்ணியுடன் வெறிமலரு நறும்பொடியுங்**

**கமழ்சாந்துங் கையி னேந்திப்**

**பண்ணியல நரம்பிசை மேற் பரமனையே**

**பணிமொழியாள் பரவா நின்றாள்"[75]**

எனும் பாடற்கருத்து புலப்படுத்துகிறது. இப்பாடல் உணர்த்தும் கருத்திலிருந்து கோயிற்கதவுகளை மகளிர் தாமே திறந்து, திருவிளக்கேற்றி, நறும்புகை காட்டி, மாலை அணிவித்துச் செய்த வழிபாடு குறித்தறியமுடிகிறது. மேலும், அருகக் கடவுளின் புகழினை, வரிப் பாடல்களைப் பாடி வழிபடும் வழக்கத்தையும் மகளிர் மேற்கொண்டிருந்தமையை,

**"அரும்பிவரு மரவிந்த மறிவரன**

**தடிநிழல் தடைந்தோ மென்று**

**சுரும்பிவரி யிசைபாடச் செம்மாந்து**

**சுடருமிழ்நது துளும்பும் போலுஞ்**

**சுரும்பிவரி யிசைபாடச் செம்மாந்து**

**சுடருமிழ்ந்து துளும்பு மாயின்**

**விரும்பினராய்த் தொழுதெழுவார் மெய்ம்மறப்பு**

**முண்மகிழ்வும் வியப்போ வன்றே”[76]**

என்ற பாடற்கருத்து விளக்கியுள்ளது.

அருகக் கடவுள் ஆலயத்தின் முன் வந்து தம் குறையைக் கூறி அரற்றும் மகளிர் குறித்து நாககுமார காவியம் குறிப்பிட்டுள்ளது.

**“ஒருநிரையாய் மங்கைய ரோசைசெய்யக் கேட்டபின்**

**திருவலங்கன் மார்பினான் சேரவழைத் தவர்களை**

**யருகனாலை யத்துமுன் னலறுநீங்கள் யாரெனத்**

**தரணிகந் தரியவ ளவற்கிதென்று கூறுவாள்”[77]**

முருகக் கடவுளைக் குறிஞ்சி நில மக்கள் வேலன் வெறியாட்டு நிகழ்த்தி வழிபட்டமையை,

**“முன்றி லெங்கு முருகயர் பாணியும்”[78]**

என்ற பாடலடி வாயிலாகவும், மருதநில மக்கள் குரவைக் கூத்தாடி நிகழ்த்திய வழிபாடு குறித்து,

**“அணங்க னாரண வாடல் முழவமும்”[79].**

எனும் பாடலடி வாயிலாக அறிய இயலும். சமணத் தெய்வங்களை மட்டுமின்றி பிற தெய்வங்களை வணங்கிய மகளிர் பற்றிய குறிப்புகளும் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.

### 3.15. மகளிர் விளையாடல்கள்

இளம் மகளிரின் பந்தாட்டம் குறித்த நிகழ்வுகள் உதயணகுமார காவியத்தில் அழகுற இடம்பெற்றுள்ளன. பதுமையின் தோழியர்களான

'இராசனை', அயிராபதி, ஆரியை ஆகியோரும் வாசவதத்தையின் தோழியாகிய காஞ்சனமாலை, விச்சுவலேகை, மானனீகை ஆகியோரும் பந்தாடிய அழகினை நூலாசிரியர் வருணித்துள்ளபாங்கு காப்பியத்தில் சிறப்பாக அமைந்துள்ளது. இராசனை என்பவள் ஏழுபந்துகளை ஒருங்கே கைக்கொண்டு ஆடியமையை,

**"ஓரெழு பந்து கொண்டே யொன்றொன்றி னெற்றிச் செல்லப்**
**பாரெழு துகளு மாடப் பலகல னொலிப்ப வாடிச்**
**சீரெழு மாயிரங்கை சிறந்தவ ளடித்து விட்டாள்"**[80]

என்ற பாடல்வாயிலாக அறியமுடிகிறது. அம்மானை, வள்ளை முதலான பாடல்களைப் பாடி மகளிர் ஆடியமை குறித்து,

**"அம்பொன் மலைசிலம்ப வம்மனை வள்ளையுடன்**
**கம்பஞ்செய் யானைக் கரியவனைப் பாடினார்"**[81]

எனும் பாடல் கருத்தின் வழி அறியமுடிகிறது. மகளிர் ஊசலாட்டம் குறித்து,

**"கோதையுங் குழைவின் பட்டின் கொய்சகத் தலையுந் தாழ**
**மாதர்வண் டொருங்குபேர மழையிடை நுடங்கு மின்போல்**
**போதலர் பொதுப்பிற் றாழ்ந்த பொன்னெழி லூச றன்மேல்**
**ஓதநீர் வண்ணற் பாடி நூழிலூ ழியங்கு வாரும்"**[82]

மகளிரின் பல்வகை ஆடல்கள் சுயம்வரச் சருக்கத்தில் இடம்பெற்றுள்ளன.

சுயம்பிரபையின் மகள் சோதிமாலை தன் தோழியருடன் பந்தாடி மகிழ்ந்தமையை,

**"கொத்தாடும் பூங்குழலுங் கோதைகளு மாடக்**
**கொய்பொலந் துகிலசைத்த கொய்சகந்தாழ்ந் தாட**
**வந்தாடுந் தேனுமுரல் வரிவண்டு மாட**
**மணிவடமும் பொன்ஞாணும் வார்முலைமே லாடப்**

**பந்தாடு மாடேதன் படைநெடங்க ணாடப்**

**பணைமென்றோ ணின்றாடப் பந்தாடு கின்றாள்”[83]**

என்ற பாடல் வழி அறியமுடிகிறது

### 3.16. மகளிர் ஒப்பனையும் அணிகலன்களும்

மகளிர் ஒப்பனைகள், அணிகலன்கள் குறித்த சில குறிப்புகள் ஐஞ்சிறுகாப்பியங்களில் உள்ளன. பெண்ணுடலின் உண்மை நிலை குறித்து மணிமேகலையில் சீத்த்லைச் சாத்தனார்,

**“பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்**

**தூசினும் மணியினுந் தொல்லோர் வகுத்த**

**வஞ்சகம் தெரியாய் மன்னவன் மகனென”[84]**

எனக் குறிப்பிடுகிறார். ‘மலராலும் சாந்தாலும் புலால் நாறும் தம் உடலின் நாற்றத்தை மாற்றி, ஆடை அணிகலன்களால் அழகுறத் திகழ்பவர்’ என்ற கருத்தை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

பெண்ணுடம்பின் இயல்புகள் குறித்த செய்திகளை ஐஞ்சிறு காப்பியங்களின் வாயிலாகவும் அறியமுடிகிறது. மகளிரின் பிறப்பு உறுப்பு ‘யோனி’ என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இவ் யோனியானது,

**“வெப்பமுந் தட்பமு மிக்கு விரவிய யோனி”[85]**

என்று நீலகேசி ஆசிரியர் குறிப்பிடுகிறார். பெண் யோனியானது வெப்பமும் குளிர்ச்சியும் உடைய தன்மையை உடையதென்ற கருத்தை இதன்வழி அறியமுடிகிறது.

பெண்ணுடம்பானது இயல்பில் இழிதன்மை உடையதாகும். எவ்வளவுதான் நீராடினாலும், மலர் முதலியனவற்றை அணிந்தாலும், பெண்ணுடம்பானது மலம் முதலியன ஒழுகும் தன்மை உடையது. பெண்ணுடலானது குருதி, எலும்பு முதலிய பல்வேறு பண்டங்களால் மூடப்பட்ட தோலினை உடையதாகும் என்பதை,

**“ஆடினாய் நான மணிந்தாய் கலன்மாலை**

**சூடினா யேனுஞ் சுணங்கார் வனமுலையா**

**யூடினா யாக வொழுக் கூற்றைப் பல்பண்டம்**

**மூடினாய் தோலின் முகமனுரை யேனே”**[86]

என்ற பாடலில் முனிச்சந்திர முனிவர் கூற்றில் வைத்து நீலகேசி ஆசிரியர் விளக்கியுள்ளார்.

பெண்களின் உடம்பானது நாயின் உடம்பை போன்று இழிதன்மை மிக்கதாகும். இத்தகைய உடம்பின் தன்மையை மகளிர் மலர்களாலும் அணிகலன்களாலும் அழகுடையதாக மாற்றுகின்றனர் என்பதை,

**“மட்டார் மலர்புனைவும் வாணெடுங்கண் மையணிவும்**

**பட்டார் கலையுடையும் பல்வளையும் பைந்தோடு**

**நட்டாரை யெல்லா நரகுக்கே யுய்க்கு நாய்க்**

**கொட்டார்த்தார் செய்யும் கோலங்கள் வண்ணம்”**[87]

எனும் பாடல்வழி நீலகேசி ஆசிரியர் உணர்த்துகிறார்.

இல்வாழ் மகளிர் குறிப்பிட்ட காலம் வரை தம்முடலுக்கு ஒப்பனை செய்து கொள்வதையும், அணிகலன்களை அணிந்து கொள்வதையும் சமணசமயம் ஏற்கிறது.

இல்வாழ் மகளிரின் மகளிர் தம்முடலுக்குப் பல்வேறு அணிகலன்களாலும் நறுமணப் பொருட்களாலும் தம்மை அழகுபடுத்திக் கொண்டனர். அரசகுல மகளிர் அணிந்த பல்வேறு அணிகலன்கள் குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.

இல்லகத்திலுள்ள மங்கையர் தம் கொங்கைகளில் கத்தூரியையும் குங்குமத்தையும் சேர்த்துச் செய்த குழம்பினைப் பூசும் வழக்கத்தை உடையவர்களாகத் திகழ்தமையை,

**“அகத்து மங்கையர்**

**நாவியுங் குழம்புமுண் ணகில நற்றவம்**

**மேவிநின் றவரையு மெலிய விம்முமே”[88]**

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. கொங்கைகளில் குங்குமக் குழம்பையும் உடலில் சுண்ணப் பொடிகளையும் மகளிர் பூசுதல் குறித்து,

**“கொங்கைவாய்க் குங்குமக் குழம்புங் கோதைவாய்**

**மங்கைமார் சிதர்த்தன வாசச் சுண்ணமும்**

**செங்கண்மா லகலத்து விரையுந் தேர்த்தரோ**

**அங்கண்மா லிரும்புன லளறு பட்டதே”[89]**

எனும் பாடலடிகள் வாயிலாகவும் அறியமுடிகிறது.

மகளிர் கால்களில் செம்பஞ்சுக் குழம்பினை பூசுகின்ற வழக்கத்தினை உடையவர்களாகத் திகழ்ந்தமையை

**‘‘அலத்தகக் குழம்புதோய்ந் தரச வீதிகள்**

**புலத்திடைத் தாமரை பூத்த போலுமே”[90]**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

கால்களில் செம்பஞ்சுக் குழம்பு பூசும் வழக்கத்தினை இல்வாழ் மகளிர், அரசகுல மகளிர் ஆகிய இரு திறத்தாரும் கொண்டிருந்தனர். பயாபதி மன்னனின் பட்டத்தரசியர் தம் கால்களில் செம்பஞ்சுக் குழம்பு பூசியவர்களாக விளங்கியமையை,

**“பஞ்சனுங் கடியினார் பரந்த வல்குலார்”[91]**

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. கூந்தலில் மகளிர் பல்வேறு பூக்களைச் சூடிக்கொண்டமையை,

**“விலத்தகைப் பூந்துணர் விரிந்த கோதையர்”[92]**

**“மவ்வலங் குழலி”[93]**

**“மதுமலர்க் குழலி”[94]**

எனும் பாடலடிகள் வாயிலாக அறியலாம். மகளிர் தம் கண்களில் மைதீட்டும் வழக்கம் குறித்து,

**"மைதுழாம் நெடுங்கணார்**[95]

எனக் குறிப்பிடுவதிலிருந்தும் மகளிர் தமது ஈரக் கூந்தலுக்கு அகிற்புகை காட்டும் வழக்கம்,

"**ஆவியா லீரங்குழ லாவி யூட்டினார்"**[96]

எனக் குறிப்பிடுவதன் வாயிலாக அறியமுடிகிறது. இல்வாழ் மகளிர் கால்களில் ஒலிக்கும் சிலம்புகளை அணிகின்ற பண்பினை,

"**காவிவாய்க் கருங்கணார் காமர் பூஞ்சினலம்**

**பாவிவாய் மாளிகை யதிரக் கேட்டொறும்"**[97]

என்ற பாடலடிகள் வாயிலாகவும்,

**"மங்கையர்**

**ஆடுவார் சிலம்பிணை யதிரு மோசையும்"**[98]

**"வீங்கிள முலையவர் மெல்லென் சீறடி**

**ஓங்கிருஞ் சிலம்பினாற் சிலம்புமூர்களே"**[99]

எனும் பாடலடிகள் வாயிலாகவும் அறிந்துகொள்ள முடிகிறது. பயாபதி மன்னனின் தேவியரான மிருகாபதியும் சசியும் மகர மீன் வடிவில் செய்த குழைகளைத் தம் காதுகளில் அணிந்திருந்தமையை,

**"மற்றவன் றேவியர் மகர வார்குழை"**[100]

எனும் பாடலடி வாயிலாகவும், தோள்களில் வரிவளையல்களை அணிந்திருந்தமையை,

**"வரிவளைத் தோளியர் மனத்துட் காமநோய்**

**எரிவளைத் திடுவதோ ரிளமை யெய்தினார்"** ***பா.19:3-4.***

எனும் பாடலடிகள் வாயிலாகவும் அறிந்திட முடிகிறது. மகளிர் அணியும் பல்வேறு அணிகலன்கள் பற்றிய செய்திகள் நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. பெண்கள் தம்மிரு காதுகளில் வேறு வேறு அணிகலன்களை அணிகின்ற வழக்கத்தை நீலகேசி வாயிலாக அறியமுடிகிறது.

**"தோடுகொண் டொருசெவி விளங்கத் துளங்குவ மகரமொன்றாடப்**

**பாடுவண் டோடுசுரும் பரற்றப் பலகலம் வயிரவில் வீச"**[101]

காமலேகை வடிவலிருந்த நீலகேசி, தன் ஒரு செவியில் தோடும், மற்றொரு செவியில் மகரக் குண்டலமும் அணிந்திருந்தமையை இப்பாடலடிகள் வழி அறியமுடிகிறது.

மகளிர் தம்கைகளில் வளையல் அணிந்திருந்தமையை நீலகேசியை விளித்துக் கூறுவதிலிருந்து அறியமுடிகிறது.

**"பொற்றொடியாய்"**[102]

**"பைந்தொடி"**[103]

காதுகளில் பொன்னாலான தோடுகளையும் கைகளில் சங்கு வளையல்களும் அணிகின்ற வழக்கத்தை உடையவராக மகளிர் திழ்ந்தமையை,

**"காதின கனகப்பைந் தோடுங் கைவெள்வளைகளுங் கழல"**[104]

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. மகளிர் தம் உடம்பில் பல்வேறு பொன் அணிகள் அணிந்தமை குறித்து,

**"பொன்னனாள் புடைபெயர்த் திட்ட பொலங்கல மனங்கலக் குவபோல்"**[105]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

### 3.17. மகளிர் பணிகள்

ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த மகளிர் குறித்தும் அவர்தம் தொழில்கள் குறித்தும் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

குறிஞ்சிநிலத்தில் வாழ்ந்த மகளிர் கொடிச்சியர் என்றும், முல்லை நில மகளிர் இடைச்சியர் என்ற பெயரிலும், மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் கடைச்சியர் என்ற பெயரிலும் அழைக்கப்பட்டனர். இதனை,

**"கொடிச்சியர் புனத்தயல் குறிஞ்சி நெய்பகர்**

**இடைச்சியர் கதுப்பயற் கமழு மேழையம்**

**கடைச்சியர் களையெறி குவளை கானல்வாய்த்**

**தொடுத்தனர் பிணையலார் குழலுட் டோன்றுமே"**[106]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது. முல்லைநில மகளிர், நெய்யினை விலைகூறி விற்ற செயலை இதன்வழி அறியமுடிகிறது.

அரண்மனையில் காவல் புரிதல், தூதுவர்க்குப் பணிவிடை செய்தல், ஆகிய வினைகளைச் செய்தமகளிர் பற்றிய குறிப்புகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.

### 3.17.1. அரண்மனைக் காவல்

அரண்மனையில் மணம்பொருந்திய கூந்தலை உடைய மகளிர் தம் கைகளில் மூங்கில் கோல்களை ஏந்திக் காவல் புரிந்தமையை,

**"விரையமர் கோதையர் வேணுக் கோலினர்"**[107]

எனும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது. "இவர்கள் மகளிர் என்பது தோன்ற விரையமர் கோதையர் என்றார்."[108] மன்னன் அரண்மனை வரும் போது மகளிர் வாழ்த்தும் மரபு குறித்தும், அரண்மனையில் வீற்றிருக்கும் மன்னனுக்கு மகளிர் கவரி வீசுதல் குறித்தும்,

**"பொன்னவிர் திருவடி போற்றி போற்றிஎன்**

**றன்னமென் னடையவர் பரவ வாய்துகிற்**

**கன்னியர் கவிகா லெறியக் காவலன்**

**முன்னிய நெடுங்கடை முற்ற முன்னினான்"**[109]

என்றபாடல் வழி அறியமுடிகிறது.

அரண்மனையில் மட்டுமின்றி, மன்னன் மலர்வனம் செல்கின்றவிடத்தும் மகளிர் மங்கல வாழ்த்துப் பாடல்களைப்பாடி அவனைப் போற்றுவது மரபாக இருந்துள்ளது. இதனை,

**“வாமான்றேர் மன்னற்கு மங்கலஞ்சொன் மகளிரைப்போற்**

**றூமாண்ட விளங்கொடிதந் தளிர்க்கையாற் றொழுதனவே”**[110]

**“வாரணி முலையவர் பரவ”**[111]

**“கரும்புசூழ் கிளவியர் சொரிந்து கைதொழ”**[112]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. அவ்வாறே இளவரசியையும் மகளிர் வாழ்த்திப் பரவும் மரபுகுறித்து,

**“மானுயர் நோக்கியர் பரவ மங்கைதன்**

**கோனுயர் வளர்நகர்க் கோயின் முன்னினாள்”**[113]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

பூம்பொழிலில் உரிமை மகளிரோடு பொழில் விளையாடும் மன்னனுக்கு வேல்படை ஏந்திய பெண்மறவர்கள் பாதுகாவலாக விளங்கிய செய்தி சூளாமணிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

**“வாமமே கலையவர் மனதில் வார்பொழில்**

**காவே ளிடங்கொள வருளிக் கண்ணொளிர்**

**தாமவே லிளையவர் காப்பத் தாழ்கதிர்**

**நாமவே னரபதி நகர நண்ணினான்”**[114]

இப்பாடலில் இடம்பெற்றுள்ள ‘கண்ணொளிர் தாமவேல் இளையவர் காப்ப’ எனும் தொடருக்கு, “தாமவேல் இளையர் என்பதற்கு இளைஞர்களாகிய வீரர்கள் என்று உரை கூறுவாரும் உளர். வாமேகலையவர் மனத்தில் காமவேள் இடங்கொள விளையாடல் புரிந்த இடமாகலின் பெண்மறவர்களாகக் கொள்ளுதலே தக்கது”[115] என்று சூளாமணியின் உரையாசிரியர்களான பொ.வே.சோமசுந்தரனாரும், சு.அ.இராமசாமிப்

புலவரும் குறிப்பிடுகின்றனர். பொழில் விளையாடி நகர் திரும்பும் மன்னனுக்கு வேல்பயிற்சியில் சிறந்த மகளரிர் காவல் புரிந்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

### 3.17.2. தூதுவனுக்கு மகளிர் பணிவிடை

அரச நிமித்தமாகத் தூது வந்த தூதவர்களின் பயணத்துன்பத்தைப் போக்குதற்கு மகளிரை அனுப்புதல் அக்காலத்தில் வழக்கில் இருந்துள்ளது. சுயம்பிரபையின் மணவினைக்காகப் போதனமா நகருக்குச் சுவலனசடியால் அனுப்பப்பட்ட தூதுவனான மரீசி என்பவனுக்கு மகளிர் செய்த பணிவிடைகள் குறித்து,

**"என்றவன் மொழிந்தபி னிருந்தன விருப்பச்**
**சென்றவன் வழிச் சிரமை தீர்மினென் நால்வர்**
**பொன்றழ் பொருந்திழை யணங்கினனை யாரை**
**மின்றவழ் விளங்குகொடி வேந்தனும் விடுத்தான்"**[116]

என்றபாடல் உணர்த்தும் கருத்தின்வழி அறியமுடிகிறது. பயாபதி மன்னன் மரீசியின் துன்பத்தைப் போக்குதற்கு நான்கு மகளிரை அனுப்பியமை குறித்து இப்பாடல் உணர்த்தும் கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இம்மகளிர்க்கு உதவியாக மகளிர் பலரும் சென்று மரீசிக்கு வேண்டுவனவற்றைச் செய்கின்றனர். அம்மகளிர் தூதுவனைக் குளிக்கவைத்து உடலில் சந்தனம்பூசி, மலர்களை அணிவித்து, உணவு ஊட்டிப் போற்றியமை குறித்து,

**"ஆட்டி னார்வெறி கமழ்வன வணிகிளர் நறுநீர்**
**தீட்டி னார்நறுஞ் சாந்தமஞ் சிறிதுமெய் கமழச்**
**சூட்டி னார்சிலர் நறுமல றறுசுவை யடிசில்**
**ஊட்டி னாரவ னமரருனொருனொத் தொளித்தான்"**[117]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

### *3.17.3.* ஓவியம் தீட்டல்

மகளிர் ஓவியம் தீட்டும் கலையில் வல்லவர்களாக விளங்கியமை குறித்துச் சூளாமணிக் காப்பியம் குறிப்பிட்டுள்ளது.

**"வட்டிகைப் பலகை தன்மேற் மணிவண்ணன் வடிவு தீட்டி**
**ஒட்டிய வடிவிற் றம்மை யூடலோ டிருப்பக் கீறித்**
**திட்டமிட் டுருவ நுண்ணூற் றுகிலிடை தெளிர்ப்ப வாங்கிப்**
**பட்டமும் குழையுந் தோடும் பையவே கனிவிப் பாரும்"**[118]

என்ற பாடல் வாயிலாகவும் அறியமுடிகிறது.

### *3.18.* கணவன் இறப்பும் மகளிர் நிலையும்

கணவன் இறப்பின் காரணமாக தம்முயிரை மாய்த்துக் கொண்ட மகளிர் குறித்த செய்திகள் தொல்காப்பியக் காஞ்சித் திணையில் இடம்பெற்றுள்ளன.

**"நீத்த கணவற் றீத்த வேலிற்**
**பேஎத்த மனைவி யாஞ்சி யானும்"**[119]

**"முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்**
**தலையொடு முடிந்த நிலை"**[120]

**"நல்லோள் கணவனொடு நளியழற் புகீஇச்**
**சொல்லிடை யிட்ட பாலைநிலை"**[121]

**"கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்**
**செல்வோர் செப்பிய மூதானந்தமும்"**[122]

இக்காஞ்சித் திணைத் துறைகள் உணர்த்தும் கருத்துகளிலிருந்து, போர்க்களத்தில் கணவன் இறப்பிற்குக் காரணமாய் அமைந்த வேல்கொண்டு தன்னுயிரையும் போக்கிக் கொண்ட மகளிர், கணவனின் தலையொடு தலைமோதித் தன்னுயிரை மாய்த்துக் கொள்ளும் மகளிர், கணவன் உடலோடு தீப்பாய்ந்து இறக்கும் மகளிர், கணவன் இறந்த

செய்தியைக் கேள்வியுற்ற அளவில் உயிர்துறக்கும் மகளிர் ஆகியோர் குறித்து அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களிலும் கணவன் இறப்பின் காரணமாக உயிர்துறந்த மகளிர் பற்றிய பாடல்கள் உள்ளன. மன்னன் இறப்பின்போது தம்முயிர் துறந்த மனைவியர் குறித்தும் போர்க்களத்தில் இறந்த போர்வீரர்களின் மனைவியர் உயிர்துறந்தமையைப் பற்றியும் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. பூதப்பாண்டியன் என்ற மன்னன் இறந்தபோது அவன் மனைவி பெருங்கோப்பெண்டு உயிர்துறந்தமையை,

**"சிறுநனி தமிய ளாயினும்**

**இன்னுயிர் நடுங்குந்த னிளமை புறங்கொடுத்தே"**[123]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. போர்வீரர்களின் மனைவியரும் கணவன் இறப்பின் பொருட்டு உயிர்விடுத்தமை குறித்து,

**"பெண்டிரும்**

**பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்**

**மார்பகம் பொருந்தி ஆங்கமைந் தனரே"**[124]

என்ற புறநானூற்றுப் பாடல் வாயிலாக அறியமுடிகிறது. சீவக சிந்தாமணியில் கணவன் இறப்பிற்குப் பிந்தைய மகளிர் நிலை,

**"சாமெனிற் சாதல் நோதல்**

**தன்னவன் தணந்த காலைப்**

**பூமெனும் புனைத லின்றிப்**

**பொற்புடன் புலம்ப வைகிக்**

**காமனை என்றுஞ் சொல்லார்**

**கணவற்கை தொழுது வாழ்வார்**

**தேமலர்த் திருவோடொப்பார்**

**சேர்ந்தவன் செல்லல் தீர்ப்பார்"**[125]

என்ற பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கணவன் இறப்பின் பொருட்டு மகளிர் உயிர்துறப்பதை புத்தசமயம் ஏற்றுப் போற்றுகிறது. ஆனால் சமணம் இவ்வாறு உயிர்துறத்தல் தவறென்று குறிப்பிடுகிறது. இதனை நீலகேசியின் கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது.

**"ஆவ திண்மை யறித்து மவத்தமே**
**சாவ தேயுங்கள் சத்துவர் சால்பெனிற்**
**காவல் பூண்ட கணவனோ டீமத்தின்**
**வேம வட்கும் விழுக்குண மாங்கொலோ"**[126]

குண்டலகேசியிடம் நீலகேசிக்கும் சமயக் கொள்கைகள் குறித்து நடைபெற்ற சொற்போரில் இக்கருத்து இடம்பெற்றுள்ளது.

சமூக நிகழ்வுகளும் பண்பாட்டு மரபுகளும் காப்பியங்களில் பதிவு செய்யப்படுகின்றன எனும் கருத்தை மா. செண்பகம், "காப்பியம் என்பது ஒரு தனிமனிதனின் படைப்பாகாது. தொடர்ந்து வரும் சமுதாய வளர்ச்சி, நாட்டில் உலவி வரும் பல்வேறு புராணக் கதைகள், நாடோடிக் கதைகள், கதைப்பாடல்கள், இவையெல்லாம் இணைந்த ஒரு தொகுப்பாகவே காப்பியம் விளங்குகிறது என்பது ஓரளவு பொருந்தும். ஒரு சிறந்த காப்பியம் என்பது ஒரு நீண்டகாலப் பண்பாட்டின் வளர்ச்சி விளைவாகும்" [127] எனக் குறிப்பிட்டுள்ளார். சூளாமணியில் அச்சுவக்கண்டனின் மனைவியர் அவன் இறப்பின் பொருட்டு உயிர்துறந்த செய்தியைக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். சமணசமயக் கோட்பாடுகளை ஏற்ற மன்னர்களின் மனைவியர் இவ்வாறு உயிர்துறக்கவில்லை. எதிர்நிலைத் தலைவன் என்ற நிலையில் சூளாமணியில் படைக்கப்பட்ட பாத்திரம் அச்சுவகண்டன். திவிட்டனால் அச்சுவகண்டன் போர்க்களத்தில் கொல்லப்படுகிறான். இதனை அறிந்த அவன் மனைவியர் அனைவரும் பட்டத்தரசி தலைமையில்

போர்க்களம் சென்று தம் உயிரை மாய்த்துக் கொள்கின்றனர். அச்சுவகண்டனின் மனைவியர் போர்களம் வந்தமையை,

**"அன்ன மனையா ரயகண்டன் தேவிமார்**

**பொன்னவிர் பூங்குழையார் பொங்கேந் திளமுலையார்**

**மனின்னவிர் நுண்ணிடையார் மேல்வந் தணுகினார்"**[128]

எனக் குறிப்பிட்டு, அச்சுவகண்டனின் இறந்த உடலைக் கண்ட கோப்பெருந்தேவி உயிர் துறந்தமையை,

**"வண்டார் மணிமுடியான் மார்பு துணிகிடப்பக்**

**கண்டாள் பெருந்தேவி கண்டேதன் கைசோர்ந்து**

**வெண்டாரை வேனெடுங்க ணீர்மூழ்கி மேற்பிறழ**

**விண்டா ளுயிர்பின்னும் வெற்றுடல மாயின்"**[129]

என்ற பாடற்கருத்து வாயிலாக அறியமுடிகிறது. அச்சுவகண்டனின் ஏனைய மகளிரும் போர்க்களத்தில் உயிர் விடுத்தமையை,

**"கோதை சரியக் கொடிமருங்கு லேரழிய**

**மாதர் மடமஞ்ஞை மாநிலத்து வீழ்வனபோல்**

**காதலன் மார்பகலங் கண்டேதங் கண்புடைத்துப்**

**பேதை மடமகளிர் வீழ்ந்தார் பிணையன்னார்"**[130]

என்ற பாடல் விளக்குகிறது.

### *3.19. தொகுப்புரை*

இல்வாழ்க்கை மகளிர்க்குரிய வாழ்வியல் நெறிகள் தொல்காப்பியர் காலம் முதலே தமிழகத்தில் வழங்கி வந்துள்ளன. இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்கின்ற மகளிர்க்கு வேண்டிய நற்குணங்கள், மகளிர்க்கு ஆகாத குணங்கள் ஆகியனவற்றைத் தமிழ் நீதி நூல் ஆசிரியர்களும் எடுத்துரைத்துள்ளனர். சமணசமய ஆசிரியர்கள் மகளிர்க்கு வலியுறுத்திய ஒழுக்கங்களுள் சமயம் சார்ந்த கருத்துகளும் உள்ளன.

கணவனும் மனைவியுமாகக் கூடி இல்லறம் துய்த்தலைச் சமணசமயம் ஏற்கிறது. இல்வாழ்க்கை மேற்கொண்டு வாழும் ஆடவரும் மகளிரும் 'சாவகர்' எனப்பட்டனர். இல்வாழ்வில் நன்மக்களைப் பெற்று உயர்வடைதலைச் சிறந்த வாழ்வியல் நெறியாக ஆடவர்க்கும் மகளிர்க்கும் சமணசமயம் வலியுறுத்தியள்ளதை நீலகேசிக் காப்பியம் குறிப்பிட்டுள்ளது. இல்லற மகளிரைப் பத்தினிப் பெண்டிர் என நீலகேசி ஆசிரியர் போற்றியுள்ளார்.

இல்லறமகளிர் உண்ணத்தக்க உணவுகள் குறித்தும், அவர்கள் துறவோர்க்கு சோறு அளிப்பதைக் கடமையாகக் கொள்ளவேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

ஆடவர் புரியும் நல்வினைக்கேற்பவே அவர்க்கு தாய், மனைவி ஆகியோர் அமைவர் என்ற கருத்தினை யசோதரகாவியம் குறிப்பிட்டுள்ளது.

மகளிர் திருமண முறைகள் குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. பெற்றோர் விரும்பியவாறும், தாமே சுயம்வரம் வாயிலாகவும் மகளிர் தமக்குரிய மணமகனைத் தேர்வு செய்தனர். அரசகுடும்பத்தைச் சார்ந்த மகளிர் திருமணங்கள் குறித்த நிகழ்வுகளே ஐஞ்சிறு காப்பியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. வேள்வி முறையில் நிகழ்ந்த திருமணச் சடங்குகள் குறித்தும் இக்காப்பியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. அரசகுல மகளிர்,

திருமணத்தில் பல்வேறு சீதனங்களை அளிக்கும் மரபு பண்டைக் காலத்தில் இருந்துள்ளது.

இல்வாழ்வில் கருவுற்ற மகளிர் நிலை, செயல் ஆகியவற்றை ஐஞ்சிறு காப்பியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. கருவுற்ற மகளிர் ஆசையை நிறைவேற்றும் வழக்கத்தையும் பெண்குழந்தைக்குச் சாதகக் குறிப்பெழுதும் வழக்கத்தையும் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

இல்லற வாழ்வில் தாய்மார் பண்புகள், குழந்தைப்பேறற்ற மகளிர் நிலை, மாமியார்-மருமகளின் அன்பு நிறைந்த இல்வாழ்க்கை முறை ஆகியன குறித்தும் ஐஞ்சிறு காப்பியங்கள் குறிப்பிட்டுள்ளன.

கணவனை விடுத்துப் பிற ஆடவரை விரும்பிப் புணர்தல், கொலைசெய்தல் ஆகிய பிறழ்நடத்தை கொண்ட பெண்ணொருத்தியின் செயல்களை யசோதர காவிய ஆசிரியர் தம் காப்பியத்தில் படைத்துள்ளார். இல்வாழ்வில் இவ்வாறு தீய ஒழுக்கம் மேற்கொண்டு ஒழுகும் மகளிர் அடையும் நரகத் துன்பங்கள் இக்காப்பியத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. பெண்மையின் இழிகுணங்கள் சிலவற்றையும் இக்காப்பியம் எடுத்துரைத்துள்ளது.

அரசன் பல்வேறு பெண்களை மணந்தபோதிலும், அவனுடன் இல்லற வாழ்க்கை மேற்கொண்ட அரசியர் தமக்குள் பிணக்கின்றி வாழ்ந்துள்ளனர்.

இல்வாழ் மகளிரின் அருகக் கடவுள் வழிபாடு குறித்தும், பிற தெய்வ வழிபாட்டு முறைகள் குறித்தும் ஐஞ்சிறுகாப்பியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. மகளிர் விளையாடல்கள், அணிகலன்கள், ஒப்பனை முறைகள் ஆகியன குறித்தும் இக்காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன.

அரண்மனையில் காவல் புரிதல், தூதுவர்க்குப் பணிவிடை செய்தல், ஆகிய பணிகளை மகளிர் ஆற்றியுள்ளனர். ஓவியக் கலையிலும் மகளிர் வல்லவர்களாக விளங்கியுள்ளனர்.

கணவன் இறந்தபின்னர் தம்முயிரை மாய்த்துக் கொள்ளும் மகளிர் பண்பாட்டினைச் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

*1. தொல். பொருள். நூ.150.*

*2. நாலடியார். பா.383.*

*3. மேலது, பா.361:3-4.*

*4. திரிகடுகம், பா.64.*

*5. நீலகேசி, பா.40-1-2.*

*6. நாலடியார், 363*

*7. சிறுபஞ்சமூலம், பா.24*

*8. சிலப்பதிகாரம், பதிகம், அ.56.*

*9. மேலது, 16:71-73.*

*10. நீலகேசி, பா.250.*

*11. மேலது, பா.279:1*

*12. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.196.*

*13. வளையாபதி, பா.63.*

*14. மேலது, பா.59.*

*15. நீலகேசி. பா.17.*

*16. மேலது, பா.281:1-2.*

*17. குறள், 51.*

*18. யசோதர காவியம், பா.160.*

*19. சூளாமணி. பா.148:4.*

*20. மேலது, பா.230.*

*21. மேலது, பா.231.*

*22. மேலது, பா.348.*

*23. நாககுமாரகாவியம், பா.89:3-4.*

*24. மேலது, பா.90:-1-2.*

25. மேலது, பா.139:1-2.

26. சூளாமணி, பா.1093.

27. மேலது, பா.1099.

28. சரோஜினி, கற்பு அன்று முதல் இன்று வரை, ப.29.

29. சூளாமணி, பா.1106.

30. தொல். பொருள். நூ. 92.

31. நச்சினார்க்கினியர், (உ.ஆ), தொல். பொருள். ப.337.

32. சூளாமணி, பா.1825:3-4.

33. மேலது, பா. 1835.

34. உதயணகுமார காவியம், பா.174.

35. மேலது, பா.175:2-3.

36. மேலது, பா. 176:3-4.

37. நீலகேசி, பா.310.

38. உதயண குமாரகாவியம், பா.15.

39. மேலது, பா.48:1-2.

40. மேலது, பா.49:1.

41. சூளாமணி, பா.1731.

42. மேலது, பா.310.

43. மேலது, பா.159.

44. மேலது, பா.221:3-4.

45. மேலது, பா.255:1-2.

46. நீலகேசி பா.134:1-2.

47. பரிபாடல். 8:106.

48. நாலடியார், பா.56.

49. நீலகேசி, பா.36.

50. சூளாமணி, பா.415:3-4.
51. சூளாமணி, பா.418:1.
52. மேலது, பா.1004.
53. மேலது,பா.1012:2-4.
54. மேலது, பா.1015.
55. மேலது, பா. 152.
56. ஏலாதி, பா.30.
57. நீலகேசி, பா.276.
58. வளையாபதி, பா.8.
59. மேலது, பா. 9.
60. குறள். 57.
61. சீவகசிந்தாமணி, பா.1596.
62. மேலது, பா.1597.
63. யசோதர காவியம், பா.110.
64. ஔவை சு.துரைசாமி பிள்ளை, (உ.ஆ), யசோதர காவியம், ப.13.
65. யசோதர காவியம், பா.215.
66. மேலது, பா.291.
67. மேலது, பா.294.
68. சரளா இராசகோபாலன், காப்பிய மகளிர், ப.79.
69. சூளாமணி, பா.62:1
70. மேலது. பா.68:1.
71. மேலது, பா.147.
72. உதயணகுமார காவியம், பா.241.
73. சூளாமணி, பா.66.
74. மேலது, பா. 40.

75. நீலகேசி, பா.1036.

76. சூளாமணி, பா.1038

77. நாககுமார காவியம், பா.136.

78. சூளாமணி, பா.12:1

79. மேலது, பா.15:1

80. உதயணகுமார காவியம், பா.223:1-3.

81. சூளாமணி, பா.1659.

82. மேலது, பா.1639.

83. மேலது, பா.1754.

84. மணிமேகலை, 20:67-69.

85. நீலகேசி, பா.81:1.

86. மேலது, பா.131.

87. மேலது, பா.130

88. சூளாமணி, பா.11:2-4.

89. மேலது, பா.1683.

90. மேலது, பா,473:4.

91. மேலது, பா.60:1.

92. மேலது, பா.47:1.

93. மேலது, பா.226:4.

94. உதயணகுமார காவியம், பா.190:1.

95. சூளாமணி, பா. 74:3.

96. மேலது, பா.1688:4.

97. மேலது, பா.46:1-2.

98. மேலது, பா.13:1-2.

99. மேலது, பா.9:3-4.

100. மேலது, பா.56:1.

101. மேலது, பா.67:1-2.

102. மேலது, பா.76:2.

103. மேலது, பா.84:4, பா.601:1.

104. மேலது, பா.73:1.

105. நீலகேசி, பா.65:2.

106. சூளாமணி, பா.33.

107. மேலது, பா.90.

108.பொ.வே.சோமசுந்தரனார், சு.ஆ.இராமசாமிப் புலவர்,(உ.ஆ), சூளாமணி, முதற்பாகம், ப.75.

109. சூளாமணி, பா.91.

110. மேலது, பா.169:3-4.

111. மேலது, பா.373:1.

112. மேலது, பா.377:2.

113. மேலது, பா.218:3-4.

114. மேலது, பா. 207.

115. பொ.வே.சோமசுந்தரனார், இராமசாமிப் புலவர், (உ.ஆ), மு.நூ. ப.207

116. சூளாமணி, பா. 448.

117. மேலது, பா.471.

118. மேலது, பா.1937.

119. தொல். பொருள். நூ.79:12-13.

120. மேலது, நூ.79:16-17.

121. மேலது, நூ.79:30-31.

122. மேலது. நூ.79:22-23.

123. புறநானூறு, பா.247:9-10.

124. மேலது, பா.62:14-15.

125. சீவக சிந்தாமணி, பா.1598.

126. நீலகேசி, பா.218.

127. மா.செண்பகம், தமிழ்க் காப்பியங்கள், ப.140.

128. சூளாமணி, பா.1469:3-4.

129. மேலது. பா.1470.

130. மேலது, பா.1471.

# இயல் - 4

# மகளிரும் துறவு வாழ்வும்

## 4.0. முன்னுரை

இல்லற வாழ்க்கையை இனிதே மேற்கொண்டு வாழ்ந்த மகளிர், நோன்பியற்றி இவ்வுலக வாழ்வைத் துறந்து முக்தி அடைந்திட சமணசமயம் வலியுறுத்துகிறது. மனித உடலின் நிலையின்மை குறித்த செய்திகள் சமணக் காப்பியங்களில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. சமணசமயம், முற்பிறவிக் கோட்பாட்டிலும் வருபிறவிக் கோட்பாட்டிலும் நம்பிக்கை உடைய சமயமாகும். முற்பிறவியில் செய்த செயல்களுக்கு ஏற்பவே, நிகழ்காலப் பிறவியில் மனித வாழ்வியல் ஒவ்வோர் மனிதனுக்கும் அமைந்திடும் என்பதில் சமணச் சான்றோர் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தனர். நிகழ்காலப் பிறவியில் வாழ்கின்ற முறை, கடைப்பிடிக்க வேண்டிய சமயம் சார்ந்த கொள்கைகள், விரதங்கள், நோன்பு முறைகள் ஆகியனவற்றைச் சமணசமயம் தெளிவுறவிளக்கியுள்ளது. இச் செய்திகள் பலவற்றை ஐம்பெருங் காப்பியங்களுள் இடம்பெற்ற சமணக் காப்பியங்கள் உணர்த்துகின்றன. ஐஞ்சிறு காப்பியங்களிலும் இவை இடம்பெற்றுள்ளன. ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள் வாயிலாக சமணசமயம் சார்ந்த பல்வேறு செய்திகளைத் தெரிந்துகொள்ள முடிகிறது. மனித வாழ்க்கையில் வீடுபேறு அடைவதற்குரிய வழிமுறைகள், பெண்பிறவி குறித்த சமணசமயக் கொள்கைகள், துறவறம் பூண்டு அறங்களைப் போதித்த மகளிர், இல்வாழ்க்கையைத் துறந்த மகளிர், அவர்கள் இயற்றிய நோன்புகள், வீடுபேறு அடைந்த நிலை ஆகியன குறித்து ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள செய்திகளைத் தொகுத்து ஆய்கிறது இவ்வியல்.

### 4.1.மனித வாழ்வும் வீடுபேறும்

உடம்பின் நிலையாமையைக் குறித்து சமணக் கோட்பாடு தெளிவானதாகும். நிலையற்ற உடம்பு ஒழிந்தாலன்றி மனிதர்க்கு வீடுபேறு இல்லை என்பது சமணம் வலியுறுத்தும் கருத்தாகும். சமணசமயத் தமிழ்நீதி நூல்களும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றன.

**“உடம்பு ஒழிய வேண்டின் உயர்தவம்”**[1]

எனச் சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகிறது. சிலப்பதிகாரத்தின் இறுதியில் இளங்கோவடிகள்,

**“இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா**
**உளநாள் வரையாது ஒல்வ தொழியாது**
**செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்**
**மல்லல்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கன்”**[2]

எனக் குறிப்பிடுகிறார். ‘இறந்த பின்னர்ச் செல்லும் மறுமை உலகிற்கு உற்ற துணையாகிய அறத்தினைத் தேடுமின்’ என உலகோரை வேண்டுவதை இப்பாடலடிகள் உணர்த்தும் கருத்துகள் புலப்படுத்துகின்றன.

உலக வாழ்க்கை மேற்கொண்டு வாழ்கின்ற சாவகர்கள் உற்ற காலத்தில் நோன்பியற்றி உயிர்துறத்தல் நன்று என்பதைச் சமண சமயத்தின் அனைத்துப் பிரிவுகளும் குறிப்பிட்டுள்ளன. நற்காட்சி உடைய சமணன் ஒருவன், தன் வாழ்வில் எந்தவொன்றின் மீது பற்றுக் கொள்ளாது துறத்தல் வேண்டுமென்பதை, ‘‘எவர் மீதும் நற்காட்சியுள்ளவர் பற்றும் வைப்பதில்லை விரோதமும் கொள்வதில்லை. நான் வினைக்குட்பட்டு இந்த மனிதப் பிறவியில் வந்து பிறந்துள்ளேன். புண்ணியவசத்தால் எனக்கு புறப்பொருட்களாகிய மனைவி மக்கள் கிடைத்துள்ளனர். இவர்கள் எல்லோரும் ஒருநாள் என்னை விட்டுப்பிரியக் கூடியவரே. சுற்றத்தார், உற்றார், உறவினர், வீடு. வாசல், நிலம், செல்வம் இவை எல்லாம்

என்னுடைய ஆன்மாவிற்குச் சம்பந்தப் பட்டவை அல்ல. இந்த சரீரமும் எனக்கு ஆயுள்வினை எவ்வளவு நாட்கள் உதயத்திற்கு வந்துள்ளதோ அவ்வளவு நாட்கள் வரை என்னுடன் இருக்கும். பிறகு என்னை விட்டுப் பிரிந்து விடும். ஆதலால் அவர்களுக்குச் சொல்ல வேண்டியதாவது, நீங்கள் எல்லோரும் என்னுடன் சம்பந்தப்பட்டவர் அல்லர். எல்லாப் பொருட்களும் இந்தப் பிறவியில்தான் சம்பந்தப்பட்டவை. ஆதலால் இவை மீது பற்றுக் கொள்வது வீணேயாம்"[3] என ஆசார்ய சுவாமி சம்மந்தபதரர் மனித வாழ்க்கையின் உண்மைத் தன்மை குறித்துக் குறிப்பிடுகின்றார். அருங்கலச்செப்பு, பிறப்பு, நோய், முதுமை, சாவு என்ற நான்கையும் அறுத்தலே அறத்தின் பயனாகும் என்பதை,

**"பிறப்பு பிணி மூப்பு சாக்காடு நான்கும்**
**அறுத்தல் அறத்தின் பயன்"[4]**

என்ற குறட்பாவில் குறிப்பிட்டுள்ளது.

நாலடியாரில் சமண முனிவர் ஒருவர், மானுட வாழ்வின் நிலையற்ற தன்மையை,

**"புன்னினுமே னீர்போனிலையாமை யென்றெண்ணி**
**யின்னினியே செய்க வறவினை – யின்னினியே**
**நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்**
**சென்றா னெனப்படுத லான்"[5]**

எனக் குறிப்பிடுகிறார். 'நின்றான், இருந்தான், கிடந்தான் என்ற நிலையில் இருந்த மனிதன் தன் உறவினர் வருத்தங்கொள்ளும் வகையில் இறந்தான்' என்று கூறத்தக்க தன்மையை உடையது மனித வாழ்க்கையாகும். எனவே, அறச் செயல்களைச் செய்வதற்கு மனிதர்கள் நாட்டம் கொள்ள வேண்டும் என்ற கருத்தினை இப்பாடலில் அறிவுறுத்துகிறார்.

### 4.2. பெண் பிறப்பும் சமணக் சமயக் கொள்கைகளும்

திகம்பர சமணசமயத்தார், பெண்கள் நோன்பியற்றி முக்தி அடைந்த பின்னர் மறுபிறப்பில் ஆண் பிறப்பெய்திய பின்னரே வீடுபேறு அடைய இயலும் என்ற கொள்கையைக் கொண்டிருந்தனர். தொல்காப்பிய எழுத்ததிகார உரையாசிரியரான இளம்பூரணர், மகளிர்க்குச் சமகாலப் பிறவியில் வீடுபேறு இல்லை என்பதை ‘‘னகரம் வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை உணர்த்துதற் சிறப்பான் பின்வைக்கப்பட்டது’’[6] எனத் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார்.

‘பெண்பிறவி துன்பம் உடையது’ என்பதை காமலேகை வடிவிலிருக்கும் நீலகேசி வாயிலாக நூலாசிரியர் உணர்த்துகிறார்.

**“காதின் கனப் பைந்தோடுங்**
**கைவெள் வளைகளுங் கழலத்**
**தாதின வினமலர் பலவுந்**
**தலையென நிலமிசை யதிரப்**
**போதன புணரரி நெடுங்கண்**
**புணல்வரப் பூந்துகிற் புடையா**
**வேதனை பெரிதுடைத் தடிகள்**
**விளிகவிப் பிறப்பென வுரைத்தாள்”**[7]

பெண்பிறவியானது மிகுந்த துன்பம் உடையதாகும். இப்பிறப்பு ஒழிதல் மிக நன்று என்பதை இப்பாடற்கருத்து உணர்த்துகிறது. இருப்பினும் பெண்ணாகப் பிறப்பது பெரும் பாவமாகும் என்பதை நீலகேசி ஒப்புக்கொள்ளவில்லை. மொக்கலனிடம் அவள்,

**“பெரும்பாவ மறத்துய்த்துப் பெறுதும்யாம் வீடென்னோ”**[8]

எனக் குறிப்பிடுவதிலிருந்து இதனை அறியமுடிகிறது. அருகக்கடவுளைப் போற்றித் தன் பிறவித் துன்பத்தை ஒழிக்கவேண்டிய சுயம்பிரபையின் செயலை,

**"மணிமரு டிருமொழி வாமன் சேவடி**
**யணிமரு ளுருவுடை யமிர்தின் சாயலாள்**
**பணிமொழி பலவுடன் பரவி வாழ்த்தினாள்**
**பிணிமொழி பிறவிநோய் பெயர்க வென்றனவே"**[9]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

பெண்பிறவியினைத் திருவள்ளுவர் இழிவானதாகக் கொள்ளவில்லை. இக்கருத்தினைத் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், "அறத்திலும் பொருளிலும், இன்பத்திலும் வாழ்க்கைத் துணையாவாள் பெண்ணே என்பது திருவள்ளுவரது முடிபு. பெண்கள் உயர்வதில்லை என்றும், பெண் பிறவியே இழிபிறவி என்றும் கூறுவாரது வாய்மொழிகளனைத்தும் பொய்மொழி என்று காட்டுகின்றார். புத்தேளுலகையும், செம்பொருளாய் நின்ற சிறப்பு நிலையாகிய நீத்தார் நிலையும், பெண்கள் எளிதில் அடையலாம் எனப் பாடுகின்றார். பெண்பிறப்பின் இத்தகைய பெருமையினையும், உயர்நிலை அடைதற்கேற்ற அதன் தகுதியினையும் எடுத்துக்காட்டிப் பெண்பிறப்பினும் உயர்ந்த பிறப்பும் உண்டோ?"[10] எனக் குறிப்பிடுகிறார்.

## 4.3. துறவு மகளிர்

ஐஞ்சிறு காப்பியத்தில் துறவறம் பூண்டு சமயக் கொள்கைகளைப் பரப்பிய மகளிராக நீலகேசியையும் குண்டலகேசியையும் திகழ்கின்றனர். நீலகேசியைச் சமணசமயக் கொள்கை விளக்கப் பாத்திரமாக நீலகேசிக் காப்பிய ஆசிரியர் படைத்துள்ளார். இந்நூலில் இடம்பெற்றுள்ள குண்டலகேசி வாதச் சருக்கத்தின் வாயிலாக புத்தசமயத்தைச் சேர்ந்த

பெண்துறவியான குண்டலகேசி குறித்து அறிந்துகொள்ள முடிகிறது. பௌத்தசமயக் கொள்கைகளைச் சாடும் நோக்கில் 'குண்டலகேசி' யின் பாத்திரத்தை நீலகேசி ஆசிரியர் படைத்திருப்பினும் இப்பாத்திரத்தின் வாயிலாக புத்தசமயம் சார்ந்த பல்வேறு கொள்கை கோட்பாடுகளையும், புத்தர் சாதகக் கதைகளையும் அறிந்து கொள்ள முடிகிறது. சமணசமயப் பெண்பாற் துறவியரான ஆர்யாங்கனை குறித்த செய்திகளும் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.

### *4.3.1. நீலகேசி*

சமணசமயக் கொள்கைகளை ஏற்றுத் திருமணம் செய்யாமல் துறவறம் பூண்ட பெண்ணாக ஐஞ்சிறுகாப்பியத்தில் நீலகேசிப் பாத்திரம் இடம்பெற்றுள்ளது. ஐம்பெருங் காப்பியங்களில் மணிமேகலை திருமண வாழ்வை மேற்கொள்ளாது துறவு நெறியில் சென்று பல்வேறு சமயத்தாரை வென்றமை போன்று ஐஞ்சிறுகாப்பியத்தில் நீலகேசி, மணம்புரியாது சமண முனிவர் ஒருவரிடம் அறங்கேட்டு, பிற சமயத்தாரை வாதில் வென்றமையை நீலகேசிக் காப்பியத்தின்வழி அறியமுடிகிறது. ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றான குண்டலகேசியில் சமணசமயக் கொள்கைகளுக்கு எதிராகக் கூறப்பட்ட குற்றங்களைக் களைந்து சமண சமயத்தை நிலைநிறுத்துவதற்காக படைக்கப்பட்ட காப்பியமே நீலகேசியாகும்.

சமண சமயம் இல்லறம் மேற்கொள்ளாமல் துறவறம் பூண்டு, இல்லறத்தார்களுக்குச் சமயக் கோட்பாடுகளை எடுத்துக்கூறிய கவுந்தியடிகள் வாழ்வியலைச் சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளது.

**"தோமறு கடிகையுஞ் சுவன்மே லறுவையும்**
**காவுந்தி யையைகைப் பீலியும் கொண்டு**
**மொழிப் பொருட் டெய்வம் வழித்துணை யாகென"**[11]

குற்றமற்ற பிச்சைப் பாத்திரத்தையும், தோளிலிடும் உறியையும் மயில் தோகையையும், பஞ்ச மந்திரத்தையும் கொண்டவராக நடந்து சென்றமையை இப்பாடற் கருத்து எடுத்துரைத்துள்ளது. கோவலன், கண்ணகியர்க்கு பல்வேறு வாழ்வியல் அறங்களை இவர் உணர்த்தியமையைச் சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

நீலகேசிக் காவியத்தில் பேயுருவில் அறிமுகமாகும் நீலகேசி, அச்சமூட்டி முனிவரைத் தெருட்ட இயலாதென்பதை உணர்ந்த நீலகேசி, அழகிய மங்கையரின் எழிலுருவம் முனிவரை மயக்கும் என்ற எண்ணத்தைக் கொண்டவளாகிறாள்.

**"சிந்தித் தாளிது செறியெறிற் றரிவைய துருவாய்ப்**
**பந்தித் தாகிய பழவினை கெடுகெனப் படிற்றால்**
**வந்தித் தியான்கொண்ட வடிவினின் மனநிறை யழித்தா**
**னொந்தித் தீநிகர் நோன்பகை விடுமிவ னெனவே"**[12]

முனிவரின் மனத்திட்பம் கெடுதற்கு மங்கையர் காரணமாக அமைகின்றனர் என்ற கருத்தை இதன்வழி அறியமுடிகிறது. இதனை உணர்ந்த நீலகேசி மன்னனாகிய சமுத்திரசாரனுடையே ஒரே மகளாகிய காமலேகையின் வடிவில் முனிவரைச் சென்று மயக்குகிறாள். அவளுடன் தோழியர் பலரும் உடன் வருகின்றனர்.

**"யாம நீங்கலு மரசன்ற னொருமக ளுரைசால்**
**காம லேகைதன் னுருவொடு திருவெனத் தோன்றி**
**தாமஞ் சாந்துதண் மலரின்ன பலகொண்டு துணைசால்**
**சேமங் காலவ கேவடி பொற்றெனச் சென்றாள்"**[13]

காமலேகை வடிவில் தோழியருடன் நீலகேசி துணங்கைக் கூத்தாடியதை,

**"துணங்கை யாடத்தன் றுகிலிடை மேகலை துளங்க**
**அணங்கு மெய்யவ ளருந்தவ னுழைவர நினைந்தாள்"**[14]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் மகளிரின் அழகிய இளமைத் தோற்றம் கண்டோர் விரும்புதற்குக் காரணமாக அமையும் என்பதை,

**"வேண்டிய வுருவுத னாலும்**
**வேட்கைசெய் யுருவத னாலுங்**
**காண்டகு மடவர லுருவங்**
**காமுறு வதுநனி தாங்கி**
**யீண்டிய மிகுகுணத் திறைவ**
**இயல்பினை யெணையது நினையா**
**நீண்டதோர் கொடியயற் கொடிபோல்**
**இறைதவ வருளென நின்றாள்"**[15]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது. நீலகேசி காமலேகை வடிவில் வஞ்சனைச்செயல் புரிவதை உணர்ந்த முனிச்சந்திர முனிவர், நீலகேசியிடம் இத்தகைய செயல்களை நீ எக்காரணம் பற்றி மேற்கொண்டுள்ளாய்? என வினவுகிறார்.

தீய குணங்கள் கொண்ட நீலகேசி நற்குணமுடையவளாகிச் சமண சமயப் பட்டாரகர் அறவுரையை ஏற்று மனம் திரும்பித் தன் தீய உள்ளத்தை மாற்றுகிறாள். அவள் வடிவமும் மாற்றம் அடைகிறது. இதனை,

**"மெழுகுருகு மண்பாவை மேதையான் காயத்தி**
**யொழுகுருகு செம்பொன்னா லுண்ணிறைந்த தேபோல்**
**புழுகுருக மெய்காட்டிப் பொல்லாத போக்கி**
**யழகுருவு கொண்டா ளறவமிர்த முண்டாள்"**[16]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. நீலகேசியின் மனமாற்றத்தை,

**"ஆய்நில வுண்க ணவளா யடங்காமை செய்யும்**

**பேய்நீலு கேசி பெரியோனறங் கொண்ட பின்னைத்**

**தீநீல வள்ளந் திரிந்து தேறு திருவுறத்தாய்**

**மாஞால மெல்லா மற மாற்றிய மாட்சியாளா"**[17]

என்ற பாடலில் ஆசிரியர் குறிப்பிடுகிறார். ''தீ நீல உள்ளம் திரிந்து' எனும் தொடரை கிருஷ்ணலேஸ்யையோடு கூடிய அஞ்ஞானத்தினீங்கி யென்றவாறு''[18] எனச் சமயதிவாகர வாமன முனிவர் விளக்குகிறார். ஆன்மாவின் குணம் 'லேஸ்யை' எனப்படுகிறது. கிருஷ்ண லேச்யா, நீலலேச்யா, கபோத லேச்யா, பீதலேச்யா, பத்ம லேச்யா, சுக்ல லேச்யா என்பன ஆறுவகையான லேஸ்யைகள் ஆகும். அவற்றுள் கிருஷ்ண லேச்யா, நீலலேச்யா, கபோத லேச்யா ஆகிய மூன்றும் தீக் குணங்களாகும். பீதலேச்யா, பத்ம லேச்யா, சுக்ல லேச்யா ஆகியன நற்குணங்களாகும்.[19] என்பதைக் காமலேகை வாயிலாக ஆசிரியர் உணர்த்துகிறார். கிருஷ்ணலேஸய்யை என்பதற்குக் கறுப்பு நிறமான லேஸ்யை' என்றும் அவர் விளக்கம் அளித்துள்ளார். ''கிருட்டிண லேசியுடையவன் மரத்தையே வெட்டிப் பழங்களை உண்ண நினைப்பான். நீலலேசியை உடையவன், பெரிய கிளையை வெட்டிப் பழங்களை உண்ண நினைப்பான். சுபோதலேசியையுடையவன், சிறிய கிளையை வெட்டிப் பழங்களை உண்ண நினைப்பான். இவை மூன்றும் தீக்குணத்தின் படிநிலைகள். பீதலேசியையுடைவன் நான்கு ஐந்து பழக்கொத்துகளையுடைய கொம்பினைப் பறித்து உண்ண நினைப்பான். பதும லேசியையுடையவன் ஒரே ஒரு பழக்கொத்து மட்டும் எடுத்து உண்ண நினைப்பான். சுக்கல லேசியை உடையவன் கீழே விழுந்திருக்கும் பழங்களை மட்டும் உண்ண நினைப்பான். இவை மூன்றும் நற்குணத்தின் படிநிலைகள்.''[20] என இதனைக் குறித்த விரிவான விளக்கத்தினைச் சரளா இராசகோபாலன் அளித்துள்ளார்.

தான் செய்த தீவினைக்குக் கழுவாய் வேண்டிய நீலகேசியிடம், முனிவர், ‘அருகக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய நன்னெறியை’ யாவர்க்கும் கூறுமாறு அறிவுறுத்தியமையை,

**“செய்த தீமை கெடக்கட னாட்டிற்**

**சினவ ரன்னெறி யேதெருட் டென்றான்”**[21]

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது. நீலகேசி அறிவுத்திறம் மிக்கவளாகப் பலருடன் வாதம் புரிவதைக் காப்பியப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. மகளிர் வாழ்வியல் குறித்து நீலகேசி குறிப்பிடும் சில செய்திகள் மட்டும் இங்கே விளக்கப்படுகின்றன.

காப்பியத்தில் நீலகேசி புரியும் வாதங்களிலிருந்து மகளிர் குறித்த பல்வேறு செய்திகளைக் குறிப்பிடுகிறாள். கைம்மை ஒழுக்கம் மேற்கொண்டு வாழ்ந்துவரும் மகளிரை ஆடவன் ஒருவன் கூடுவது தீவினையாகும் என்பதை நீலகேசி,

**“யொற்றைநின் றாடுணை யூறு படுத்தவட்**

**குற்றமன் றோசென்று கூடுவ தேடா”**[22]

என மொக்கலனிடம் குறிப்பிடுகிறாள். கைம்மை ஒழுக்கம் பூண்டு வாழ்கின்ற மகளிரை ‘ஒற்றை நின்றாள்’ எனக்குறிப்பிடும் நீலகேசி, அத்தகைய மகளிரைக் கூடுதல் தீவினைச் செயல் எனக் குறிப்பிட்டுள்ளார். நீலகேசிக் காப்பியத்தின் உரையாசிரியரான சமயதிவாகர வாமன முனிவர் இவ்வாறு விதவையைப் புணர்வோர்க்குப் ‘பரஸ்திரீதோஷ கமனம்’ என்ற குற்றம் உண்டாகும் என்பதை, “துணைவனைக் கொன்று விதவையை ஸ்வீகரிப்பார்க்கும் பரஸ்தரீ தோஷகமன முண்டாகி, ஸ்வயமேவ விதவையாயினாளை ஸ்வீகரித்தார்க்கும் பரஸ்திரீ மேலுண்டாகிய வேட்கையாலன்றே பாவதம் பண்ணி யவளை ஸ்வீகரித்தது.”[23] என

விளக்கிக் குறிப்பிட்டுள்ளார். பெண் குழந்தை வளரும் முறை குறித்து நீலகேசி குறிப்பிடும் போது,

**“முலையும் மகவும் முறுவல் அளவையும் -**
**தலையுண் மயிரும் முகிரும் முடனே**
**நிலையில் லமையு மிலவா மெனினே**
**யலையுந் நினகோ ளுடனே யெனலும்”**[24]

என்ற பாடல்வழி விளக்குகிறது. பிறப்பின் போது பெண் குழந்தைக்கு முலையும், பற்களும், நீண்ட தலைமயிரும், நகங்களும், இருப்பதில்லை. காலப்போக்கில் இவ்வுறுப்புகள் மகளிர் உடலில் வளர்ச்சியுறும் எனும் கருத்து இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. ‘பிறந்தபோது ஒரு முழம் இருக்கும் பெண் குழந்தை, பின்னர் வளர்ந்து உயருதலும் அப்பெண்குழந்தையின் வயிற்றில் மற்றோர் பெண்குழந்தை பிறப்பது உலக இயல்பு என்பதையும் நீலகேசி,

**‘‘குழவிக்**
**களவே முழமா வவைதாம் பலவால்”**[25]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. அழகற்ற மகளிரின் இயல்பு குறித்து நீலகேசி எடுத்துரைக்கிறாள். ‘உடற்குறை உடைய மகளிரின் பெண்மையழகு பிறரால் இகழப்படும்’ என்பதை,

**‘‘கண்ணொடுகா திவையிலள் கரந்த முலையிரண்டு**
**முன்னும்வா யுதட்டோடு மூக்கில ளுறுநோய்த்தி**
**பெண்ணழகிற் கிவள்பிறராற் பேசவும் படுவாளோ”**[26]

எனும் பாடலில் நீலகேசி எடுத்துரைத்துள்ளாள். குண்டலகேசியை வாதத்தில் வென்ற நீலகேசிக்கு, காம்பிலி மன்னன் அளித்த பரிசில்களை நீலகேசி மறுத்துரைத்து, அவனை அறச்செயல்கள் மேற்கொள்ள வேண்டுகிறாள். இதனை,

**“ஆண்டகை அரசிறை அதுசொல்லக் கேட்டவவ் வறத்தகையா**

**தீண்டல னணிபிற புனைவெனு நினைவிலன் றியனைத்தும்**

**வேண்டல நிலனொடு விழுநிதி யினையவும் விறற்றகையா”**[27]

என்ற பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது.

சமண சமயத்திலும் பௌத்த சமயத்திலும் ஆண் துறவியரும், பெண்துறவியரும் இருந்துள்ளனர். ஆனால் துறவியர்க்கான ஒழுக்கங்களில் இவ்விரு சமயங்களும் மாறுபடுகின்றன. துறவு மேற்கொண்டொழுகும் புத்தசமய ஆடவர், பெண்துறவியரைப் புணரலாம் என்ற புத்தசமயக் கொள்கையை நீலகேசி சாடுவதை,

**“சிந்த னையினும் தீவினை யாமென்பார்க்**

**கந்திற் காம மமையுமென் றீரென்பாய்**

**சுந்த மாகச் சுவடறு வீரென**

**வந்தி தோறும் புடைக்க வமையுமோ”**[28]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிது. ‘காமமே தீவினைகளுக்குக் காரணமாய் அமைகிறது’ என்ற கொள்கை உடையவராய்ச் சமணசமயத்தினர் இருப்பதையும் மாறாக, துறவியர்களும் காமம் துய்க்கலாம் என்ற கொள்கையினை உடையவராக புத்தசமயத்தார் திகழ்வதும் இப்பாடற் கருத்தில் இடம்பெற்றுள்ளது.

**“காம மூரிற் கணிகைய ரோடன்ன**

**தூய்மை யுண்மையிற் றோற்றங் கரந்தவட்**

**சேம மாவகைச் செல்கமற் றென்பதும்**

**வாம நூலின் மறைபொரு ளல்லவோ”**[29]

பௌத்த துறவியானவன் தன் நெஞ்சத்தே காமவுணர்வு தோன்றியவிடத்துச் சேரிப் பரத்தையரோடு, அவர்க்கேற்ற தூய்மை தனக்கும் இருத்தலால் வெள்ளாடை அணிந்து, தன்னைப் பிறர் அறியாதவாறு பரத்தையர்

சேரிக்குச் சென்று தன் காம உணர்வைத் தீர்த்துக் கொள்வானாக என்று வினைய பிடகத்தில் கூறியுள்ளதே என நீலகேசி வினவுவதை அறியமுடிகிறது.

'சிங்கதத்தன்' என்ற பௌத்தத் துறவி போதி மரப் பிக்குணியுடன் உடலுறவு கொள்ள முயன்ற போது அவள் துறவி செயலைக் கண்டு மருண்டு வினவ, 'துறவியர் அவ்வாறு புணர்தற்கு விதியுண்டு' எனக் குறிப்பிட்டதை,

**"சிங்க தத்த ரெனப்படுந் தேரனார்**
**சங்க போதியி லாள்கட் டாயச்செய**
**விங்கி தென்னென வேழாய் தவசிகட்**
**கெங்கெங் காமி லெனவுரைத் தானரோ"**[30]

என்ற பாடல் வாயிலாக நீலகேசி குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. புதிதாகத் துறவறம் பூண்ட பெண்களைப் புணரலாம் என்ற புத்தசமயக் கொள்கையினையும் நீலகேசி சாடி, சமண சமயத் துறவியரின் மேன்மையை அருக்கசந்திரனிடம் எடுத்துரைக்கிறாள்.

நீலகேசியின் கூற்றிலிருந்து புத்தசாதகக் கதைகள் பலவற்றை அறிந்து கொள்ள முடிகிறது. காம்பிலி மன்னனின் அவையில் குண்டலகேசியுடன் நிகழ்த்திய சொற்போரில் நீலகேசி பல்வேறு புத்தசாதகக் கதைகளை எடுத்துரைத்துள்ளாள். புத்தன் தன் தாயைக் கொன்ற செயல்,

**"முன்கொன்றான் றன்றாயை"**[31]

**"பருவரலொன் றிலன்றாயைப் பழுப்பறித்தான்"**[32]

**"தாய்க்கொன் றான்றங்கு செங்குரு திப்புனல்**
**பேய்க்கொன் றீதல் பெருங்கொடை யென்பதை**
**வாய்க்கின் றாயினி மானுயர் மாசெலா**
**நாய்க்கென் றாலிது நல்லற மாங்கொலோ"**[33]

எனும் பாடலடிகளில் இடம்பெற்றுள்ளது. இவ்வாறு தாயைக் கொன்ற செயல் அறச்செயலாகாது எனக் குண்டலகேசியிடம் நீலகேசி எடுத்துரைக்கிறாள். புத்தனின் செயல் அறச்செயல் ஆகாதென்பதை எடுத்துரைக்கிறாள்.

புத்தன் தன் மனைவியைப் பிறர்க்கு வழங்கிய செயலையும் நீலகேசி கடிந்துரைக்கிறாள்.

**"கண்கொடுத்தான் றடிகொடுத்தான்**
**கயப்புலிக்குத் தற்கொடுத்தான்**
**பெண்கொடுத்தா னுடம்பினையும்**
**பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான்**
**மண்கொடுத்தான் மகக்கொடுத்தான்**
**மன்னுந்தற் சேந்தார்க்கு**
**விண்கொடுத்தா னவன் கொடுத்த**
**விரித்துரைப்பன் கேளென்றாள்"**[34]

என்ற பாடல் வாயிலாக, புத்தன் தன் கண்ணைப் பிறருக்குத் தானமாக வழங்கியமையையும், தன் உடம்பினை அறுத்துப் புலிக்குக் கொடுத்த செயலையும், மனைவியைப் பிறருக்கு அளித்த செயலையும் நீலகேசி சாடுவதை இப்பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

தன் மனைவியைப் பிறர்க்குக் கொடுத்த புத்தனைத் தருமன் என மொக்கலன் குறிப்பிடுகின்றான். புத்தனின் இச்செயல்,

**"தன்றாரம் பிறர்க்கீந்தான் றருமங் கொண்டென்றானாய்"**[35]

**"பெண்டான மீயு மறங்கொண்ட பெருமை யினான்"**[36]

எனும் பாடலடிகளில் இடம்பெற்றுள்ளன. புத்தன் தன் மனைவியைப் பிறருக்கு ஈந்த செயலை எள்ளி நகையாடிய நீலகேசி இது அறமன்று என மொக்கலனுக்கு எடுத்துரைக்கிறாள். பேதைப் பருவ மகளிர் மணல்

விளையாட்டின் போது தம் மனம் போனவாறு சிலவற்றைப் பெயரிட்டு அழைப்பதைப் போன்று உள்ளதென்பதை,

**"வப்பிள வனமுலையார் மணல்விடையாட் டதுவேபோல்"**[37]

எனும் பாடலடிகள் வாயிலாக நீலகேசி எடுத்துரைக்கின்றாள். மொக்கலவாதச் சருக்கத்தில் சமணசமய ஒழுக்கங்கள் குறித்த பல்வேறு செய்திகள் நீலகேசியால் விளக்கப்பட்டுள்ளன. அருகக்கடவுளின் இயல்புகளும் இச்சருக்கத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

**"தன்றார மீந்தான்"**[38]

**"கண்ணுந் தலையும் பிறவுங் கருந்தடியும்**

**பெண்ணுங் கொடுத்துப் பிறர்க்கே யுழந்தாய்"**[39]

எனும் பாடலடிகளில் புத்தன் தன் மனைவியைப் பிறருக்குக் கொடுத்த செயலை நீலகேசி சாடி புத்தனின் செயலை இழித்துரைக்கிறாள்.

புத்தவாதச் சருக்கத்தில் கபிலபுரம் என்ற நகரில் உலக மக்களுக்கு மயக்கத்தை விளைவிக்கின்ற கொள்கைகளை அறிவுறுத்திய புத்தனிடம் நீலகேசி வாதம் புரிகிறாள். உலக மக்களுக்கு அவன் அறிவுறுத்திய நூல் கருத்துகள் குறித்து நீலகேசி சொற்போர் புரிகிறாள். புத்தசமயத்தார்க்குரிய சூத்திர பிடகம், வினைய பிடகம், அபிதம்ம பிடகம் ஆகிய ஆகம நூல்கள் குறித்து இச்சருக்கத்தில் அறியமுடிகிறது.

மேலும் புத்த சமயத்தினர் ஊன் உண்ணுதலைப் பழித்தல் இல்லாத கொள்கை உடையவர் என்பதை நீலகேசி,

**"போதியா ரீண்டைப் புலால்பழியா ரென்றலும்"**[40]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது

இத்தகைய தத்துவங்களை உரைத்த புத்தனையே தான் நோவதாகக் குறிப்பிடுகிறாள்,

**"……………..சூனிய வீடுசொன்ன**

**புத்தனை நோதுமத்த புலம்பனீ போகவென்றாள்”[41]**

நீலகேசி, பிசாசிகன் என்ற பூதவாதியை வெல்வதோடு நீலகேசிக் காப்பியம் நிறைவு பெறுகிறது. காப்பியத்தில் சமணசமய அறங்கூறும் பெண்துறவியான நீலகேசியை அவையோர் பாட்டுவதுடன் காப்பியம் நிறைவடைகிறது. இவ்வாறு சமணசமயக் கொள்கையை கோட்பாடுகளை விளக்குபவளாக நீலகேசி, காப்பியத்தில் இடம்பெற்றுள்ளாள்.

### *4.3.2.* குண்டலகேசி

பௌத்தக் கொள்கைகளை எடுத்துக் கூறி நீலகேசியுடன் வாதம் செய்து தோற்ற பெண்ணாகக் குண்டலகேசி, நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளாள். நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மொக்கல வாதச் சருக்கத்தில் குண்டலகேசி வரலாற்றினை நீலகேசி,

**“என்றானை முகநோக்கி யிதுபெரிதும் பொய்த்தனைநீ**

**யொன்றாத கொள்கையா ருலகினுள யாவரையும்**

**வென்றான்மற் றிவன் சம்பு விரதியாயத் திரிந்தெங்கு”[42]**

எனக் குறிப்பிடுகிறாள். இப்பாடலுக்கான உரையில் சமயதிவாகர வாமன முனிவர் குண்டலகேசி வரலாற்றினை விரித்துரைக்கிறார். ‘‘குண்டலகேசி யென்பாளொரு வைசிய கன்னிகை, இவளொருநாள் பிராஸாத ஸ்தலத்து, விளையாடுகின்றாளாக, ஒரு கிதபவ (குற்றவாளி) வைசிய புத்ரன் காளனென்பானிவன், பௌத்த தர்சனங்கொண்டு, பல வழியுஞ் சோர விருத்தி பண்ணிச் செல்வாளை, அரசன் வதிக்கவென்றேவச் சிறைப்பட்டுப் போகின்றானை, முன் சொன்ன குண்டலகேசி கண்டு காமபரவசையாக, அதனையறிந்து, அவளுடைய பிதா, ராஜாவைக் கண்டு யாதானு மோருபாயத்தான் மீட்டு இவனுக்குக் குண்டலகேசி யென்னும் கன்னிகையினை விவாஹவிதியாற் கொடுத்தினிது செல்கின்ற காலத்தொருநாள், நீ கள்வனன்றோவென்று குண்டலகேசி சொல்ல,

காளனுந் தன்னுள்ளத்தே சினங்கொண்டு பின்பொருநாள், பீலிவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத்தேறி, நீயென்னை யிவ்வாறு சொல்லுதலில் யானுன்னைக் கொல்லத் துணிந்தேனென்னக் குண்டலகேசியும், 'தற்கொல்லியை முற்கொல்லிய' வென்பதன்றே, இவனை "யான் கொல்வேனென நினைந்து, 'யான் சாகிறேனாலும்மை வலங்கொண்டு சாவ" வெனவதற் கியைந்தகானனை வலங் கொள்கின்றாள். வரையினின்றும் விழ தூக்கினள். தூக்கக் காளனும் புத்த ஸ்மரணத்தினால் மோக்ஷித்தனன், குண்டலகேசியும் ஹர்த்ரு விரஹ துக்கிதையாகித் துறப்பனென நினைந்து பரசமயங்களெல்லாம் நாவல் நட்டு ஜயித்து, பௌத்த தர்சனங் கொண்டு முத்தி பெற்றாள்"[43] இவ்வரலாற்றிலிருந்து குண்டலகேசி 'தன்னைக் கொல்ல முயன்ற கணவனைக் கொன்று, பின்னர் காமவின்பத்தைத் துறந்து, புத்தமதப் பிக்குணியாகி, பிற சமயங்களைச் ஜெயித்து முக்தி பெற்றாள்' என்பதை அறியமுடிகிறது.

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகக் கருதப்படும் குண்டலகேசியே முதலில் தோன்றிய காப்பியமாகும். நீலகேசி ஆசிரியர் இக்காப்பியத்தைப் படைத்தமைக்கும் இந்நூற் கருத்துகளே காரணமாக அமைந்தன. குண்டலகேசி தன் வாதத்தால் பல சமயங்களை வென்றமையை அறிந்து, பௌத்தக் கொள்கைகளை மறுப்பதற்காக நீலகேசிக் காப்பியம் படைக்கப்பட்டது.

குண்டலகேசிக் காப்பியப் பாடல்கள் முழுமையாகக் கிடைக்கவில்லை. நீலகேசியின் உரையாசிரியரான சமய திவாகரவாமன முனிவர், குண்டலகேசியில் இடம்பெற்றுள்ள தொண்ணூற்று ஒன்பது பாடல்களைத் தம் உரையில் எடுத்தாண்டுள்ளார். அவற்றுள் பத்தொன்பது பாடல்களே இன்றைய நிலையில் முழுமையாகக் கிடைத்துள்ளன.

உடலின் நிலையாமை குறித்த கருத்துகள் குண்டலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

**“போதர வுயிர்த்த வாவி**

**புகவுயிர்க் கின்ற தேனு**

**மூதிய மென்று கொள்வ**

**ருணர்வினான் மிக்க நீரா**

**ராதலா லழிதன் மாலைப்**

**பொருள்களுக் கழிதல் வேண்டா**

**காதலா னழுது மென்பார்**

**கண்ணனி களைய லுற்றார்”**[44]

‘உடலிலிருந்து வெளியேறிய மூச்சுக் காற்றானது மீண்டும் உட்புகாமல் போதல் கூடும். எனவே மெய்யறிவுடையோர், தாம் உள்வாங்கும் ஒவ்வொரு மூச்சுக் காற்றும் தமக்கு ஊதியமாகவே கருதுகின்றனர். அத்துணை நிலையாமையுடையது இவ்வுடம்பு. இதன் அழிவுக்கு வருந்துதல் வேண்டா. இதன் அழிவு கருதி அழுபவர் வீணே தம்மை வருத்துபவரேயாவார்’ என்ற கருத்து இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. இப்பாடல் உணர்த்தும் கருத்திலிருந்து குண்டலகேசிக் காப்பியத்தின் சிறப்புகளை அறிந்து கொள்ளமுடிகிறது. குண்டலகேசியின் கணவன் பெயர் ‘காலன்’ என நீலகேசியில் இடம்பெற்றுள்ளது. தன் கணவனான காலனைக் கொன்ற செயலை, நீலகேசியின் கூற்றிலிருந்தும் அறியமுடிகிறது.

**“பருவரலொன் றிலன்றாயைப்**

**பழுப்பறித்தான் தலைவனிவள்**

**கருவரைமேற் றன்கணவன்**

**காலனையுங் கவிழ்த்திட்டாள்**

**இருவரையும் போல்வாரிவ்**

**விருநிலத்தின் மேலெங்கும்**

**பெருவழியார் பேரருளார்**

**பிறர்யாரே யெனநக்காள்"**[45]

எனக் குறிப்பிட்டுப் பழிப்பதை இப்பாடல் கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

காம்பிலி மன்னன் அவையில் குண்டலகேசி, நீலகேசியுடன் நிகழ்த்தும் சொற்போரில், புத்தபெருமானின் இயல்புகளையும் புத்தசமயக் கொள்கைகளையும் எடுத்துரைக்கிறாள்.

**"ஆதிதான் பெரியனா**

**யறக்கெடு மளவெல்லாம்**

**ஊதியமே யுயுணர்ந்தவ**

**னுறுதரும மேயுரைத்தான்**

**யாதனையுந் தான்வேண்டா**

**னயலார்க்கே துன்புற்றான்**

**பொதியா னெம்மிறைவன்**

**பொருந்தினா ருயக் கொள்வான்"**[46]

என்ற குண்டலகேசியின் கூற்றில் புத்த பெருமானின் பெருமைகள் இடம்பெற்றுள்ளன. புத்தபெருமான் தனக்கென யாதொரு பொருளையும் வேண்டாதவன் என்பதையும். தன்னைப் புகலிடமாக அடைந்தவரை உய்விப்பவன் என்பதையும் குண்டலகேசி இப்பாடலில் விளக்குகிறார். புத்தபெருமானின் கொள்கைகள் நிரம்பப் பெற்ற நூற்கருத்துகளையும் குண்டலகேசி எடுத்துரைக்கிறாள்.

**"முந்துரைத்தான் முந்நூலு**

**மந்நூலின் முடிபொருடா"**[47]

இப்பாடலடி, ‘விநயபிடகம், சூத்திரபிடகம், அபிதருமபிடகம்’ எனும் மூன்று புத்தசமய நூல் குறித்துக் குறிப்பிடுகிறது. இக்கருத்துக்கள் அனைத்தையும் உணர்ந்தவளாக நீலகேசி திகழ்கிறாள்.

சமயக் கருத்துகளைப் பிறரிடம் வாதிட்டுச் சொற்போர் நிகழ்த்த விரும்புவோர் அரண்மனை முற்றத்தில் நாவற் கிளையை நட்டு வைக்கும் அக்கால மரபினைக் குண்டலகேசி வாயிலாக அறியமுடிகிறது.

### *4.3.3.* ஆர்யாங்கனையர்

இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளாமல் முற்றிலும் துறவு நெறியல் வாழ்ந்த சில மகளிர் குறித்த குறிப்புகளும் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. இத்தகைய மகளிர் ‘ஆர்யாங்கனை’ என்ற பெயரில் சிறப்பித்துப் போற்றப்பட்டுள்ளனர். சமணப் பெண் துறவியர் ‘கந்தி’ என்ற பெயரிலும் அழைக்கப்பட்டனர். இத்தகைய பெண் துறவியைரைக் கண்டாலும் சமண முனிவர்கள் அன்றைய பொழுதில் உணவு ஏற்கமாட்டார் என்பதை நீலகேசி மொக்கலனிடம்,

**“பெண்மக கள்ளிர் பிறகிட வுண்பர்**
**கண்ணி னாலில்லுட் கந்தியைக் காணினும்**
**முண்ணல லம்மெனும் மோத்துடை யாளர்களைத்**
**திண்ண தாவைது தீவினை கோடியோ”**[48]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. சமண சமய ஆர்யங்கனையருக்குரிய ஒழுக்க நெறிமுறைகளைச் சமய திவாகர வாமனமுனிவர் தம் நீலகேசி உரையில் குறிப்பிட்டுள்ளார். “ரிஷிகள் இருக்கும் பள்ளியர் ஆர்யாங்கனைகளிருக்கப் பெறாரென்னும், ஆர்யாங்கனைகளிருக்கும் பள்ளியுள் ரிஷிகள் இருக்கப்பெறாரென்றும், ரிஷிகள், ரிஷிகள் பாற்றுறக்க, ஆர்யாங்கனைகள், ஆரியாங்கனைகள் பாற்றுரக்கவென்னும், அத்யனமு மிவ்வாறே செய்க என்றும் பரமாகம

முடையார் அவ்வாறே யின்றுகாறும் அநுஷ்டிக்கின்றார்கள்"[49] ஆகம விதிகளிலிருந்து வாமன முனிவர் அளிக்கும் இவ்வுரையிலிருந்து சமண சமயப் பெண்பால் துறவியர் தனி இடத்தில் நோன்பிருப்பர் என்பதையும், அவ்விடத்தில் ஆண்துறவியர் இருக்கப்பெறார் என்ற கருத்தையும் அறிந்திட முடிகிறது.

இவ்வாறு துறவு ஒழுக்கம் மேற்கொண்டு வரும் ஆர்யாங்கனையர் இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்துவரும் மகளிர்க்கு வாழ்வியல் அறங்களை எடுத்துரைத்தமை பற்றி ஐஞ்சிறு காப்பியங்கள் வாயிலாக அறியமுடிகிறது.

நாககுமாரனின் மனைவியான இலக்கணை சல்லேகனை நோன்பியற்றுவதற்கு முன்பு 'பதுமை' என்ற ஆர்யாங்கனையை வணங்கி, அறங்கேட்ட செய்தி நாககுமார காவியத்தில் இடம்பெற்றுள்ளது.

## 4.4. சல்லேகனை நோன்பு

'சல்லேகனை' என்பது உண்ணா நோன்பிருந்து உயிர்துறக்கும் சமணசமய நோன்பு முறையாகும். இந்நோன்பினை இல்லறத்தாரும் துறவறத்தாரும் ஏற்கலாம் என்பதைச் சமண ஆகமங்கள் குறிப்பிட்டுள்ளன. சல்லேகனை என்பதற்குரிய விளக்கத்தை ஸ்ரீமத் அமிருத சந்திரசூரி ஆசாரியார், "கஷாயம் மற்றும் உடலைச் சுருக்குதற்குச் சல்லேகனை என்று பெயர். மும்மணி (நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம்) தர்மத்தைக் காக்கவும் ஆன்ம முன்னேற்றத்திற்காகவும் சல்லேகனை ஏற்கப்படுகிறது. வீட்டில் தீப்பிடிக்கும் போது முதலில் தீயை அணைக்க முயற்சி செய்வார்கள். ஆனால் தீயை அணைப்பது இயலாமல் போகும்போது வீட்டிலுள்ள மதிப்புமிக்க ரத்தினம், செல்வம் முதலியவற்றை வெளியே கொண்டுவந்து வீட்டைக் காப்பாற்ற முடியாமல் விட்டுவிடுகின்றனர். அதுபோல துன்பம், நோய், பஞ்சம் போன்ற இயற்கைச் சீற்றங்கள்

முதலியவை உண்டான போது அவற்றிலிருந்து மீள முடியாதபோது மும்மணி தர்மத்தைப் பாதுகாக்க சல்லேகனை ஏற்று உடல் தியாகம் செய்யப்படுகிறது. இதனைச் சமாதி மரணம் அல்லது வீரமரணம் என்பர்''[50] எனக் குறிப்பிட்டு விளக்குகிறார்.

சல்லேகனை என்ற உடல் வருத்தும் தவத்தினை மகாவீரர் வற்புறுத்தமை குறித்து, ''உடல் சம்பந்தப்பட்ட செயல்களை மகாவீரர் மிகவும் வற்புறுத்தினார். அதனால் அவர் மெய்வருத்தும் தவத்தை வலியுறுத்தியதும் இயற்கையேயாகும். இத்தவத்தில் சாகும்வரை உண்ணாவிரதம் இருத்தல், அடைகளிலில்லாமல் இருந்து குளிரையும் வெப்பத்தையும் பொறுத்துக் கொள்ளுதல் ஆகியவை ஜைன மத நூல்களில் வெகுவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஜைன முனிவர்கள் தவத்தைக் குறித்தும், அது எவ்விதம் சரியானதென்பதைக் குறித்தும் 'திரிபிடக'த்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன''[51] என்று இந்நோன்பின் கடுமை குறித்து ராகுல் சாங்கிருத்யாயன் குறிப்பிட்டுள்ளார்.

சமணசமயம் சார்ந்த தமிழ் நூல்களிலும் சல்லேகனை நோன்பினைப் பற்றிய குறிப்பு உள்ளது.

**''இடையூறு ஒழிவில் நோய் மூப்பிவை வந்தால்**
**கடை துறத்தல் சல்லே கனை''**[52]

என அருங்கலச்செப்பு குறிப்பிடுகிறது. 'தாங்கவியலாத துன்பம், கொடியநோய், முதுமை ஆகியன வந்தபோது உண்ணா நோன்பிருந்து உயிர்துறத்தல் சல்லேகனை' என்பது இக்குறட்பாவின் பொருளாகும். சல்லேகனை ஏற்கும் போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கம் குறித்து,

**''ஊணொடு பானம் முறை சுருக்கி ஓர்ந்து உணர்ந்து**
**மானுடம்பு வைக்கப் படும்''**[53]

என அருங்கலச்செப்பின் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். உணவு, பானம் முதலியவற்றைச் சிறுகச் சிறுகக் குறைத்துக்கொண்டு முடிவில் அறவே உணவு உள்ளிட்ட அனைத்தையும் நிறுத்தி உயிர்விடுதல் வேண்டும் என்பதை இக்குறட்பா வாயிலாக அறியமுடிகிறது. பூஜ்ய ஸ்ரீ ஆர்ஜவஸாகர் முனிவர், ‘‘சல்லேகனை இல்லறத்தார்களுக்கும் முனிவர்களுக்கும் பொது தருமமாகும். சல்லேகனை. சந்நியாச மரணமும் இரண்டும் ஒரே பொருளன. ஆகையால் இல்லறத்தவர்களுக்குரிய பன்னிரண்டு விரதங்களுக்குப் பிறகு சல்லேகனையைக் கூறியுள்ளார்கள் ஆசாரியர்கள்’’[54] எனக் குறிப்பிட்டுள்ளார்.

இல்லற வாழ்க்கை மேற்கொண்டொழுகும் ஆடவர் மற்றும் மகளிர் ஆகிய இருவருக்கும் சல்லேகனை நோன்பு உரியதென்று சமண ஆகமங்கள் குறிப்பிட்டுள்ளன. இவ்வாறு பெண்கள் சல்லேகனை நோன்பு மேற்கொள்வது குறித்து, ‘‘ஆண் துறவியர்கள் மட்டுமே சல்லேகனை ஏற்பது வழக்கமாக இருக்கிறது. இல்லறத்தார்களும் சல்லேகனை ஏற்றுச் சமாதி மரணம் அடையலாம். பெண்துறவிகளும் சல்லேகனை ஏற்றுச் சமாதி மரணம் அடையலாம்’’[55] பூஜ்ய ஸ்ரீ ஆர்ஜவஸாகர் முனிவர் குறிப்பிட்டுள்ளார். இவர்தம் கருத்திலிருந்து இல்லற மகளிர், துறவற மகளிர் ஆகிய இருதிறத்து மகளிரும் சல்லேகனை நோன்பியற்றி முக்தி அடையலாம் என்ற கருத்தை அறியலாம்.

சமணப் பெண்துறவியான கவுந்தியடிகள், தாம் அடைக்கலம் அளித்த கோவலனுக்கும் கண்ணகிக்கும் ஏற்பட்ட துன்ப நிலையால் வருத்தம் எய்திச் சல்லேகனை நோன்பு மேற்கொண்டமையை,

**‘‘தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்றம்**
**நிவந்தோங்கு செங்கோல் நீணில் வேந்தன்**
**போகுயிர் தாங்கப் பொறைசா லாட்டி**
**என்னோ டிவர்வினை யுருத்த தோவென**

**உண்ணணா நோன்போ டுயர்பதிப் பெயர்த்ததும்”[56]**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

நல்லொழுக்கத்தால் அமைந்த சல்லேகனை நோன்பு மேற்கொண்டு ஊனுடம்பை விட்டவர் அழித்தற்கியலாத உயர்ந்த தெய்வ உடம்பைப் பெறுவர் என்ற கருத்து சீவக சிந்தாமணியில்,

**“ஒழுக்கிய லருந்தவத் துடம்பு நீங்கினா**
**ரழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே**
**வழுக்கிய புதல்வனங் கொழிய மாமணி**
**விழுத்தகு மகனொடும் விரைவி னேகினான்”[57]**

என இடம்பெற்றுள்ளது.

மேருமந்திர புராணம் சல்லேகனை என்பதனை ‘அனசனத் தவம்’ என்ற பெயரிலும் குறிப்பிட்டுள்ளது.

**“வினைகளுக் குதிர்ச்சி வேட்கை நீக்கி மெய்வசம்வரல்**
**புனைவரும் பொறிச் செறிப் புயிர்கழிவு போற்றுதல்**
**நினைின தொருக்கமு நெறிவிளக்க முஞ்செயு**
**மனசன தவத்தினோ டருந்தவன் பொருந்தினான்”[58]**
**“புகாமிற் பொறிமிகு மனசனம் பொருந்திடின்**
**நெகாவுடம் புடன்படாது நாட்க ணீதி மாதவன்**
**புகாவினைச் சுருக்க மெய் யுடன்படும் பொறிகளும்**
**மிகாவென் விரும்பியாவ மோதுரிய மேவினான்”[59]**

எனும் பாடல்களில் அனசனத்தவம் குறித்தறிய முடிகிறது. ‘அசனம் - அன்னம் புசித்தல், அனசனம் - அன்னம் புசியாத உபவாசம்”[60] என இத்தவத்திற்கு விளக்கம் தருவர்.

இத்தகைய தவம் மேற்கொண்டோர் குறித்த செய்திகள் தமிழகக் கல்வெட்டுக்களிலும் இடம்பெற்றுள்ளன.

**"ஐம்பத் தெழுன**

**சனந் நொற்ற**

**சிரிகர் நீசிதிகை"**[61]

சந்திரநந்தி என்ற சமண முனிவர் ஐம்பத்தேழு நாட்கள் சல்லேகனை ஏற்று உயிர் விடுத்தமையை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

சல்லேகனை நோன்பு குறித்த செய்திகள் நீலகேசியில் விரிவாக இடம்பெற்றுள்ளன.

**"அழிவுக் காலத் தறத்தொடர்ப் பாடெலா**

**மொழியல் வேண்டுமென் றொற்றுமை தாங்கொளீஇ**

**வழியுங் காட்டுமம் மாண்புடை யார்கண்மேற்**

**பழியிங் கிட்டுரைத் தாற்பய னென்னையோ"**[62]

'உடல் அழிகின்ற இறுதிக் காலத்தே அனைத்துப் பற்றுகளையும் விடுத்தொழிக்க வேண்டும் என்ற கருத்துடன் 'சல்லேகனை என்ற ஒரு நோன்பு வழிமுறையைக் கண்டும் மாண்புடைய சமயம்' என்று சமணசமயத்தாரை நீலகேசி சிறப்பித்துப் போற்றுகிறாள்.

சல்லேகனை விரதத்தை மொக்கலன் கூற்றில் வைத்தும் நீலகேசி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்,

**"வெயிறெறவ் வுணங்கியும் வெள்ளிடைந் நனைந்துமூன்**

**பயிறலிற் பட்டினிகள் விட்டுமின்ன கட்டமாய்த்**

**துயிறுறந் திராப்பகற் றன்பவெங் கடலினார்க்**

**கயிறெறுந் நெடுங்கணா யாவதில்லை யல்லதும்"**[63]

பரந்த வெளியில் நின்று நோன்பிருத்தல், வெயிலில் உடம்பினை வணக்குதல், மழையினும் பனியிலும் நனைதல், உணவு துறத்தல்,

உறக்கத்தை ஒழித்தல் ஆகியன சல்லேகனை ஏற்போர் மேற்கொள்ளவேண்டிய துன்பங்கள்' என்பதனை இப்பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

சூளாமணிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள பயாபதி மன்னனின் மனைவியரான மிருகாபதியும் சசியும் ஆகிய இருவரும் துறவு வாழ்க்கை மேற்கொண்டு உலக வாழ்க்கையை விடுக்கின்றனர். இவர்கள் மேற்கொண்ட நோன்பு சல்லேகனை நோன்பாகும். ஆடவர் மற்றும் மகளிர் ஆகிய இருதிறத்தாரும் உடலின் நிலையற்ற தன்மையை முதலில் உணர்தல் வேண்டும் என்பதைச் சூளாமணியில் தோலாமொழித்தேவர்,

**"பிறந்துநாம் புறஞ்செய் கின்ற பேதையிவ் வுடலந் தானும்**
**இறந்தநாள் போல்வ தின்றா யிற்றையி னாளை வேறாய்ப்**
**பறைந்துநாம் பற்றப் பற்றப் பற்றுவிட் டகலு மாகில்**
**சிறந்தனர் பிறர்கள் யாரே சிந்தைநீ சிந்தி யென்றான்"**[64]

என வலியுறுத்துகிறார். உடலனாது பிறந்தநாள் தொட்டு நம்முடனே இருப்பினும், நாள்தோறும் அது மாறி, மாறி முதிர்ந்து அழியும் தன்மையுடையதாகும்' என்ற கருத்தினை இப்பாடல் விளக்குகிறது.

மன்னன் பயாபதி, உலக வாழ்வைத் துறந்து தான் துறவு வாழ்வு மேற்கொள்ள விரும்புவதை தன் மனைவியரிடம் கூறியவுடன் மிருகாபதியும் சசியும் தாமும் துறவு வாழ்க்கை மேற்கொள்ளவிருப்பதை மன்னனுக்கு உணர்த்தினர். இதனை,

**"ஆவியா யரும்பெற லமிர்த மாகிய**
**தேவிமார் தங்களைக் கூவிச் செவ்வனே**
**காவியாய் நெடுங்கணீர் கருதிற் றெண்ண**
**மேவினார் தவமமர் வேந்தன் முன்னரே"**[65]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது. கற்புடைத் தேவிமார் தம் கணவரின் செயலைப் பின்பற்றி வாழ்ந்தமையை இப்பாடற்கருத்து எடுத்துரைத்துள்ளது.

மகளிர் இப்பிறப்பில் குழந்தைகளைப் பெறுதல், பெற்ற குழந்தையரை இழந்திடல், தம் கணவன் பிற பெண்களை விரும்புதலால் துயரம் கொள்ளுதல் ஆகிய துன்பங்களை வாழ்க்கையில் அடைவர் என்பதை மல்லிசேன வாமன முனிவர் தாமியற்றிய மேருமந்திர புராணத்தில்,

**"மைந்தரைப் பெறாமை பெற்றால் இழந்திடல் மாற்றுப் பெண்ணில்**

**அந்தரத் தனைய துன்பந் தாங்கதி நீங்கு வார்கள்"**[66]

எனக் குறிப்பிட்டுள்ளார். பெண்கள் சமண ஆகமங்கள் குறிப்பிட்டுள்ள மாதவத்தைப் புரிந்து, பிறவித் துன்பத்தை ஒழித்து, மறுபிறப்பில் ஆடவராய்ப் பிறப்பர் என்றும் பெண்பிறப்பை ஒழித்திட மாதவத்தைச் செய்தல் வேண்டும் என்பதை,

**"மாதவம் தாங்கி வையத்து ஐயராய் வந்து தோன்றி**

**ஏதமொன் றின்றி வீடும் எய்துவர் தையலார்கள்"**[67]

**நீதியால் நோற்று வந்தீர் நீவிர்இப் பிறவி நீங்கிக்**

**காதிக்க ணிரிந்து வீடும் காலத்தால் அடைதீர் என்றான்"**[68]

என்ற பாடல் வாயிலாக வலியுறுத்தியுள்ளார்.

சமணசமயம் குறிப்பிடும் சல்லேகனை நோன்பினை, உதயணகுமார காவியம் 'சல்லகீணை' எனக் குறிப்பிடுகிறது.

**"சல்லகீணை கொண்டுடன்**

**சமாதிவந்தே யெய்தலும்"**[69]

என்ற பாடலடியில் இந்நோன்பின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

உதயணகுமாரன் சல்லேகனை நோன்பு மேற்கொள்ளவிருக்கும் தன் எண்ணத்தைத் தேவியருக்குத் தெரிவித்து, அவர்கள் செயல் யாது என

வேண்டுகிறான். தன் மனைவியரை உதயணகுமாரன் தன்னைப் போன்றே நோன்பு மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தவில்லை. எனவே சல்லேகனை நோன்பு மேற்கொள்வதென்பது அரசகுல மகளிரின் விருப்பத்தைப் பொறுத்தே அமைகிறது என்று கூறலாம்.

உதயணகுமாரன் சல்லேகனை ஏற்கவுள்ள தன் செயலைத் தன் தேவிமார்க்குக் கூறுவதை,

**"தேவயீர்நீர் வேண்டியதென்**
**திருமனை துறந்தபின்**
**மேவுவனற் றவமென்ன**
**மின்னிடை மாதரும்**
**போவதுபொ ருளெமெக்கும்**
**புரவலனே நின்னுடன்**
**தாவில்சீர் விழுத்தவமுந்**
**தாங்குதுமென் றிட்டனர்"[70]**

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. சல்லேகனை நோன்பு மேற்கொள்ள மனமுவந்து விரும்பிய தன் தேவியரை உடன் அழைத்துச் சென்ற உதயணன் 'தருமவீரர்' என்ற சமண முனிவரிடம் அறங்கேட்டு கடுந்தவம் புரிகிறான். அவன் தேவியரும் அவ்வாறே தம் பற்றுகளைத் துறந்து நோன்பியற்றியமையை,

**"புறத்தினும் மகத்தினும்**
**போகந்தொடர்ப் பாடுவிட்**
**டறத்திடை யருளினா**
**லாருயிரை யோம்பியும்**
**திறத்துடன் சமிதியும்**
**சிந்தையி னடக்கமும்**

**திறத்திறத் துணர்ந்துபின்**

**றியானமுற்றி னார்களே”[71]**

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. உதயணனுடன் அவன் தேவிமார்கள் சமாதி நல் மரணம் அடைந்தமையை,

**“அமைச்சரா மநகரு**

**மானவன்ன மாதரும்**

**சமைத்த நோன்பு நோற்றுயர்ந்து**

**சமாதிநன் மரணத்தின்**

**இமைத்தலில் லமரரா**

**நிறைந்தசோத மாதியாய்**

**அமைத்தவச் சுதம்மள**

**வானபடி யின்புற்றார்”[72]**

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. நோன்பியற்றிய தேவிமார் அனைவரும் மேனிலை உலகத்தில் தேவர்களாகப் பிறந்தனர் என்றும், அங்கு அனைவரும் அழகிய தேவமாதர்களைப் புணர்ந்து இன்புற்றனர் என்றும் இந்நோன்பின் பயன்குறித்து உதயணகுமார ஆசிரியர்,

**“பொற்புடைநன் மாதரைப்**

**புணர்ந்துமேனி தீண்டலும்**

**அற்புதமாய்க் காண்டலு**

**மானவின்சொற் கேட்டலும்**

**கற்புடைம னத்திலெண்ணிக்**

**காணற்கரி தாகவே**

**விற்பனநன் மாதவர்**

**வேண்டுசுகந் துய்த்தார்”[73]**

எனக் குறிப்பிட்டுள்ளார். அரசனும் அரசியரும் விண்ணுலகில் தேவர்களாய்த் தோன்றி இன்புற்றமையை இப்பாடல் குறிப்பிட்டுள்ளதிலிருந்து, நோன்பியற்றிய மகளிர் மறுபிறவியில் ஆடவராய்ப் பிறத்தல் குறித்த கருத்தினை அறியமுடிகிறது.

நாககுமாரனின் தந்தை சயந்தரன் நாககுமாரனிடம் அரசாட்சியை ஒப்படைத்து விட்டுத் துறவுபூண்டு நோன்பியற்றி நற்பேறு அடைகிறான். நாககுமாரனின் தாயான பிரிதிதேவி அவ்வாறே சல்லேகனை எனும் துறவு பூண்டு நற்கதி அடைந்தமையை,

**“பிரிதிநவிநற் றேவியுந்தன் பெருமகனை விட்டு**

**சிரீமதி யெனுந்துறவி சீரடி பணிந்து**

**அரியதவந் தரித்தவ மச்சுத மடைந்தாள்”**[74]

என்ற பாடற்கருத்து விளக்குகிறது.

நாககுமாரன் சல்லேகனை ஏற்றுத் துறவு பூண்ட போது, அவன் மனைவியான இலக்கணை, பதுமை எனும் தவப்பெண்ணிடம் அறங்கேட்டு சல்லேகனை நோன்பு மேற்கொண்டமையை,

‘‘**கமலமல ராணிகர்நற் காட்சியிலக் கணையும்**

**துமிலமனைப் பதுமையெனுந் துறவரடி பணிந்தாள்”**[75]

**“நறுங்குழல லிலக்க ணையு நங்கை மார்தங் கூட**

**உறுதவந் தரித்துக் கொண்டு வுவந்தவர் செல்லு நாளுள்”**[76]

எனும் பாடலடிகள் உணர்த்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது. மகளிர் இவ்வாறு சல்லேகனை நோன்பிருக்கும் போது, அவ்வாறு நோன்பியற்றிய பிற மகளிர் மட்டும் உடனிருந்தமையை இப்பாடலடிகள் விளக்குகின்றன.

யசோதர காவியத்தில் இடம்பெற்றுள்ள அபயமதி தன் அண்ணன் சல்லேகனை ஏற்பதற்கு மனம் விரும்பியவுடன் தானும் அவ்வாறு நோன்பியற்றித் தன்னுயிரை விடுக்க முயன்றமையை,

**"ஒன்றிய உடம்பின் வேறாம் உயிரின துரவ முள்ளி**

**நன்றென நயந்து நாங்கள் நல்லறப் பெருமை நாடி**

**வென்றவர் சரணம் மூழ்கி விடுதுநம் முடலமென்றான்**

**நன்றிது செய்கை யென்றே நங்கையு நயந்து கொண்டாள்"**[77]

என்ற பாடற்கருத்து விளக்குகிறது. சல்லேகனை நோன்புமேற்கொள்வதை அபயமதி நன்றெனக் கூறுவதை இப்பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

பஞ்ச பரமேட்டிகளை வணங்கி அபயமதி நோன்பியற்றத் தொடங்கியமையை,

**"அறிவொடா லோக முள்ளிட் டனந்தமா மியல்பிற் றாகி**

**அறிதலுக் கரிய தாகி யருவமா யமல மாகிக்**

**குறுகிய தடற்றொள் வாள்போற் கொண்டிய லுடம்பின்**

**இறுகிய வினையு மில்ல தெமதியல் பென்று நின்றார்"**[78]

என்ற பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது. இவ்வாறு நோன்பு நோற்கத் தொடங்கிய இருவரையும் மன்னன் மாரிதத்தன் விருப்பத்திற்கு ஏற்றவாறு சண்டமருகன் பிடித்துப் பலியிட முயல்கிறான். மன்னனுக்கு அறிவுரை பகன்ற இரட்டையர் இருவரும் தம் நோன்பினைத் தொடர்ந்து மேற்கொண்டமையால் வானவராய்த் திகழ்ந்தமையை,

**"அண்ண லாகிய வபயனுந் தங்கையும்**

**ஆயுசு மிகையின்மை**

**நண்ணி நாயக முனிவனி லறிந்தனர்**

**நவின்றனர் குணமெல்லாங்**

**கண்ணி னார்தம துருவின துடலங்கள்**

**கழிந்தன கழிபோகத்**

**தெண்ணின் வானுல கத்திரண் டாவதி**

**னிமையவர் தாமானார்"**[79]

என்ற பாடற்கருத்திலிருந்து அறியமுடிகிறது.

ஐஞ்சிறு காப்பியங்களில் சல்லேகனை நோன்பியற்றி வீடுபேறு அடைந்த மகளிர் பலர் இல்லறத்தைத் துறந்தபின் வீடுபேறு அடைந்த செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. திகம்பர சமணசமயத்தார் கொள்கைகளுக்கு ஏற்பவே ஐஞ்சிறு காப்பியங்களில் சல்லேனை நோன்பியற்றி வீடுபேறு அடைந்த மகளிர் பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளனர். “பெண்பிறவி தாழ்ந்த பிறவி என்பதும், பாவம் செய்தவர் பெண்ணாகப் பிறக்கிறார் என்பதும் சமணசமயக் கொள்கை. பெண்ணாகப் பிறந்தவர் வீடுபேறு (மோட்சம்) அடையமுடியாது என்பதும் சமணமதத் துணிபு ஆகும். அவர்களுள் சுவேதாம்பர சமணர் பெண் பிறவிக்குச் சற்று உரிமை கொடுக்கின்றனர். இல்லறத்தை நீக்கித் துறவு பூண்டு மனத்தை அடக்கி உடம்பை வருத்தித் துன்பங்களைப் பொறுக்கும் ஆற்றல் பெண் மகளிர்க்கு இல்லாத படியினால், அவர்கள் பெண் பிறப்பில் வீடுபேறடைய முடியாதென்றும், ஆனால் அவரும் துறவு பூண்டு மனவுறுதியோடு முயல்வார்களாயின் வீடுபேறடையக் கூடும் என்றும் சுவேதம்பரச் சமணர் கூறுகின்றனர். ஆனார் திகம்பரர் பெண்பிறவியில் வீடுபேறடைய முடியாதென்றும், பெண்கள் ஆணாகப் பிறந்து துறவுபூண்டு தோற்றால்தான் வீடுபேறு அடையமுடியும் என்றும் கூறுகின்றனர்”[80] என மயிலை சீனி வேங்கடசாமி மகளிரின் வீடுபேறு குறித்துச் சமணசமயம் கொண்டிருக்கும் கருத்துகளைத் தெளிவுபடுத்துகிறார். இவர்தம் கருத்திற்கு ஏற்றவாறு ஐஞ்சிறு காப்பியங்களில் சல்லேகனை நோன்பியற்றிய பெண்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன. இருப்பினும் மறுபிறப்பில் அவர்கள் ஆணாகப் பிறப்பதற்காக நோன்பியற்றினர் எனும் கருத்து ஐஞ்சிறு காப்பியங்களில் இல்லை என்பதை இவ்வரிகள் புலப்படுத்துகிறது.

### *4.5. சக்ரவாள நோன்பு*

மகளிர் மேற்கொண்ட நோன்புமுறைகள் குறித்துச் சூளாமணி விளக்கியுள்ளது. இந்நோன்பு பற்றிய விரிவான விளக்கத்தினைச் சூளாமணி உரையாசிரியர் அளிக்கிறார். ‘‘நோன்புநாளில் தேவபூசை, ஜாவக பூசை, சுதாசிரவணம், குருபூசை, தானம் முதலியன செய்தபின்பு உணவுகொள்ள வேண்டும். இவ்வாறு நோன்பு நோற்று முடித்தவர் இப்பிறப்பு, மறுபிறப்புக்களில் வேண்டிய இன்பங்களைப் பெற்றுத் துறக்க வீடுகள் சேர்வர்.’’[81] திருமணத்திற்கு முன்னர் சுயம்பிரபை சக்கரவாள நோன்பியற்றிப் பெண்மைக் குணத்தில் சிறந்து விளங்கியமையை,

**‘‘அழற்கொடி யெறித்தொறுஞ் சுடரு மாடக**
**நிழற்கொடி யதுவென நிறைத்த காரிகைக்**
**குழற்கொடி யனையவள் கொண்ட நோன்பினால்**
**எழிற்கொடி சுடர்வதோ ரியற்கை யெய்தினாள்’’**[82]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இத்தகைய அரிய நோன்பினை மாண்புடைய மகளிர் அல்லது பிறர் நோற்பதற்குரியவராவார் என்ற கருத்தும் சூளாமணியில் இடம்பெற்றுள்ளது. இதனை,

**‘‘முகைத்தவார் முல்லையை முருக்கு மெல்லியல்**
**நகைத்தவார் குழலவ டன்மை யாயினும்**
**வகுத்தவா றுயர்ந்தன நோன்பு மாசிலா**
**வகத்துமாண் புடையவர்க் கரிய தில்லையே’’**[83]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. மெல்லியயியல்புடைய சுயம்பிரபை அரிய நோன்பியற்றிப் பெருமை பெற்றதை இப்பாடற்கருத்து விளக்குகிறது.

மகளிர் ஆற்றும் இந்நோன்பு குறித்த செய்திகள் சமண ஆகமங்களில் இடம்பெற்றுள்ளன. இந்நோன்பின் பயனால் மகளிர், இந்திர உலகம்

தம்மை வணங்குதற்குரிய பெருமை அடைவர் என்பதைத் தோலாமொழித் தேவர்,

**"இந்திர வுலகமும் வணக்கு மீடுடைத்**

**தந்திர நோன்பொளி தவழத் தையலாள்**

**மந்திர நறுநெய்யால் வளர்ந்து மாசிலா**

**வந்தர வழற்கொடி யனைய ளாயினாள்"**[84]

என்ற பாடலில் குறிப்பிடுகிறார். இப்பாடலில் இடம் பெற்றுள்ள 'தந்திர நோன்பு' என்பதை உரையாசிரியர்கள், "தந்திரம் - வடசொல் நூல் இங்கே சைநாகமத்தைக் குறித்து நின்றது"[85] எனக் குறிப்பிட்டுள்ளமையால் கன்னிப் பெண்கள் மேற்கொள்ளும் இந்நோன்பு குறித்துச் சமண ஆகமங்கள் குறிப்பிடுகின்றன என்பதையும் இந்நோன்பின் பயனால் மகளிர் மேன்மையடைவர் என்பதையும் அறியமுடிகிறது. சமண ஆகமங்களில் உள்ள இந்நோன்பினை,

**"தாங்கருஞ் சுடரொளி சக்கர வாளமென்**

**றோங்கிரும் பெயர்கொணான் புயர நோற்றபின்**

**றீங்கரும் பனையசொற் சிறுமி தெய்வதக்**

**காங்கொரு பெருஞ்சிறப் பயர்தல் மேயினாள்"**[86]

எனப் பாடலில் எடுத்துரைத்துள்ளாள். இந்த நோன்பு குறித்து உரையாசிரியர்கள் விரிவான விளக்கத்தை அளித்துள்ளனர். "பங்குனித் திங்களில் உத்தர நாளிற்கு முந்தின நாளில் ஜிநாலயத்திற்குச் சென்று கடவுளையும் ஆகமத்தையும் வணங்கி ஆசாரியரைப் போற்றி வேண்டி நோன்பு பெறுதல் வேண்டும். உத்தரநாளில், உண்பன, தின்பன, பருகுவன, நக்குவனவாகிய எல்லாவகையான உணவுகளையும் நீக்கி நோன்பியற்றல் வேண்டும். அந்தத் திங்களில் இந்த நோன்பிற்குப் பஞ்சகல்யாணம் என்ற பெயர். இந்த ஒருநாள் நோன்பைக் கடைப்பிடித்தலால் எண்ணாயிரம்

நோன்பின் பயனுண்டாகும். இப்படியே சித்திரை முதலிய திங்கள்தோறும் நோன்பிருத்தல் வேண்டும். பங்குனிமாதம் முதல் மூன்று ஆண்டும் மூன்று திங்களும் இடைவிடாமல்நோற்க வேண்டும். இவ்வாறு திங்ளெல்லாம்கூட முப்பத்தொன்பது நோன்பாகும்''[87] என இந்நோன்பு முறைகள் விளக்கப்பட்டுள்ளன. நோன்பியற்றும்போது குறைநேர்ந்தால், மகளிர் தாய், தந்தை, கணவன், அண்ணன், தம்பி இவர்களுள் ஒருவரிடம் கழுவாய் செய்திடல் வேண்டும் என்ற கருத்தும் உள்ளது. ''ஆதியில் இந்த நோன்பு ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் சமவசரணத்தில் கௌதம கணதரரால், ஒத்தாயண மகாராசனது மனையாளான இந்திராணி என்பவளுக்கு இயம்பியருளப் பெற்றது. இல்லறத்தார்கள் தீவினையைப் போக்கிக் கொள்ளுதற்கு இது தக்க வழியாகும். துறக்க வீடுகட்கும் காரணமாம். இதனை நோற்று விரும்பியவற்றைப் பெற்றவர்கள் இந்திராணி, ஸ்வயம்பிரபை, குந்தி, சீதாதேவி, முதலியவர் என்ப.''[88] என்ற உரையாசிரியர்கள் கருத்திலிருந்து இந்நோன்பினால் பயன்பெற்ற மகளிர் குறித்து அறிந்திட முடிகிறது. கன்னிப் பருவ மகளிர் இந்நோன்பியற்றி நற்குணமும் வலிமையும் மிக்க ஆடவரை வாழ்க்கைத் துணையாகப் பெற்றமையை இவ்விளக்கத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

### 4.6. கைம்மை நோன்பு

கணவன் இறப்பிற்குப் பிந்தைய மகளிர் வாழ்வியல் ஒழுக்கங்களுள் ஒன்றாகத் தொல்காப்பியர் காஞ்சித் திணைத்துறை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்.

**''காதல நிழந்த தாபத நிலை''**[89]

மகளிரின் கைம்மை நோன்பு குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் உள்ளன. கைம்மை நோன்பியற்றிய மகளிர், தம் கூந்தலைக் களைந்து வாழ்ந்தமையை,

**“கண்ணீர்த் தடுத்தி தண்ணறும் பந்தர்க்**

**கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி”[90]**

**“முலை பொலியாக முருப்ப நாறி**

**மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்**

**ஒண்ணுதல் மகளிர் கைம்மைகூர**

**குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே”[91]**

எனும் புறநானூற்றுப் பாடல்கள் உணர்த்தும் கருத்துகளிலிருந்து அறிந்து கொள்ளமுடிகிறது. தலையில் மயிரற்ற மகளிரின் தோற்றத்தை,

**“வெல்வேல் விடலை யின்மையிற் புலம்பிக்**

**கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய**

**கழிகல மகடூஉப் போல”[92]**

என்ற பாடலடிகள் வாயிலாகவும் அறியமுடிகிறது. பொழுது மறுத்து உணவு உண்ணல், குறித்தும், அவர்தம் உணவு முறைகள் குறித்தும்,

**“பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்**

**தின்னா வைகல் உண்ணும்**

**அல்லிப் படூஉம் புல்லாயினவே”[93]**

**“வெள்எள் சாந்தொடு புளிபெய் தட்ட**

**வேளை வெந்தை வல்சி யாக”[94]**

**“தொன்றுதாம் உடுத்த அம்பகைத் தெரியல்**

**சிறுவெள் ஆம்பல் அல்லி உண்ணும்”[95]**

எனும் புறப்பாடற் கருத்துகள் விளக்கியுள்ளன.

அன்றைய சமூகத்தில் வழக்கில் இருந்த இத்தகைய கைம்மை ஒழுக்கத்தின் கொடுமை காரணமாகவே மகளிர் பலர் கணவன் இறப்பிற்குப் பின்னர்த் தம்முயிரை மாய்த்துக் கொண்டுள்ளனர். இதனை இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் கூற்றிலிருந்து அறியமுடிகிறது. “சாவிற்

சாதல் என்பது, அன்பினானே நிகழ்வது அன்று. பிணியுடையாளாய் வாழ்க்கையை முனிந்து செல்வாள் இது தலைக்கீடாகச் சாவல் என்று சாவவும் பெறும், இனிக் கண்டீரன்றே குடுமிக் கூந்தலில் நறுநெய் பெய்து கொண்டோனிற் பின்றையும் இருந்து சோறு தின்று வாழ்கின்றாள், ஓகொடியிளே! காண் என்று நித்தம் பழிதூற்றப்பட்டிருந்து, பின்னும் ஒருநாட்சாவல் அதனால் இன்றே சாவல் எனச் சாவவும் பெறும்''[96] எனக் கைம்மை நோன்பின் கொடுமையை நக்கீரர் தம் களவியல் உரையில் எடுத்துரைத்துள்ளார்

கைம்மை ஒழுக்கத்தின் கொடுமையையும், இத்தகைய நோன்பு முறைகளைச் சமணசமயம் ஏற்றுக் கொள்ளவில்லை. கணவன் இறப்பிற்குப் பின்னர் இவ்வாறு கைம்மை நோன்பு முறைகள் மேற்கொண்ட மகளிர் குறித்துச் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது. கதையின் எதிர்நிலைத் தலைவனான அச்சுவக்கண்டனின் மனைவியர் செயலாக இக்கைம்மை நோன்பு குறித்துக் குறிப்பிடுவதிலிருந்து தோலாமொழித் தேவரின் சமயக் கொள்கையை அறிந்து கொள்ளமுடிகிறது.

இருப்பினும் அச்சுவகண்டனின் மனைவியர் சிலர் இவ்வாறு உயிர் துறக்காமல் தாபத நிலையை அடைந்தமையை,

**'ஆவி யாய வயக்கிரீவற் கமிர்தம் பூத்த வஞ்சாயற்**
**றேவி மார்கள் கலனழித்துச் சேணி யுலகம் சென்றெய்தி**
**வீவில் காமன் வரவீதி கற்பு வேலி யால்விலக்கித்**
**தாவி நிறையின் றாழதனாற் பொறியின் வாயி றாழ்ப்பெய்தார்''**[97]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது. கணவன் இறப்பிற்குப் பிந்தைய மகளிரின் கைம்மை ஒழுக்கம் இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. மங்கல அணிகலன்களைத் துறந்து, தனியே ஓரிடத்தை அடைந்து, காமவுணர்வைக் கற்பாகிய வேலியால் தடைசெய்து, நிறையின் செறிவால் ஐம்புலன்களின்

இச்சைகளுக்கும் தாழிட்டுக் கணவனை இழந்த மகளிர் வாழ்ந்தமையை இப்பாடல் கருத்து புலப்படுத்துகிறது.

### 4.7. பஞ்சமி நோன்பு

இல்வாழ்க்கை மேற்கொண்டொழுகும் சாகவர்க்குரிய பஞ்சமி நோன்பு பற்றி நாககுமார காவியம் குறிப்பிட்டுள்ளது. இந்நோன்பைத் தன் கணவனுடன் சேர்ந்து மகளிரும் மேற்கொள்ளலாம் என்பதை இக்காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. நாககுமாரனுக்குப் பிஹிதாஸ்வரர் என்ற திகம்பர முனிவர் பஞ்சமி நோன்பின் சிறப்பினைக் குறிப்பிடுகிறார். நாகதத்தன் என்ற வணிகனின் மகனாக இருந்தபோது நாகவசு என்பவளை மணந்து பஞ்சமி நோன்பினை மேற்கொண்ட வரலாற்றினை முனிவர் நாககுமாரனுக்கு விளக்குகிறார்.

**“நாகதத் தன்சென் றந்த நன்முனி சரணடைந்து**
**வாகுநற் றருமங் கேட்டு அனசன நோன்பு கொண்டான்**
**போகபுண் ணியங்க ளாக்கும் பூரண பஞ்ச மீயில்**
**ஏகனற் றினத்தி னன்று யிடர்பசி யாயிற் றன்றே”**[98]

சமணமுனிவரின் அறங்கேட்டு பஞ்சமி நோன்பு நோற்ற நாககுமாரனுடன் அவன் மனைவி நாகவசு நோன்பியற்றியதை,

**“தருமநற் றியானந் தன்னாற் றன்னுடை மேனிவிட்டு**
**மருவினா னசோத மத்தின் வானவ னாகித் தோன்றி**
**வருகயல் வழியாள் நாகவசுவும்வந் தமர னுக்கு**
**மருகிய தேவியாகி மயலுற கின்ற வன்றே”**[99]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. ‘அனசனம்’ என்ற உண்ணாவிரத நோன்பினை கணவன் மேற்கொண்டவிடத்து மனைவியும் அவ்வாறே நோன்பு இயற்றுவதை இதன்வழி அறியமுடிகிறது.

மறுபிறப்பில் நாககுமாரன் தன் மனைவி இலக்கணையுடன் இணைந்து இந்நோன்பினை மேற்கொள்கிறான். பஞ்சமிநோன்பு முறை குறித்த விளக்கமும் நாககுமார காவியத்தில் இடம்பெற்றுள்ளது. ‘கார்த்திகை, பங்குனி, ஆடி மாதங்களில் வரும் இந்நோன்பு, இதற்கு முந்திய நான்கு நாட்களிலும் ஒரு வேளை உணவு மட்டும் உண்டு, ஐந்தாம் நாளில் உண்ணா நோன்பு மேற்கொண்டு ஐந்தாண்டிற்குத் தொடர்ந்து மாதந்தோறும் வரும் பஞ்சமி திதியில் இந்நோன்பினை நோற்க வேண்டும் என்பதை,

**“திங்கட் கார்த்திகையி லாதற் சேர்ந்தபங் குனியி லாதர்**
**பொங்கன லாடி யாதற் பூரண பக்கந் தன்னில்**
**அங்குறு பஞ்சமியி னனசன நோன்பு கொண்டு**
**தங்குமாண் டைந்து நோற்றான் றானைந்து திங்க ளன்றே”**[100]

என்ற பாடல் வாயிலாக அறிய முடிகிறது. இவ்வாறு நோன்பியற்றினால் இந்திரபதவி பெற்று மறுபிறவியில் ஆடவர் பேரரசராகவும், மகளிர் பேரரசியாகவும் திகழ்வர் என்பதை,

**“இந்தநற் கிரமந் தன்னி லினிமையி னோன்பு நோற்று**
**அந்தமி லருகர் பூசை யருண்முனி தானஞ் செய்தால்**
**இந்திர பதமும் பெற்று இலக்குவந் தரச ராகிப்**
**பயந்ததீ வினையை வென்று பஞ்சம கதியு மாமே”**[101]

எனும் பாடற்கருத்து விளக்குகிறது. முற்பிறவியில் நாகவசு இந்நோன்பை மேற்கொண்டமையாலே மறுபிறப்பில் அவள் ‘இலக்கணை’ எனும் அரசியாகப் பிறப்பெய்தினாள் என்பதையும், நாககுமாரன் மணந்த மனைவியருள், அவன் அன்பினைப் பெற்றவளாக இலக்குமி மட்டுமே திகழ்ந்தாள் என்பதையும் காப்பிய ஆசிரியர்,

**“ஏற்றவறங் கேட்டுட னிருந்தலக் கணையின்மேல்**

**ஏற்றமோக மென்ன னியன்முனி யுரைப்பரே"**[102]

என்ற பாடலடிகளில் குறிப்பிட்டுள்ளார்.

நாகபஞ்சமி நோன்பு என்பதும் சல்லேகனை நோன்பு என்பதும் வேறு வேறு நோன்புகளாகும். நாகபஞ்சமி நோன்பினை நோற்ற பின்பு நாககுமாரனும் இலக்கணையும் மீண்டும் அரண்மனைக்குத் திரும்புகின்றனர்.

## 4.7. தொகுப்புரை

மானுட உடம்பின் நிலையற்ற தன்மையைக் குறித்துச் சமணசமயம் எடுத்துரைத்துள்ளது. இதனை உணர்ந்த சமணசமயச் சான்றோர் தம் படைப்புகளில் உலக வாழ்வின் நிலையற்ற தன்மையை எடுத்துரைத்து, மறுபிறவிக்கான நல்வினைகளை மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தினை அறிவுறுத்தியுள்ளனர்.

உலக வாழ்க்கை மேற்கொண்டு வாழ்கின்ற சாவகர்கள் உற்ற காலத்தில் நோன்பியற்றி உயிர்துறத்தல் நன்று என்பதைச் சமண சமயத்தின் அனைத்துப் பிரிவுகளும் குறிப்பிட்டுள்ளன.

மகளிர்க்குச் சமகாலப் பிறவியில் வீடுபேறு இல்லை என்பது திகம்பர சமணசமயத்தார் கொள்கையாகும். ஆனால் சமணசமயத்தின் பிரிவுகளில் சில இக்கருத்தை ஏற்கவில்லை.

பெண்பிறவி மிகுந்த துன்பம் உடையதென்பதும் சமணக் கொள்கையாகும். பெண்பிறவியை ஒழித்து வீடு பேறு அடைந்திட இயலும் என்ற சமணக் கொள்கைக் கேற்ப சூளாமணியில் சுயம்பிரபையின் பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

ஐஞ்சிறு காப்பியத்தில் துறவறம் பூண்டு சமயக் கொள்கைகளைப் பரப்பிய மகளிராக நீலகேசியையும் குண்டலகேசியையும் திகழ்கின்றனர்.

நீலகேசியைச் சமணசமயக் கொள்கை விளக்கப் பாத்திரமாக நீலகேசிக் காப்பிய ஆசிரியர் படைத்துள்ளார்.

நீலகேசிக் காப்பயித்தில் இடம்பெற்றுள்ள குண்டலகேசி வாயிலாகப் புத்தசமயக் கொள்கைகள் சிலவற்றை அறியமுடிகிறது.

பேயுருவில் காப்பியத்தில் அறிமுகமாகும் நீலகேசி சமணமுனிவரின் அறங்கேட்டு மனம் மாறிச் சமணசமயத்தை ஏற்கிறாள். பிற சமயவாதிகளிடம் சென்று அவர்தம் கொள்கைகளை மறுத்துரைத்துச் சமணத்தின்

மேன்மையை அவர்களுக்கு விளக்கும் வகையில் நீலகேசியின் செயல் அமைந்துள்ளது.

நீலகேசி பிறசமயத்தாருடன் வாதிடும் கருத்துகள் வாயிலாக மகளிர் குறித்த பல்வேறு செய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது. கைம்மை மகளிரைக் கூடுதல் மிகப்பெரிய தீவினை என்பதை நீலகேசி எடுத்துரைத்துள்ளாள். பெண்மையின் இயல்புகள் சிலவற்றையும் நீலகேசியின் கூற்றிலிருந்து அறியமுடிகிறது.

காமம் கொண்ட ஆண் துறவியர், பெண்துறவியரைப் புணரலாம் என்ற பௌத்தக் கருத்தினை நீலகேசி சாடுகிறாள். புத்தனின் வாழ்வியல் குறித்த கதைகளையும் நீலகேசியின் வாதத்திலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

பௌத்தக் கொள்கைகளை எடுத்துக் கூறி நீலகேசியுடன் வாதம் செய்து தோற்ற பெண்ணாகக் குண்டலகேசி, நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளாள். 'தற்கொல்லியை முற்கொன்ற குண்டலகேசி வரலாறு' நீலகேசிக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

சல்லேகனை என்ற உண்ணா நோன்பு குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. இந்நோன்பியற்றி உலக வாழ்வைத் துறத்தல் என்பது ஆடவர், மகளிர் ஆகிய இருதிறத்தார்க்கும் பொதுவானதாகும். அவ்வாறே இந்நோன்பு இல்லறத்தார்களுக்கும் துறவிகளுக்கும் பொதுவானதாகும். சல்லேகனை நோன்பு அனசனத்தவம் என்ற பெயரிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அரசகுல மகளிர் தம் கணவரைப் பின்பற்றிச் சல்லேகனை நோன்பியற்றி வீடுபேறு அடைந்தமையை ஐஞ்சிறு காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன. இக்காப்பியங்களில் இடம்பெற்றுள்ள பயாபதி மன்னனின் மனைவியர், உதயணகுமார மன்னனின் மனைவியர், சயந்தர மன்னனின் மனைவியும் நாககுமாரனின் தாயுமான பிரிதிதேவி,

நாககுமாரனின் மனைவியர் ஆகியோர் சல்லேகனை நோன்பியற்றி வீடுபேறு அடைகின்றனர்.

சக்ரவாள நோன்பின் சிறப்பினை சூளாமணிக் காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. மகளிர் இந்நோன்பினை மேற்கொள்ள வேண்டிய முறைமைகள் குறித்து இக்காப்பியம் விளக்கியுள்ளது.

கணவன் இறந்த பின்னர் கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழ்ந்த அச்சுவக்கண்டனின் மனைவியர் குறித்து சூளாமணிக் காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இத்தகைய கைம்மை ஒழுக்கத்தைச் சமணசமயம் ஏற்கவில்லை. எனவே இந்நோன்பினைக் காப்பியத்தின் எதிர்நிலைப் பாத்திரங்களில் ஏற்றித் தோலாமொழித்தேவர் குறிப்பிட்டுள்ளார்.

கணவனுடன் இணைந்து மகளிர் நோற்கும் பஞ்சமி நோன்பு குறித்த செய்திகளை நாககுமார காவியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இந்நோன்பினால் மறுபிறவியில் நற்பிறப்பு அடையலாம் என்ற கருத்தைக் காப்பிய ஆசிரியர் விளக்கியுள்ளார்.

# சான்றெண் விளக்கம்

1. சிறுபஞ்சமூலம், பா. 4.
2. சிலப்பதிகாரம், 30:199-202.
3. ஆசார்ய சுவாமி சமந்தபத்ரர், இரத்தினகரண்டக சிராவகாசாரம், பக்.439-440.
4. அருங்கலச்செப்பு,
5. நாலடியார், பா. 29.
6. இளம்பூரணர், (உ.ஆ,), தொல். எழுத்ததிகாரம், ப.12.
7. நீலகேசி, பா.73.
8. மேலது, பா.313
9. சூளாமணி,பா.1040.
10. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், வள்ளுவரும் மகளிரும், பக்.167-168.
11. சிலப்பதிகாரம்,10:98-100.
12. நீலகேசி, பா.58
13. மேலது, பா.59.
14. மேலது, பா.60:3-4.
15. மேலது, பா.63.
16. மேலது, பா. 133.
17. *மேலது, பா.4.*
18. *சமயதிவாகர வாமன முனிவர், (உ.ஆ.), நீலகேசி, ப.23.*
19. *மேலது, பக்.480-481.*
20. *சரளா இராசகோபலன், சமயம் வளர்த்த மகளிர், ப.108.*
21. *நீலகேசி, பா.148.*
22. *மேலது, பா.332:3-4.*
23. *சமய திவாகர வாமன முனிவர், (உ.ஆ.), மு.நூ. ப.129.*
24. *மேலது, பா.707.*

25. மேலது, பா.708:3-4.
26. நீலகேசி, பா.191:1-3.
27. மேலது, 230:2-3.
28. மேலது, பா.322.
29. மேலது, பா.244
30. மேலது, பா.245.
31. மேலது, பா.190:1.
32. மேலது, பா.192:1.
33. மேலது, பா223.
34. மேலது, பா.205:1-2.
35. மேலது, பா.286:4.
36. மேலது, பா.398:4.
37. மேலது, பா.289:4.
38. மேலது, பா.472:1
39. மேலது, பா.653:1-2
40. மேலது, பா.469:4.
41. மேலது, பா.263:3-4.
42. மேலது, பா.286:1-3.
43. சமய திவாகர வாமன முனிவர், (உ.ஆ.), மு.நூ. பக்.103-104.
44. குண்டலகேசி, பா.7
45. நீலகேசி, பா.192:2.
46. மேலது, பா.76.
47. மேலது, பா.177.
48. மேலது, பா.323.
49. சமய திவாகர வாமன முனிவர், (உ.ஆ.), மு.நூ. ப.123.

50. ஸ்ரீமத் அமிருத சந்திரசூரி ஆசாரியார், புருஷார்த்த ஸித்த் உபாயம், ப.208.
51. ராகுல் சாங்கிருத்யாயன், பௌத்தத் தத்துவ இயல், ப.122.
52. அருங்கலச்செப்பு, பா.145.
53. மேலது, பா.150.
54. பூஜ்ய ஸ்ரீ ஆர்ஜவஸாகர் முனிவர், சமாதி மரணப் பெருவிழா, ப.16.
55. மேலது, பக்.28-29.
56. சிலப்பதிகாரம், 27:79-83.
57. சீவகசிந்தாமணி. பா.325.
58. மேருமந்திரபுராணம், பா. 423.
59. மேலது, பா. 424.
60. வீடுர் கு.அப்பாசாமி சாஸ்த்திரியார், (உ.ஆ.) சூளாமணி, ப.195.
61. தென்னிந்திய கல்வெட்டுக்கள், தொகுதி 17, எண்.262.
62. நீலகேசி, பா.321.
63. மேலது, பா.350.
64. சூளாமணி. பா.1848.
65. மேலது, பா.2025.
66. மேருமந்திரபுராணம், பா.138:3-4.
67. மேலது, பா.140:1-2.
68. மேலது, பா.740.
69. உதயணகுமார காவியம், பா.354:1.
70. மேலது, பா.357.
71. மேலது, பா.362.
72. மேலது, பா.367.
73. மேலது, பா.367.
74. மேலது. பா.158.

75. மேலது பா.163:3-4.

76. நாககுமார காவியம், பா.164:1-2.

77. யசோதர காவியம், பா.49.

78. மேலது, பா.50.

79. மேலது, பா.325.

80. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.186.

81. பொ.வே.சோமசந்தரனனார், சு.அ. இராமசாமிப் புலவர், (உ.ஆ.) சூளாமணி, (முதற்பாகம்), ப.167.

82. சூளாமணி, பா.209.

83. மேலது, பா.210.

84. மேலது, பா.211.

85. பொ.வே.சோமசுந்தரனார், சு.அ. இராமசாமிப் புலவர், (உ.ஆ.), மு.நூ. ப.165.

86. சூளாமணி, பா.212.

87. பொ.வே.சோமசந்தரனனார், சு.அ. இராமசாமிப் புலவர், (உ.ஆ.), மு.நூ. ப.166.

88. மேலது, ப.168.

89. தொல். பொருள், நூ.79:29.

90. புறநானூறு, 250:3-4

91. மேலது, 240:4-10.

92. மேலது, 261:15-17.

93. மேலது,248:3-5.

94. மேலது, 246:7-8.

95. மேலது, 234:12-13.

96. நக்கீரர், (உ.ஆ.), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப.15.

97. சூளாமணி பா.1485.

98. நாககுமார காவியம், பா.148.

99. மேலது, 149.

# முடிவுரை

**"ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்"** எனும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வில் இயல்தோறும் கண்டறிப்பட்ட முடிபுகள் முடிவுரையாகத் தொகுத்துத்தரப்படுகின்றன.

இந்தியத் தொன்மைச் சமயங்களுள் ஒன்றான சமணசமயம் பற்றிய குறிப்பு வேதங்களில் இடம்பெற்றுள்ளது. சமணசயக் கொள்கை கோட்பாடுகளைத் தீர்த்தங்கரர்களின் வாழ்வியலிலிருந்தும் சமண ஆகமங்களிலிருந்தும் அறியமுடிகிறது. தீர்த்தங்கரர்கள் உரைத்த அறங்களின் மீது பற்றுக் கொண்டவர்கள் **'ஜீனர்'** எனப்பட்டனர். தமிழில் இதனைச் சமணர் எனக் குறிப்பிட்டனர். தொடக்கத்தில் ஒன்றாக இருந்த சமணசமயம் பிற்காலத்தில் சில பிரிவுகளைக் கொண்டு இயங்கியது. இருப்பினும் அடிப்படைக் கொள்கைகளில் இச்சமயத்தினர் ஒத்த கருத்துடையவர்களாக இருந்தனர்.

இல்லறத்தார்க்கும் துறவிகளுக்கும் தனித்தனியே வாழ்வியல், வழிபாட்டு முறைகளைச் சமணம் வகுத்துள்ளது. சமண சமய இல்லறத்தார் 'சாவகர்கள்' எனப்பட்டனர். நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகியன இல்லறத்தார்க்குரிய 'மும்மணிகள்' எனச் சமணசமயம் குறிப்பிடுகிறது. இல்லறத்தார்க்குரிய அணுவிரதங்கள், குணவிரதங்கள் குறித்துச் சமண ஆகமங்கள் குறிப்பிட்டுள்ளன. இவை ஆடவர், பெண்டிர் ஆகிய இருதிறத்தார்க்கும் பொதுவானதாகும்.

தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே சமணசமயம் சிறப்புற்று இருந்துள்ளது. சங்க இலக்கியப்பாடல்கள் சிலவற்றிலும் சமணசமயம் குறித்தறியமுடிகிறது. பதினெண்கீழ்க்கணக்கு நீதி நூல்களில் சமணசமயம் மனிதர்களுக்கு வலியுறுத்திய வாழ்வியல் அறங்கள் பல இடம்பெற்றுள்ளன. தமிழ் இலக்கண வளர்ச்சிக்கும் சமணர்கள்

அரும்பணியாற்றியுள்ளனர். திகம்பர சமண சமயம் தமிழகத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்தமையை அவர்தம் படைப்புகள் புலப்படுத்துகின்றன. மகளிரின் வீடுபேறு குறித்த இருவேறு கொள்கைகள் சமணசமயத்தில் உள்ளன.

இல்வாழ்க்கை மகளிர்க்குரிய வாழ்வியல் முறைகளும், தீட்டுக் காலங்களும், வழிபாட்டு முறைகளும் சமண ஆகமங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

பெண்களும் துறவு வாழ்க்கை மேற்கொள்வதைச் சமணம் ஏற்றுக் கொள்கிறது. சமணசமயப் பெண்பாற் துறவிகள் 'ஆர்யியைகள்' எனப்பட்டனர். இவர்களைத் தெய்வங்காளகக் கருதிப் போற்றி வழிபட்டமை பிற்காலத் தமிழர்களின் செயலாகும்.

இல்லற வாழ்வில், கணவன் இறப்பிற்குப் பின்னரோ, குறிப்பிட்ட வயதிற்குப் பின்னரோ மகளிர் துறவு வாழ்க்கை மேற்கொள்வதைச் சமணம் ஏற்கிறது.

தமிழ்க்காப்பிய வகைமைகளுள், அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களில் குறைவு உடையதைச் சிறுகாப்பியம் என்ற பெயரில் வழங்கினர். தமிழில் தோன்றிய ஐஞ்சிறு காப்பியங்கள் வடமொழிப் புராணங்களைத் தழுவி இயற்றப்பட்டவையாகும்.

சூளாமணியில் மன்னர்களின் தாய்மார், மனைவியர், மகள்கள், அரசியர் மற்றும் இளவரசியரின் தோழியர், வானவ மகளிர் ஆகியோர் மகளிர் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர்.

நீலகேசி, பௌத்தக் காப்பியமான குண்டலகேசிக் காப்பியத்திற்கு எதிராக எழுந்த சமண சமயத் தருக்க நூலாகும். யசோதர காவியத்தில் அபயமதி, சந்திரமதி, அமிர்தமதி, குணவதி, புட்பாவலி, ஆகிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள அமிர்தமதியைத் தீய ஒழுக்கம் நிறைந்த பெண்ணாகக் காப்பிய ஆசிரியர் படைத்து மகளிர் இயல்புகளை விளக்கியுள்ளார்.

உதயணகுமார காவியத்தில் அறம் கற்பிக்கும் மகளிர், குறிகூறும் மகளிர் குறித்தும், பரத்தையர், நாடக மகளிர் பற்றியும் அறியமுடிகிறது.

ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக எண்ணிக்கையில் மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்ற காப்பியமாக நாககுமார காவியம் திகழ்கிறது ஆடவன் ஒருவன் அதிக எண்ணிக்கையில் பெண்களை மணம் புரிந்தமையை நாககுமார காவியத்தின் வழி அறியமுடிகிறது.

ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களின் பெயர்கள் வடமொழிப் பெயர்களாகவே உள்ளன.

கணவனும் மனைவியுமாகக் கூடி வாழும் இல்லறத்தைச் சமணசமயம் ஏற்கிறது. இல்வாழ்க்கை மேற்கொண்டு வாழும் ஆடவரும் மகளிரும் ‘சாவகர்’ எனப்பட்டனர். இல்வாழ்வில் நன்மக்களைப் பெறுதலை நீலகேசி ஆசிரியர் போற்றியுள்ளார். இல்லற மகளிரை இக்காப்பிய ஆசிரியர் பத்தினிப் பெண்டிர் எனக் குறிப்பிடுகிறார்.

ஆடவன் முற்பிறவியல் செய்த நல்வினைக்கேற்பவே அவர்க்கு தாய், மனைவி ஆகியோர் அமைவர் என்ற கருத்து யசோதர காவியத்தில் இடம்பெற்றுள்ளது.

மகளிர் திருமண முறைகள் குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. அரசகுல மகளிர், திருமணத்தில் பல்வேறு சீதனங்களை அளிக்கும் மரபு பண்டைக் காலத்தில் இருந்துள்ளது.

கருவுற்ற மகளிர் ஆசையை நிறைவேற்றும் வழக்கத்தையும் பெண்குழந்தைக்குச் சாதகக் குறிப்பெழுதும் வழக்கத்தையும் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

இல்லற வாழ்வில் தாய்மார் பண்புகள், குழந்தைப்பேறற்ற மகளிர் நிலை, மாமியார்-மருமகளின் அன்பு நிறைந்த இல்வாழ்க்கை முறை ஆகியன குறித்தும் ஐஞ்சிறு காப்பியங்கள் குறிப்பிட்டுள்ளன.

கணவனை விடுத்துப் பிற ஆடவரை விரும்பிப் புணர்தல், கொலைசெய்தல் ஆகிய பிறழ்நடத்தை கொண்ட பெண்ணொருத்தியின் செயல்களை யசோதர காவியம் விளக்கியுள்ளது. இத்தகைய தீய ஒழுக்கம் கொண்ட மகளிர் அடையும் நரகத் துன்பங்கள் இக்காப்பியத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

இல்வாழ் மகளிரின் அருகக்கடவுள் வழிபாடு குறித்தும், பிற தெய்வ வழிபாடு, விளையாடல்கள், அணிகலன்கள், ஒப்பனை முறைகள் ஆகியன குறித்து ஐஞ்சிறு காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன.

அரண்மனைக் காவல், தூதுவர்க்குப் பணிவிடை செய்தல், ஓவியம் வரைதல் ஆகிய பணிகளை மகளிர் ஆற்றியுள்ளனர் கணவன் இறப்பிற்குப் பின்னர் உயிர்துறக்கும் மகளிர் செயலைச் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

உடலின் நிலையாமையை எடுத்துரைத்து, உற்ற காலத்தில் நோன்பியற்றி உயிர்துறத்தல் நன்று என்பதைச் சமண சமயத்தின் அனைத்துப் பிரிவுகளும் குறிப்பிட்டுள்ளன.

மகளிர்க்குச் சமகாலப் பிறவியில் வீடுபேறு இல்லை என்பது திகம்பர சமணசமயத்தார் கொள்கையாகும். ஆனால் சமணசமயத்தின் பிரிவுகளில் சில இக்கருத்தை ஏற்கவில்லை.

துன்பமிக்க பெண்பிறவியை ஒழிப்பதற்கு ஆற்ற வேண்டிய நோன்புகள் குறித்துச் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது. ஐஞ்சிறு காப்பியத்தில் துறவறம் பூண்டு சமயக் கொள்கைகளைப் பரப்பிய மகளிராக நீலகேசியும் குண்டலகேசியும் இடம்பெற்றுள்ளனர்.

சல்லேகனை என்ற உண்ணா நோன்பு குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. அரசகுல மகளிர் தம் கணவரைப் பின்பற்றிச் சல்லேகனை நோன்பியற்றி வீடுபேறு அடைந்தமையை ஐஞ்சிறு காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன. சக்ரவாள நோன்பின் சிறப்பினைச்

சூளாமணிக் காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. மகளிர் இந்நோன்பினை மேற்கொள்ள வேண்டிய முறைமைகள் குறித்து இக்காப்பியம் விளக்கியுள்ளது.

மகளிரின் கைம்மை ஒழுக்கத்தைச் சமணசமயம் ஏற்கவில்லை. சமணசமயம் சார்ந்த மகளிர் இவ்வொழுக்கம் மேற்கொண்டமை குறித்த பதிவுகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இல்லை.

கணவனுடன் இணைந்து மகளிர் நோற்கும் பஞ்சமி நோன்பு குறித்த செய்திகளை நாககுமார காவியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இந்நோன்பினால் மறுபிறவியில் நற்பிறப்பு அடையலாம் என்ற கருத்தைக் காப்பிய ஆசிரியர் விளக்கியுள்ளார்.

ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள பெரும்பான்மையான மகளிர் பாத்திரங்கள் சமண வழிபாட்டு முறைகளைப் பின்பற்றியவர்களாகப் படைக்கப்பட்டுள்ளன. 'சல்லேகனை' நோன்பு சமணசமயத்தார் ஒழுக்கங்களில் முதன்மையான ஒன்றாகும். ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள பயாபதி மன்னனின் மனைவியர், உதயணகுமார மன்னனின் மனைவியர், சயந்தர மன்னனின் மனைவியும் நாககுமாரனின் தாயுமான பிரிதிதேவி, நாககுமாரனின் மனைவியர் ஆகியோர் 'சல்லேகனை' நோன்பியற்றி வீடுபேறு அடைகின்றனர். இம்மகளிர் சமணசமயக் கொள்கைகளுக்கும் ஒழுக்க நெறிகளுக்கும் உட்பட்டவர்களாக விளங்கியுள்ளனர். காப்பியத்தின் துணைமைப் பாத்திரங்கள் வாயிலாகவும் சமணக் கொள்கைகள் விளக்கப்பட்டுள்ளன.

**மேலாய்வுக் களங்கள்**

இவ்வாய்வின் தொடர்ச்சியாகப் பின்வரும் தலைப்புகளில் எதிர்கால ஆய்வுகள் அமையலாம்.

1. ஐஞ்சிறு காப்பியங்களில் சமணக் கொள்கைகள்
2. ஐஞ்சிறு காப்பியங்கள் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள்
3. சமயதிவாகர முனிவரின் காப்பிய உரைத்திறன்
4. ஐஞ்சிறு காப்பியத்தில் இயற்கைப் புனைவுகள்
5. ஐஞ்சிறு காப்பியங்களில் சமயப் போராட்டங்கள்

# துணைநூற்பட்டியல்

அடைக்கலசாமி, எம்.ஆர்., **இலக்கியவரலாறு,** பால்நிலா பதிப்பகம், லயோலா நகர், சென்னை -24 ஐந்தாம் பதிப்பு. 1963.

அறவாணன், க.ப., **சமணம் வளர்த்த தமிழ் இலக்கணம்** சமணாலயம், 11. இரண்டாம் குறுக்குத் தெரு, மோகன் நகர், புதுச்சேரி 605 005. முதற்பதிப்பு, செப்டம்பர் 1974.

அனந்தராமையர், இ.வை.,(ப.ஆ.) **கலித்தொகை,** தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

ஆதிநாதனார், சிவ.,(மொ.ஆ.) **ஜைன தத்துவம்,** கு.பானுகுமரன் -சாந்தி குடும்பத்தினர், முதலூர், வந்தவாசி.

இராகவையங்கார், (உ.ஆ.) **குறுந்தொகை,** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், முதற்பதிப்பு, 1993.

இளம்பூரணர், (உ.ஆ.) **தொல்காப்பியம்,** எழுத்ததிகாரம், கழகம், மறுபதிப்பு, 1967

இளம்பூரணர், (உ.ஆ.) **தொல்காப்பியம்,** பொருளதிகாரம், கழகம், மறுபதிப்பு, 1969.

இளவழகனார்,(உ.ஆ.) **ஏலாதி,** கழகம் 1970.

ஔவை துரைசாமிப் பிள்ளை, சு., **யசோதர காவியம்,** கழகம், மறுபதிப்பு, 1963.

கலியாணசுந்தரனார், திரு.வி., **திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள்,**
சாது அச்சக் கூடம்,
இராயப்பேட்டை,
சென்னை
முதற்பதிப்பு *1944.*

சக்ரவர்த்தி, யு.இ(ப.ஆ.) **நீலகேசி,**
***1936.***

சந்தானம், ஏ.இ (உ.ஆ.) **நாககுமார காவியம்,**
நந்தனார் பதிப்பகம்,
சிதம்பரம்.

சரோஜினி, **கற்பு அன்று முதல் இன்று வரை,**
அரசி பதிப்பகம்,
*18,* திருமலைசாமிபுரம்,
திண்டுக்கல் - *624 3,*
முதற்பதிப்பு, *1995.*

சரளா இராசகோபாலன், **சமயம் வளர்த்த மகளிர்,**
ஒளிப்பதிப்பகம்,
சென்னை *600 018,*
முதற்பதிப்பு, *2000.*

சரளா இராசகோபாலன், **சமயம் வளர்த்த மகளிர்,**
ஒளிப்பதிப்பகம்,
சென்னை *600 018,*
முதற்பதிப்பு, *1995*

சாந்தலிங்கம், சொ., **மதுரையில் சமணம்,**
கருத்து – பட்டறை,
*2*-முதல் தளம்,
மிதேசு வாளகம்,-
*4*-வது நிறுத்தம்,
திருநகர்,
மதுரை *6*
முதற்பதிப்பு *2014.*

சாமிநாதையர், உ.வே.(உ.ஆ.) **புறநானூறு,**
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,
நிழற்படப் பதிப்பு-*1985.*

சிம்மசந்திர ஜைன் சாஸ்திரி, யு.(ப.ஆ.) **சமணர் வழிபாட்டு முறை –பாகம்1,**
சம்யக்ஞான பிரசார சங்கம்,
*1.*∴*8.* முதல் குறுக்குத் தெரு,
கேசரி நகர்,
ஆதம்பாக்கம்,
சென்னை *600 088.*
முதற்பதிப்பு, *2014.*

சிம்மசந்திர ஜைன் சாஸ்திரி, யு.இ(மொ.ஆ.) **இரத்தின கரண்டக சிராவகாசாரம்,**
சம்யக்ஞான பிரசார சங்கம்,
1.'.8. முதல் குறுக்குத் தெரு,
கேசரி நகர்,
ஆதம்பாக்கம்,
சென்னை 600 088.
முதற்பதிப்பு, 2018.

சிம்மசந்திர ஜைன் சாஸ்திரி, யு.இ (மொ.ஆ.) **பரம திகம்பர ஜைன முனிவர்,**
ஸ்ரீ சம்யக்ஞான திகம்பர
விராக் வித்யாபீடம்,
10. ஈஸ்வரன் கோவில் தெரு,
சங்கராபுரம்,
செஞ்சி,
முதற்பதிப்பு, 2007.

சிவகுமார், இரா., **உதயணகுமார காவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத் தொழில்நுட்பப் பயிலக
வளாகம்,
தரமணி,
சென்னை 600 113.
முதற்பதிப்பு 2012.

சீனி வேங்கடசாமி, மயிலை., **சமணமும் தமிழும்,**
கழகம்,
154, டி.டி.கே.சாலை,
சென்னை – 18,
மூன்றாம் பதிப்பு, 2000.

சீனிச்சாமி, து., **தமிழில் காப்பியக் கொள்கை,**
முதற்பகுதி,
தமிப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு, 1985.

சீனிச்சாமி, து., **தமிழில் காப்பியக் கொள்கை, இரண்டாம் பகுதி,**
தமிப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு, 1994.

சுப்பிரமணியன், ச.வே.,(உ.ஆ.) **பதிணென் கீழ்க்கணக்கு**
மணிவாசகர் பதிப்பகம்,
31. சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2012.

செண்பகம், மா., **தமிழ்க் காப்பியங்கள்,**
சர்போஜி,
மதுரை,
முதற்பதிப்பு, 1977.

சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.) **பரிபாடல்,**
கழகம்,
மறுபதிப்பு, 1964.

சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.)
இராமசாமிப் புலவர், சு.அ. **சூளாமணி (முதற்பாகம்)**
கழகம்,
முதற்பதிப்பு, 1962.

சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.)
இராமசாமிப் புலவர், சு.அ. **சூளாமணி (இரண்டாம் பாகம்)**
கழகம்,
முதற்பதிப்பு, 1962.

சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.) **உதயணகுமார காவியம்**
கழகம்,
முதற்பதிப்பு, 1964.

சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.) **வளையாபதி**
**குண்டலகேசி**
கழகம்,
முதற்பதிப்பு, 1964.

சௌந்தரபாண்டியன், எஸ்., **தமிழில் காப்பியங்கள்,**
ஸ்டார் பிரசுரம்,
72. பெரிய தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை – 55.
முதற்பதிப்பு, 1988.

தமிழண்ணல், **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை 625 001.
ஏழாம் பதிப்பு 1987.
புதுதில்லி,

தன்யகுமார், சிரே.,(ப.ஆ.), **மேருமந்தர புராணம்,**
ஜைன இளைஞர் மன்றம்,
4, மேற்கு போக் சாலை,
தியாகராய நகர்,
சென்னை 600 017,
முதற்பதிப்பு 2014.

துரைசாமி, மு., — **இரட்டைக் காப்பியத்தில் சமணம்,**
நாம் தமிழர் பதிப்பகம்,
4.⁚.7 . ராஜா அனுமந்தா தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005.
முதற்பதிப்பு, 2016.

தேவநேயன், ஞா. — **பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்,**
நேசமணி பதிப்பகம்,
சென்னை
முதற்பதிப்பு, 1966.

தேவநேயன், ஞா., — **தமிழர் திருமணம்,**
திருவள்ளுவர் தவச் சாலை,
திருவளர்குடி (அல்லூர்),
திருச்சிராப்பள்ளி மாவட்டம்,
முதற்பதிப்பு 1997.

நக்கீரர், (உ.ஆ.) — **களவியல் என்ற இறையனார் அகப்பொருள்,**
கழகம்,
மறுபதிப்பு 1960.

நச்சினார்க்கினியர், (உ.ஆ.) — **தொல்காப்பியம்,**
பொருளதிகாரம்,
கழகம்,
மறுபதிப்பு 1969.

பரிமேலழகர், (உ.ஆ.) — **திருக்குறள்,**
கழகம்,
ஒன்பதாம் பதிப்பு, 1953.

பாலசுந்தரம் பிள்ளை, தி.சு., (உ.ஆ.) — **நாலடியார்,**
கழகம்,
மறுபதிப்பு, 1964.

பாலசுப்பிரமணியன், சி. — **தமிழ் இலக்கிய வரலாறு,**
நறுமலர்ப் பதிப்பகம்,
சென்னை 600 029,
பதினெட்டாம் பதிப்பு, 1983.

பாலுசாமி, நா. (ப.ஆ.) — **வாழ்வியற் களஞ்சியம்,**
தொகுதி-10,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்
முதற்பதிப்பு.

பிள்ளை, கே.கே. **தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்,** உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 2008.

புன்னைவனநாத முதலியார்,பு.சி.(உ.ஆ.) **சிறுபஞ்சமூலம்,** கழகம், மறுபதிப்பு. 1960.

பூர்ணசந்திரன் - வீடுர் .(உ.ஆ.) **யசோதரகாவியம்,** சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை. முதற்பதிப்பு 1951.

மகாதேவ முதலியார், வா., **இனியவை நாற்பது,** கழகம், மறுபதிப்பு 1965.

மாணிக்கம், வ.சுப., **சங்க நெறி** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 608 001, தொகை முதற்பதிப்பு, 1987.

மீனாட்சி சுந்தரனார். தெ.பொ., **சம்பந்தரும் சமணரும்,** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 608 001, முதற்பதிப்பு, 2009.

ராகுல் சாங்கிருத்யாயன், **பௌத்த தத்துவ இயல்,** பாவை பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட் சென்னை – 600 014. முதற்பதிப்பு, 1985.

வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம் பிள்ளை, ரா.(உ.ஆ.) **அகநானூறு,** கழகம், மறுபதிப்பு, 1961.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.,(உ.ஆ.) **சிலப்பதிகாரம்,** கழகம், இரண்டாம் பதிப்பு, 1999.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.,(உ.ஆ.) **நானாற்பது,** கழகம் மறுபதிப்பு, 1967.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.,(உ.ஆ.) ஔவை சு.துரைசாமிப் பிள்ளை, **மணிமேகலை,** கழகம், நான்காம் பதிப்பு, 1960.

ஸ்ரீபால், வு.ளு.இ **தமிழகத்தில் ஜைனம்,** ஸ்வஸ்தி ஸ்ரீ ல்'மி சேன பட்டாரக பட்டாசார்ய வர்ய மகாசுவாமிகள் ஜைன மடம், கோலாப்பூர், முதற்பதிப்பு,1975.

ஸ்ரீ108 வி'வே' சாகர் முனிமுகராஜ், **குழந்தை ஞானம்,** ஸ்ரீ1008 மகாவீர் ஜினாலயம், 1. சன்னதி தெரு, வந்தவாசி, முதற்பதிப்பு, 2010.

ஜைன் சாஸ்திரி, எ.எஸ்.,(ப.ஆ. **பகவான் மஹாவீரரும் தீபாவளித் திருநாளும்,** தீபாவளி மலர், மகாவீரர் பரிநிர்வாண ஆண்டு 2545.

# ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்குப் (Ph.D.)
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

அ.உமாராணி
பதிவு எண்: 0975/2014-2015

நெறியாளர்

முனைவர் வி.கிளாட்சன்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை




## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் A+(CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது.)

காரைக்குடி – 630 003.

அக்டோபர் - 2019

# முடிவுரை

**“ஐஞ்சிறு காப்பியங்களில் மகளிர்”** எனும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வில் இயல்தோறும் கண்டறிப்பட்ட முடிபுகள் முடிவுரையாகத் தொகுத்துத்தரப்படுகின்றன.

இந்தியத் தொன்மைச் சமயங்களுள் ஒன்றான சமணசமயம் பற்றிய குறிப்பு வேதங்களில் இடம்பெற்றுள்ளது. சமணசயக் கொள்கை கோட்பாடுகளைத் தீர்த்தங்கரர்களின் வாழ்வியலிலிருந்தும் சமண ஆகமங்களிலிருந்தும் அறியமுடிகிறது. தீர்த்தங்கரர்கள் உரைத்த அறங்களின் மீது பற்றுக் கொண்டவர்கள் **‘ஜீனர்’** எனப்பட்டனர். தமிழில் இதனைச் சமணர் எனக் குறிப்பிட்டனர். தொடக்கத்தில் ஒன்றாக இருந்த சமணசமயம் பிற்காலத்தில் சில பிரிவுகளைக் கொண்டு இயங்கியது. இருப்பினும் அடிப்படைக் கொள்கைகளில் இச்சமயத்தினர் ஒத்த கருத்துடையவர்களாக இருந்தனர்.

இல்லறத்தார்க்கும் துறவிகளுக்கும் தனித்தனியே வாழ்வியல், வழிபாட்டு முறைகளைச் சமணம் வகுத்துள்ளது. சமண சமய இல்லறத்தார் ‘சாவகர்கள்’ எனப்பட்டனர். நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகியன இல்லறத்தார்க்குரிய ‘மும்மணிகள்’ எனச் சமணசமயம் குறிப்பிடுகிறது. இல்லறத்தார்க்குரிய அணுவிரதங்கள், குணவிரதங்கள் குறித்துச் சமண ஆகமங்கள் குறிப்பிட்டுள்ளன. இவை ஆடவர், பெண்டிர் ஆகிய இருதிறத்தார்க்கும் பொதுவானதாகும்.

தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே சமணசமயம் சிறப்புற்று இருந்துள்ளது. சங்க இலக்கியப்பாடல்கள் சிலவற்றிலும் சமணசமயம் குறித்தறியமுடிகிறது. பதினெண்கீழ்க்கணக்கு நீதி நூல்களில் சமணசமயம் மனிதர்களுக்கு வலியுறுத்திய வாழ்வியல் அறங்கள் பல இடம்பெற்றுள்ளன. தமிழ் இலக்கண வளர்ச்சிக்கும் சமணர்கள்

அரும்பணியாற்றியுள்ளனர். திகம்பர சமண சமயம் தமிழகத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்தமையை அவர்தம் படைப்புகள் புலப்படுத்துகின்றன. மகளிரின் வீடுபேறு குறித்த இருவேறு கொள்கைகள் சமணசமயத்தில் உள்ளன.

இல்வாழ்க்கை மகளிர்க்குரிய வாழ்வியல் முறைகளும், தீட்டுக் காலங்களும், வழிபாட்டு முறைகளும் சமண ஆகமங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

பெண்களும் துறவு வாழ்க்கை மேற்கொள்வதைச் சமணம் ஏற்றுக் கொள்கிறது. சமணசமயப் பெண்பாற் துறவிகள் ‘ஆர்யியைகள்’ எனப்பட்டனர். இவர்களைத் தெய்வங்காளகக் கருதிப் போற்றி வழிபட்டமை பிற்காலத் தமிழர்களின் செயலாகும்.

இல்லற வாழ்வில், கணவன் இறப்பிற்குப் பின்னரோ, குறிப்பிட்ட வயதிற்குப் பின்னரோ மகளிர் துறவு வாழ்க்கை மேற்கொள்வதைச் சமணம் ஏற்கிறது.

தமிழ்க்காப்பிய வகைமைகளுள், அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களில் குறைவு உடையதைச் சிறுகாப்பியம் என்ற பெயரில் வழங்கினர். தமிழில் தோன்றிய ஐஞ்சிறு காப்பியங்கள் வடமொழிப் புராணங்களைத் தழுவி இயற்றப்பட்டவையாகும்.

சூளாமணியில் மன்னர்களின் தாய்மார், மனைவியர், மகள்கள், அரசியர் மற்றும் இளவரசியரின் தோழியர், வானவ மகளிர் ஆகியோர் மகளிர் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர்.

நீலகேசி, பௌத்தக் காப்பியமான குண்டலகேசிக் காப்பியத்திற்கு எதிராக எழுந்த சமண சமயத் தருக்க நூலாகும். யசோதர காவியத்தில் அபயமதி, சந்திரமதி, அமிர்தமதி, குணவதி, புட்பாவலி, ஆகிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள அமிர்தமதியைத் தீய ஒழுக்கம் நிறைந்த பெண்ணாகக் காப்பிய ஆசிரியர் படைத்து மகளிர் இயல்புகளை விளக்கியுள்ளார்.

உதயணகுமார காவியத்தில் அறம் கற்பிக்கும் மகளிர், குறிகூறும் மகளிர் குறித்தும், பரத்தையர், நாடக மகளிர் பற்றியும் அறியமுடிகிறது.

ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக எண்ணிக்கையில் மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்ற காப்பியமாக நாககுமார காவியம் திகழ்கிறது ஆடவன் ஒருவன் அதிக எண்ணிக்கையில் பெண்களை மணம் புரிந்தமையை நாககுமார காவியத்தின் வழி அறியமுடிகிறது.

ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களின் பெயர்கள் வடமொழிப் பெயர்களாகவே உள்ளன.

கணவனும் மனைவியுமாகக் கூடி வாழும் இல்லறத்தைச் சமணசமயம் ஏற்கிறது. இல்வாழ்க்கை மேற்கொண்டு வாழும் ஆடவரும் மகளிரும் 'சாவகர்' எனப்பட்டனர். இல்வாழ்வில் நன்மக்களைப் பெறுதலை நீலகேசி ஆசிரியர் போற்றியுள்ளார். இல்லற மகளிரை இக்காப்பிய ஆசிரியர் பத்தினிப் பெண்டிர் எனக் குறிப்பிடுகிறார்.

ஆடவன் முற்பிறவியல் செய்த நல்வினைக்கேற்பவே அவர்க்கு தாய், மனைவி ஆகியோர் அமைவர் என்ற கருத்து யசோதர காவியத்தில் இடம்பெற்றுள்ளது.

மகளிர் திருமண முறைகள் குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. அரசகுல மகளிர், திருமணத்தில் பல்வேறு சீதனங்களை அளிக்கும் மரபு பண்டைக் காலத்தில் இருந்துள்ளது.

கருவுற்ற மகளிர் ஆசையை நிறைவேற்றும் வழக்கத்தையும் பெண்குழந்தைக்குச் சாதகக் குறிப்பெழுதும் வழக்கத்தையும் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

இல்லற வாழ்வில் தாய்மார் பண்புகள், குழந்தைப்பேறற்ற மகளிர் நிலை, மாமியார்-மருமகளின் அன்பு நிறைந்த இல்வாழ்க்கை முறை ஆகியன குறித்தும் ஐஞ்சிறு காப்பியங்கள் குறிப்பிட்டுள்ளன.

கணவனை விடுத்துப் பிற ஆடவரை விரும்பிப் புணர்தல், கொலைசெய்தல் ஆகிய பிறழ்நடத்தை கொண்ட பெண்ணொருத்தியின் செயல்களை யசோதர காவியம் விளக்கியுள்ளது. இத்தகைய தீய ஒழுக்கம் கொண்ட மகளிர் அடையும் நரகத் துன்பங்கள் இக்காப்பியத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

இல்வாழ் மகளிரின் அருகக்கடவுள் வழிபாடு குறித்தும், பிற தெய்வ வழிபாடு, விளையாடல்கள், அணிகலன்கள், ஒப்பனை முறைகள் ஆகியன குறித்து ஐஞ்சிறு காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன.

அரண்மனைக் காவல், தூதுவர்க்குப் பணிவிடை செய்தல், ஓவியம் வரைதல் ஆகிய பணிகளை மகளிர் ஆற்றியுள்ளனர் கணவன் இறப்பிற்குப் பின்னர் உயிர்துறக்கும் மகளிர் செயலைச் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது.

உடலின் நிலையாமையை எடுத்துரைத்து, உற்ற காலத்தில் நோன்பியற்றி உயிர்துறத்தல் நன்று என்பதைச் சமண சமயத்தின் அனைத்துப் பிரிவுகளும் குறிப்பிட்டுள்ளன.

மகளிர்க்குச் சமகாலப் பிறவியில் வீடுபேறு இல்லை என்பது திகம்பர சமணசமயத்தார் கொள்கையாகும். ஆனால் சமணசமயத்தின் பிரிவுகளில் சில இக்கருத்தை ஏற்கவில்லை.

துன்பமிக்க பெண்பிறவியை ஒழிப்பதற்கு ஆற்ற வேண்டிய நோன்புகள் குறித்துச் சூளாமணி வாயிலாக அறியமுடிகிறது. ஐஞ்சிறு காப்பியத்தில் துறவறம் பூண்டு சமயக் கொள்கைகளைப் பரப்பிய மகளிராக நீலகேசியும் குண்டலகேசியும் இடம்பெற்றுள்ளனர்.

சல்லேகனை என்ற உண்ணா நோன்பு குறித்த செய்திகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. அரசகுல மகளிர் தம் கணவரைப் பின்பற்றிச் சல்லேகனை நோன்பியற்றி வீடுபேறு அடைந்தமையை ஐஞ்சிறு காப்பியங்கள் எடுத்துரைத்துள்ளன. சக்ரவாள நோன்பின் சிறப்பினைச்

சூளாமணிக் காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. மகளிர் இந்நோன்பினை மேற்கொள்ள வேண்டிய முறைமைகள் குறித்து இக்காப்பியம் விளக்கியுள்ளது.

மகளிரின் கைம்மை ஒழுக்கத்தைச் சமணசமயம் ஏற்கவில்லை. சமணசமயம் சார்ந்த மகளிர் இவ்வொழுக்கம் மேற்கொண்டமை குறித்த பதிவுகள் ஐஞ்சிறு காப்பியங்களில் இல்லை.

கணவனுடன் இணைந்து மகளிர் நோற்கும் பஞ்சமி நோன்பு குறித்த செய்திகளை நாககுமார காவியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இந்நோன்பினால் மறுபிறவியில் நற்பிறப்பு அடையலாம் என்ற கருத்தைக் காப்பிய ஆசிரியர் விளக்கியுள்ளார்.

ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள பெரும்பான்மையான மகளிர் பாத்திரங்கள் சமண வழிபாட்டு முறைகளைப் பின்பற்றியவர்களாகப் படைக்கப்பட்டுள்ளன. ‘சல்லேகனை’ நோன்பு சமணசமயத்தார் ஒழுக்கங்களில் முதன்மையான ஒன்றாகும். ஐஞ்சிறு காப்பியங்களில் இடம்பெற்றுள்ள பயாபதி மன்னனின் மனைவியர், உதயணகுமார மன்னனின் மனைவியர், சயந்தர மன்னனின் மனைவியும் நாககுமாரனின் தாயுமான பிரிதிதேவி, நாககுமாரனின் மனைவியர் ஆகியோர் ‘சல்லேகனை’ நோன்பியற்றி வீடுபேறு அடைகின்றனர். இம்மகளிர் சமணசமயக் கொள்கைகளுக்கும் ஒழுக்க நெறிகளுக்கும் உட்பட்டவர்களாக விளங்கியுள்ளனர். காப்பியத்தின் துணைமைப் பாத்திரங்கள் வாயிலாகவும் சமணக் கொள்கைகள் விளக்கப்பட்டுள்ளன.

## மேலாய்வுக் களங்கள்

இவ்வாய்வின் தொடர்ச்சியாகப் பின்வரும் தலைப்புகளில் எதிர்கால ஆய்வுகள் அமையலாம்.

1. ஐஞ்சிறு காப்பியங்களில் சமணக் கொள்கைகள்
2. ஐஞ்சிறு காப்பியங்கள் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள்
3. சமயதிவாகர முனிவரின் காப்பிய உரைத்திறன்
4. ஐஞ்சிறு காப்பியத்தில் இயற்கைப் புனைவுகள்
5. ஐஞ்சிறு காப்பியங்களில் சமயப் போராட்டங்கள்